ஸ்ரீ வால்மீகிமகரிஷியி னருளப்பெற்ற

ஸ்ரீ ஞானவாசிட்ட மென்னும்

# பிருஹத் யோகவாசிட்ட

# மகாராமாயண வசனம்

இஃது

நிரஞ்சனசாது ஸ்ரீராமப்பிரசாதஜீ அவர்களின்
ஹிந்தி பாஷா மொழிபெயர்ப்பையும் ஸ்ரீடாகூர் பிரசாத
சர்மாசாரியர் அவர்களது உரையையும் அநுசரித்தும்
சம்ஸ்கிருத மூலத்தைத் தழுவியும்

தஞ்சைமாநகரம்

ஸ்ரீ பிரஹ்மநிஷ்ட பண்டித

வி. குப்புஸ்வாமி மகாராஜ் அவர்களின்

மாணுக்கர்களி லொருவராகிய

ஸ்ரீ-ல-ஸ்ரீ ராம. வீராசாமிராஜு அவர்களால்

தமிழில் மொழிபெயர்க்கப்பெற்று

தஞ்சை

S. P. G. H. ஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
பிரஹ்மஸ்ரீ ஆ. சேதுராம பாரதியாரவர்களால்
பரிசோதிக்கப்பெற்று

தூத்துக்குடி

மெஸ்ஸர்ஸ் ரா. மா. கம்பேனியாரின் சகாயத்தால்

தஞ்சை

ஸ்ரீ வித்தியா விநோதினி அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

 1918. [விலை ரூ. 2.

18-5

SRI

# Gnana Vasishta

OR

# Brihat Yogavasishta

# MAHA RAMAYANA

OF

# VALMIKI






TRANSLATED INTO TAMIL

BY

R. M. VEERASAMY RAJU GAROO

OF TANJORE,

Following the Sanskrit Text & Hindi Translation
of Niranjana Sadhu Sri Ramaprasadji and
the Translation and Commentary of
Takore Prasad Sharmacharya.

---


SHRI VIDYA VINODINI PRESS

TANJORE.

---

1918. [*Price Rs. 2.*




# Sri Brihat Yogavasishta . . .
# . . . . . Maha Ramayana.

## ஸ்ரீ பிருஹத் யோகவாசிட்ட - - -
## - - - - - - மகாராமாயணம்.



### Part I—VAIRAGYAPRAKARANAM.

### முதற்பாகம்—வைராக்கியபிரகரணம்,



Sri Sankara Vilas
Sarada Mandir
TANJORE.






ஸ்ரீ

# முகவுரை.

ஸ்ரீ யோகவாசிட்ட மெனப் பெயரிய இந்த நூலை ஆதி மகாகவி ஸ்ரீவால்மீகி மகரிஷியானவர் தேவவாணியாகிய சம்ஸ்கிருத பாஷையில் சுலோகவடிவமாக மிக்க மேன்மையான கிரமத்தா லியற்றி யருளினர். இதில் செய்யுட்பொருத் தங்கள் யாவும் காவியரீதியாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இதிற் பிரசங்கா நுசாரமாக * ஒன்பது ரசங்கள் காட்டப் பட்டிருக்கினும் முக்கியமாகச் சாந்திரசமானது நேராகவே உருவெடுத்து வெளிவந்ததோ வென்று ஆச்சரியப்படும்படி அமைந்திருக்கின்றது. உபமாநம் உத்பிரேக்ஷை (கற்பனை) முதலான அலங்காரங்களுக் கிது ஒரு பொக்கிஷமாம். அதிகமாகச் சொல்வதாலென்ன? இந்த ரிஷீசுவரர் காவிய முதலான கலைகளை அநுபவிக்க வெண்ணுவோருக்கு ஒருசகடமா (வண்டியா)க வமைத்துள்ளா ரென்னும்படி இது இருக்கின்றது. ஆதலின் இவரது கவியை யநுசரித்தே இற்றை வரையில் சகல கவிவாணர்களும் தமது நூல்களைச் செய்திருக்கின்றனர். பிற்காலத்திற் றோன்றிய பாணகவி முதலான ஆஸ்திகர்கள் காதம்பரி முதலான நூல்களைச் செய்து அவற்றின்கண் நாம் இதுவரையில் எங்கும் கண்டதில்லை யென்னும்படியாக அநேக நூதன கற்பனையுக்திகளைப் பொருத்தியுள்ளாராயினும், ஸ்ரீபகவான் வால்மீகி மகரிஷியையே இவ்வெல்லா மேன்மையு மடைவனவாகும்.

---

* சிருங்காரம், ஹாஸ்யம், கருணை, அற்புதம், வீரம், பயாநகம், சாந்தி, ரௌத்ரம், பீபத்ஸம் என்பன நவரசங்கள்.

ஏனெனின் வால்மீகரே சர்வக்கிரமங்களையும் வெளிப்படுத்தி யுள்ளார். அவற்றை யநுசரித்தே சகல கவீசுவரர்களும் தங்கள் தங்கள் புத்திக் கியைந்தபடி நூல்களை யமைத்திருக் கின்றனர். இவரது நூல்களில் அதிகமாகக் காணப்படும் கற்பனையுக்திகள் ஒவ்வொன்றும் ஸ்ரீ வால்மீகியது நூலில் இலேசாம்சமாகவேனும் காணக்கூடியதேயாகும். ஆகலின் இவரது நூலே இவ்வாற்றான் சகலநூற்களுக்கும் முதற் காரணமாதல் பற்றி எல்லாருடைய நூற்களினும் மேன்மை யானதாகும்.

இந்நூலில் ஆரம்பமுதல் அந்தம்வரையில் வேதங் களின் முடிவான உபநிஷதர்த்தத்தைச் சித்தாந்தமாக வமைத்திருத்தலால் இதற்குச் சமமாக வேறெந்த நூல்களு மில்லை. மேலும்சிரவணம்செய்பவர்களுக்கு அத்வைதஞானத் தைத் தடையின்றி யுண்டாக்குமென்னும் வரத்தைச் சகல ரிஷிகளிடத்திலும் அடைந்திருப்பதால் இதுவே மோக்ஷத் திற்கு ஒப்பற்ற சாதநமாம். ஆதலால் இதற்கு முமுக்ஷுத் துவமு(மோக்ஷயிச்சையு)ள்ள ஜீவன் அதிகாரியாவன். ஜீவப்பிரஹ்ம வைக்கியம் விஷயமாம். பிரதிபாத்தியப் (சொல்லப்படுவது)பிரதிபாதக(சொல்வது) முதலியன சம் பந்தமாம். சர்வதுக்கநிவர்த்தியும் பரமாநந்தப்பிராப் தியுமே பிரயோஜநமாம். இந்நூலில் வேதாந்தப் † பிரக் கிரியைகள் நியமமாகக் காணப்படா திருப்பினும் சகலப் பிரக்கிரியைகளும் இதில் எளிதி லுணருதற் பொருட்டு சமா வேசமடைந்து இருக்கின்றன. இந்நூல் கேவல வேதாந்தசித் தாந்தவடிவினதாதலால் இதில் திருஷ்டிசிருஷ்டிவாதமும் அஜாதவாதமுமே காணற்பாலனவாகும்.

---

† அத்வைதத்தைப் போதிக்கும் யாதேனும் ஓர் பிரகாரம்.

ஆயினும் முதலாவதான வைராக்கியப்பிரகரணத்தி லும் இரண்டாவதான முமுக்ஷுப்பிரகரணத்திலும் வைராக் கியமும் முமுக்ஷுத்துவமுமே திடமாகக் கூறப்பட்டிருக் கின்றன வென்ற போதிலும் இவற்றில் உள்ளீடாகவும் முற் கூறிய இரண்டு வாதங்களின் பிரபலத்தன்மை யிருக்கின் றது. ஏனைய நான்கு பிரகரணங்களிலும் வேறுவகைகளொ ன்றுமேயில்லாது கேவலம் பிரஹ்மத்தில் மாயையாலாகிய பதார்த்தங்களின் அத்தியந்தாபாவமே (முற்றுமின்மையே) காட்டப்பட்டிருக்கின்றது. அவற்றுள்ளும் நிர்வாணப்பிரகர ணத்தில் அநேக இதிகாசங்களைக் கொண்டு ஜகத்தை சொப் பனம்போலவே வர்ணித்திருக்கின்றது. அது பிரியத் தோடு கேட்பதாலும் கற்றலாலும் நன்றாய் அறியத்தக்க தாகும். சொப்பனபதார்த்தங்கள் அற்பகாலமே யிருப்பன; ஜாக்கிரதபதார்த்தங்களோ நீண்டகால மிருப்பன. ஆகலின் சொப்பனத்தைப் போன்று ஜாக்கிரத்திற்குச் சம்பவம் இன்று எனிலோ அப்பொழுதும் இரண்டு பதார்த்தங்களும் மாயையினின் றுண்டாயினவாகலின் இரண்டற்கும் சாதிரு சியத்தன்மை ஏற்பட்டிருக்கின்றது. இத்தகைய அநேக யுக்திகளால் இரண்டற்கும் சமானத்தன்மை ஏற்படு கின்றது. மேலும் பிரஹ்மத்தினிடத்தில் மூன்றுகாலமும் சிருஷ்டியாகவில்லை என்றிங்ஙனம் அநேக யுக்திகளால் வேதங்களின் அந்தபாகமான ஞானகாண்டத்தின் சித்தாந்தங்களைக் கடைந்தெடுத்துத் திருஷ்டாந்தத்தால் காட்டப்பட்டிருக்கின்றது.

இந்நூல் சம்ஸ்கிருதபாஷையிலிருத்தலால் பலருக்கும் உபயோகமாகாமை கண்டு ஹிந்துஸ்தான் பாஷையில் வியாக் கியானம் செய்யப்பட்டிருக்கின்றது. மேலும் பஞ்சாபிதேசத்

தில் பட்டியாலா வென்னும் பட்டணத்தைச் சுமார் நூறு வருடங்களுக்கு முன் னுண்டுவந்த சாஹேப் சிம் ஹனென்னும் அரசனது தங்கைகளாகிய இரண்டு அமங்கலிகள் அத்வைதத்தில் நிஷ்டையுள்ளவர்களாய் வேதாந்த சிரவணம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் நிரஞ்சன சாதுவாகிய ஸ்ரீ ராமப்பிரசாதர் மூலமாக இந்நூலைச் செவ்வையாக முடிவுவரையில் கேட்டதால் அவர்களுக்கு அத்வைதஞானத்தில் நல்லப் பிரஞ்ஞை யுண்டானது. அப்பொழுது ஒரு நாள் தங்கை தமக்கைக ளிருவரும் ஆலோசித்து இந்நூல் ச்ம்ஸ்கிருதமானதால் சகலருக்கும் உபயோகமாகிறதில்லை. இதற்கு பாஷையில் ஓர் மொழிபெயர்ப்பிருந்தால் சாமானியர்களுக்கும் உபயோகமாகும். ஆனதால் இதனை இச்சாது மூலமாக மொழிபெயர்த்துவைக்கவேண்டு மென்று தீர்மானித்து அந்தச் சாதுவைப் பிரார்த்திக்க அவ்ரும் அவ்வாறே இந்நூலை யாரம்பித்து முடித்தனர். இந்த விதமாக சம்பூர்ணக் கிரந்தமும் பஞ்சாபிகலந்த ஹிந்துஸ்தான் பாஷையில் எழுதி முடிந்தது. இதினின்றும் பல பிரதிகள் காலக்கிரமத்தால் ஹிந்துஸ்தான் தேசமெங்கும் பரவியன.

ஒப்புவமை யில்லாத இந்நூலை எந்த மஹாராஜனது தங்கைகள் முயற்சித்து பாஷையிற் கொண்டுவந்து சாதாரண ஜீவர்களுக்கும் உபகாரமாகும்படிச் செய்தார்களோ அவர்கள்யாவராலும் வந்திக்கப்படுபவரே யாவர். இத்தகைய அருமை வாய்ந்த பெரிய நூல் இதுகாறும் தமிழ்ப் பாஷையில் வெளிவாரதது கண்டு ஸ்ரீ பிரஹ்மநிஷ்ட பண்டித வி. குப்புஸ்வாமிமஹாராஜரவர்கள் மாணுக்கர்களில் ஒருவனுகிய யான் ஷெ சுவாமிகளின் திருவருட்பிரசாத வல்லமையைக் கொண்டு முற்கூறிய நூல்களையும் டாகூர் பிரசாத சர்

மாசாரியர் சம்ஸ்கிருதத்திற்கு அமைத்த உரையையும் தழுவித் தமிழில் வசனவடிவாக ஓர் மொழிபெயர்ப்புச் செய்யத் துணிந்தேன். இதில் புத்திமயக்கத்தால் தவறுதல்க ளமைந்திருப்பின் சாதுக்கள் "குணநாடிக் குற்றமுநாடி யவற்றுண் மிகைநாடி மிக்க கொளல்" என்பதை யநுசரித்து மிக்க தயவோடு எடுத்துக்காட்டுவார்களாயின் அவற்றை யான் எனது உண்மையான வந்தநத்துட னங்கிகரித்து மறுபதிப்பிற் சேர்த்துக்கொள்வேனாகவும்.

ராம. வீராஸாமிராஜா.

தஞ்சாவூர்.



உ

# சிறப்புப்பாயிரம்.

தஞ்சை கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல்
சம்ஸ்கிருத பண்டிதர்
பிரஹ்மஸ்ரீ
S. சுப்பிரமணியசாஸ்திரிகளியற்றியன.

[illegible] -
[illegible] ஶாஸ்த்ரோபதேஶே ।
[illegible] -
[illegible] ஜயதி ॥ ௧ ॥

[illegible] -
[illegible] ।
[illegible]
[illegible] ஜயதி ॥ ௨ ॥

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ஜயதி ॥ ௩ ॥

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥ ௪ ॥

இதி
[illegible] ஶாஸ்த்ரீ.

இது
மேலைச்சிவபுரி சன்மார்க்கசபை
ஸ்ரீ கணேசர்செந்தமிழ்க்கலா சாலையெனப் பெயரிய
தனித்தமிழ் உயர்தரக்கலாசாலைத்
தலைமைப்போதகாசிரியர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ கந்தசாமியாரவர்கள்
இயற்றியது.



## நிலைமண்டிலவாசிரியப்பா.

திருமக டழீஇய குருநிற மேய
நெடியோ னன்ன கடிபொழில் வளைஇய
தண்ணடை சிலச்சில விண்ணிடைச் சேடியோத்
தாருமை யாப்பச் சீருறத் தழுவிய
ஏனாட் டரும்புகழ் சோணாட் டகத்துறும்
அவந்தரு புலப்பகை நவந்தரு கந்தழி
உள்ளி யொரீஇய தெள்ளிய மெய்யர்
தஞ்சமென் றடைதரு தஞ்சையம் பதியான்
பரம ஹம்ச பரிவி ராஜக
மறுவிலா தொளிரும் பரிவிராட் டென்ன
இப்புவி யெல்லா மெய்ப்பட நாடிச்
சொற்றிடப் பெருமை துற்றிடு தவஞ்சார்
குப்பு சாமித் திப்பிய குரவன்
பாத சேகரன் பூதிகண் டிகையே

பொருளென வெண்ணித் தெருளுற வணியும்
புனிதன் சிவகதை நனிமிகு மவையிடைக்
கல்லும் புல்லுஞ் செல்லு முருட்டுப்
பாவ காரிகள் தீவழிப் படரும்
உள்ளமு முருக விள்ளுறுஞ் சுகுண
வீரா சாமிப் பேரார் புலவன்
சகத்தியல் பெல்லா மகத்திடை யுன்னி
மசரத மெனவிடு தசரத குமாற்கு
மடனறச் செய்யும் வடமொழி யதனில்
வான்மீ கம்முனி தானீந் தருளிய
யோகவா சிட்டச் சேகறு நூலை
எஞ்சாப் பெரும்புகழ்ப் பஞ்சாப் பரையன்
தங்கைய ராகிய மங்கையர் குழுமி
நந்தலில் புகழ்செறி இந்தியில் மொழிபெயர்த்
தருளென வேண்டத் தெருளுறு நிரஞ்சன
சாதுரா மப்பெயர் சாதுஜீ என்பவர்
மொழிபெயர்த் தருளிய விழுமிய வதனை
மகத்துவ மிகுத்த வகத்திய முனிவன்
அருளிய பெருமை மருவிய தமிழில்
மொழிபெயர்த் தருளென, பழிதபு மான்றோர்
இத்தரை மகிழக் கத்திய ரூபமா
மொழிபெயர்த் தருளி விழுமிய வச்சில்
ஏற்றுவித் தனனிவ னென்றும் வாழியவென.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ரு | கஅ | முண்ட | முண்டா |
| கூ | ககூ | சமயம | சமயம் |
| க௰ | உ௰ | தேசத்திினைத | தேசத்தினைத் |
| கரு | உக | மாந்து | மார்ந்து |
| ,, | க௰ | வடிவினதான | வடிவினதானது |
| ,, | கக | ஷெ | ஷெ |
| ,, | கஅ | ஒருசமயம்மேருபர்வத | மேருபர்வத |
| உஅ | உக | வாரங் | வாரங்க |
| ஙஉ | ரு | விகிப்படி | விதிப்படி |
| ஙரு | உஎ | மிருச்கும் | மிருக்கும் |
| ச௰ | சஅ | தானமாகத் | தானமாகக் |
| சக | கங | வணண | வண்ண |
| சஉ | ச | ஆற்றஇன்று | ஆற்றல் இன்று |
| ,, | கங | பஷ்ப | புஷ்ப |
| ,, | சஅ | பார்த்த | பார்த்ததே |
| ருக | உ௰ | கிரிகை | கிரியை |
| ருஉ | உங | களையந் | களையும் |
| ருங | உக | சிறீர்க | கிறீர்க |
| ருரு | ரு | சுகத்கை | சுகத்தை |
| சா௰ | எ | தம்முடய | தம்முடைய |
| சாஉ | ரு | மிகச்ம்பீ | மிகககம்பீ |
| சாங | கங | திருக்சின் | திருக்கின் |
| எக | உங | சாதறிய | சாத்திய |
| எஉ | க | ளருப்ள | ளருளப் |
| அச | உஉ | நிம்ரந்து | நிமிர்ந்து |
| க௱ | உக | குத் | இதற்குத் |
| க௱எ | உ௰ | களும் | ருக்கங்களும் |
| க௱கூ | உக | மானங்ளே | மானங்களை |
| ,, | உச | எவனக்கு | எவனுக்கு |
| கஉக | கூ | சங்சார | சம்சார |
| கஉஉ | ககூ | கின்ருன் | ருன் |
| கஙஉ | உ௰ | சாருகின்றது | சாருகின்றன |
| கஙங | ச | எப்படிவெறி | வெறி |

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கரு௪ | க0 | நிரை | நிறை |
| கருரு | எ | எதைத்க் | எதைக் |
| ,, | ௪அ | விருக்ஷங் | விருக்ஷங்க |
| க௪உ | உரு | புருஷர்களும் அவர்களே | புருஷர்களெவர்களோ |
| கருக | கஉ | நிரைந்த | நிறைந்த |
| கருஎ | கரு | கெடுகின்றன | கெடுகின்றது |
| ,, | க௪ | முண்டாகின்றன | முண்டாகின்றது |
| ,, | உரு | சறியது | காியது |
| கசுஅ | உ0 | எப்பொழும் | எப்பொழுதும் |
| களஉ | உரு | ஜகத்விபாகவர்ணனம் | ஜகத்விபர்யயவர்ணனம் |
| களசு | உ௪ | எப்பதாத்த | எப்பதார்த்த |
| கஅ0 | ௪ | கனக்கு | தனக்கு |
| கஅக | உக | விஷவடிவ | விஷயவடிவ |
| உருஎ | கரு | வரும்போ | வரும்பொ |
| உருஅ | சு | வர்ணனமே | வர்ணனமெ |

சிவமயம்.



சிருங்ககிரி
ஸ்ரீமத பிநவ வித்யா தீர்த்த
பாரதீ யதீந்திர சுவாமிகள்.

உ

ஓம் தத்ஸத்.

ஸ்ரீ மன் மஹாகணபதயே நம:

ஸ்ரீ பரமாத்மனே நம:

# ஸ்ரீ யோகவாசிட்டம்.

## காப்பு.

—·····⚘·····—

### ஆசாபூரககணபதி துதி.

அருமறையா றங்கமுமா யனைத்தினுக்குந் தனிமுதலா * யகத் தாற் றோன்றுங் † கருவறைநீத் தருள்கிரணக் கதிரொளியாய்க் கணேசவெனக் கழறு வோர்க்குப்; பெருமைதரு சித்திபுத்திப் பெண் மணியோ டருள்ஞானப் பிரகா சச் சற்; குருவடிவாய் விளங்காசா பூரகரை யுளத்தமைத்துக் குறைக டீர்ப்பாம்.

### நாமகள் துதி.

பிரணவ வடிவாய்ச் சப்தப் பிரஹ்மமாய் நின்று நாதப்
பிரணவத் தொலிசெய் வீணை பிடித்தபூங் கரத்தா டன்னைப்
* பிரணமித் தானும் மாலும் பிரமா தியரு மேத்தி
‡ அரணெனக் கொளும்பதத்தை யகத்திற்கொண் †. டகத்தை
[வெல்வாம்.

### குருபாம்பரை.

விஷ்ணுவிதி வசிஷ்டரையும் விமலகன ராமரையும் வேதமோதுஞ்
சிஷ்டகுரு சமர்த்தரையுஞ் சீர்மிகு கல்யாணரையுந் திகழ்தத்தாத்ரிக்
கிஷ்டராகவ தாதாபாபா ஸ்ரீராமசந்திர ரென்னும் பிரஹ்ம
நிஷ்ட குருவிஷ்ணுவென நின்ற குப்புச்சாமியையும் நெஞ்சுள்
[வைப்பாம்.

---

* அகம்=மனம். † கரு=கருப்பம்.

* பிரணமித்து=நமஸ்கரித்து. ‡ அகம்=பாபம். † அரண்= காவல்.

## ஆசாரியர் துதி.

† மங்கலவடிவாய் ஞான வாரிதி மதியாய் மாயா
* மங்கலை யகற்றும்பாது மானிட வடிவாய் வந்த
§ மங்கல விஷ்ணுராஜ மகாராஜரடியன் புந்தி
‡ மங்கல மேத்தநாளும் மலரடி மனத்துட் கொள்வாம்.

## ஸ்ரீ ராமச்சந்திரர் துதி.

இன்பவுரு ராமனென வெழுந்தகர விசுவனிலக்குவனோடும் மிக்
கன்புருவு காரசத்ரு கனதேஜன் பிராஞ்ஞ மகாரத்த னோடும் [தி
பொன்பெருகுப் பிரகிருதிச் சீதையொடும் போற்றுபவர் புந்திதோன்
என்புருகத் தித்திக்கு மெங்குநிறை பிரணவத்தை யேத்தல் செய்வாம்.

## ஆஞ்சநேயர் துதி.

அஞ்சனைக் குதித்துஞாயி றருங்கனி யெனக்கொ டன்னைச்
சஞ்சலந் தவிர்த்தி ராமர் தம்பிய ரிலக்குவற்குச்
சஞ்சிவி யளித்த வீரமைச் சங்கட மொழித்தி லங்கை
வஞ்சரி லெரித்தெம் மையன் மலர்ப்பதந் துதிப்பார் காக்க.

## ஸ்ரீசற்குரு துதி.

இப்புவிக் கிருப்பு மாகி யெங்கணு நிறைந்த தாகிச்
செப்புதற் கெட்டா தாகிச் சிற்கன நந்த மான
குப்புசா மியின்பொற் பாதம் குளிரவென் னுளத்திருத்திச்
செப்புவன் றமிழில் ராமன் செய்கைகள் தெரியு மாறே.

---

† மங்கலம்=சிவன், * மங்கல்=தோற்றத்துறைவு, § மங்கலம்=பொலிவு, ‡ மங்கலம்=வாழ்த்து.



உ

ஸ்ரீ ஞானவாசிட்டமென்னும்

# பிருஹத் ஸ்ரீ யோகவாசிட்ட

# மகாராமாயணம்.




---

## வைராக்கியப் பிரகரணம்.

### மங்கலாசரணம்.

எதிலிருந்தும் சகலபூதங்களு முண்டாய் நிலைக்கின்றனவோ, எதனிடத்துச் சகலமும் ஒடுங்குகின்றனவோ அப்படிப்பட்ட சத்தியமாகிய ஆத்மாவிற்கு நமஸ்காரம்.

ஞாதாவும் ஞானமும் ஞேயமும், திருஷ்டாவும் தரிசனமும் திருசியமும், கர்த்தாவும் காரணமும் கிரியையும் எதனுற் சித்திக்கின்றனவோ அப்படிப்பட்ட ஞான (சித்) வடிவமாகிய ஆத்மாவிற்கு நமஸ்காரம்.

எந்த ஆநந்தசமுத்திரத்தினின்றும் துளிகள் விண்ணிலும் (தேவர்களிடத்தும்) மண்ணிலும் (மனிதர்முதலிய ஜீவர்களிடத்தும்) எழும்புகின்றனவோ, எதனுல் சகலரும் ஜீவிக்கிறூர்களோ அப்படிப்பட்ட ஆநந்தவடிவமாகிய ஆத்மாவிற்கு நமஸ்காரம்.

## நூல்வரலாறு.

சுதிக்ஷ்ணரென்று ஓர் பிராமணரிருந்தார். அவரது மனதில் ஒரு சந்தேகமுண்டாயிற்று. அதை நிவர்த்தித்துக் கொள்ளும்பொருட்டு அகஸ்தியமுனிவரது ஆசிரமத்திற்குச் சென்று ஆதரவுடன் அகஸ்தியமுநிவரைக் கேட்டார்.

சுதிக்ஷ்ணர் கேட்கிறார்:—ஓ! பகவானே! சகலதத்துவங்களையு முணர்ந்தவரே! சகலசாஸ்திரங்களையும் அறிந்தவரே! எனக்கு ஒரு பெரிய சந்தேகமிருக்கிறது. அதைத் தாம் கிருபைசெய்து நிவர்த்திக்கவேண்டும். மோக்ஷத்திற்குக் காரணமாகிய மோக்ஷசாதனம் கர்மமா அல்லது ஞானமா? அல்லது இரண்டுமா? இவற்றுள் ஒன்றை நிச்சயித்துச் சொல்லுவீர்களாக.

அகஸ்தியர் சொல்லுகிறார்:—ஓ! பிராஹ்மணரே! கர்மமாத்திரத்தினாலும் அல்லது ஞானமாத்திரத்தாலும் மோக்ஷமுண்டாகாது. எப்படிப் பக்ஷி இரண்டு இறகுகளினாலுமே ஆகாயத்தில் பறக்கிறதோ அதுபோல கர்மம் ஞானமென்னு மிரண்டினாலுமே பரமபதம் சித்திக்கிறது. அதாவது * கர்மத்தினால் முதலில் சித்தசுத்தி யுண்டாகின்றது; அதன்பின் ஞானமுண்டாகின்றது; அப்போது மோக்ஷம் சித்திக்கின்றது. ஆகையால் கர்மம் ஞானமென்னு † மிரண்

* கர்மமென்றது நிஷ்காமிய கர்மத்தினையாம்.

† இரண்டும் ஒருங்கே மோக்ஷ சாதனங்களா மென்பதிலுண்டாகும் சங்கை சமாதானங்களுக்கு ஸ்ரீ ராமர் இலக்ஷ்மணருக் குபதேசிக்கும் கிரமத்தாலுள்ள ஸ்ரீ ராம கீதையினைப் பார்க்க.

டுமே மோக்ஷசாதனமாம். இவ்விஷயத்தில் பழைமையாகிய ஓர் கதையிருக்கின்றது. அதைச் சொல்லுகிறேன் கேட்பீராக:—

அக்கினிவேச ரென்பவருக்குக் காருண்யரென்று ஒரு புத்திரரிருந்தார். அவர் குருவினிடத்துச்சென்று ஆறங்கங்களுடன் நான்கு வேதங்களையும் அத்தியயனஞ் செய்து வீட்டிற்கு வந்தார். சம்சய முள்ளவராய்க் கருமங்களைச் செய்யாது சும்மா விருந்தார். அப்போது பிதாவானவர் நிந்திக்கத்தக்கவனுய் கர்மங்களை விட்டிருக்கும் தனது புத்திரனைப் பார்த்து அவனது இதத்தின்பொருட்டுச் சொல்லுகின்றார்.

அக்கினிவேசர் வாக்கியம்:—ஓ! புத்திரனே! உனது கர்மத்தை ஏன் பாலனஞ் செய்யாதிருக்கின்றாய்? கர்மத்தைச் செய்யாதிருத்தலால் நீ எப்படி சித்தியை யடைவாய்? நீ கர்மத்தை விட்டிருத்தற்குக் காரணம் யாது? அதைச் சொல்லுவாயாக.

காருண்யர் சொல்லுகின்றார்:—தந்தையே! எனக்கோர் சம்சய முண்டாயிருக்கின்றது. அதனுல் யான் கர்மமின்றியவனுகச் சும்மாவிருக்கின்றேன். அதைக் கேட்பீராக: வேதத்தில் ஓரிடத்து "எதுவரையில் இவன் ஜீவித்திருக்கின்றானே அதுவரையிற் கருமங்களைச் செய்யவேண்டும்" என்றும், "அக்னிஹோத்திர முதலானகருமங்களை விடலாகாது" என்றும் கூறியிருக்கின்றது. மற்றோரிடத்து "தனத்தினுலும் மோக்ஷமுண்டாகாது; கர்மத்தினுலும் மோக்ஷமுண்டாகாது; புத்திராதிகளாலும் மோக்ஷமுண்டாகாது; கேவலத்தியாகத்தி(சந்நியாசத்தி)னுலே மோக்ஷமுண்டாகிற" தென்றும் கூறியிருக்கின்றது. இவ்விரண்டில் எனக்

கெது தகுதியான தென்னும் சம்சயமிருக்கின்றது. ஆதலால் தாம் கிருபைசெய்து நான் செய்யத்தக்கதின்னதென்பதைத் தெரிவிப்பீர்.

அகஸ்தியர் கூறுகின்றார் :—ஓ சுதீக்ஷணரே! இவ்வாறு காருண்யர் தெரிவித்தபோது தந்தையாகிய அக்கினிவேசர் கூறலாயினர்

அக்கினிவேசர் வாக்கியம் :—ஓ புத்திரனே! முன்னடந்த ஓர்கதையை என்னிடம் கேட்டு அதை ஹிருதயத்தில் தாரணைசெய்து பிறகு உனக் கெதி லிச்சை யிருக்கின்றதோ அதைச் செய்வாய்.

அதாவது :—

சுருசியென்னும் பெயருள்ள ஒரு அப்ஸரசு (தெய்வப்பெண்) இருந்தாள். அவள் (தேவலோகத்தில்) எவ்வளவு அப்ஸரசுகளுண்டோ அவர்களில் உத்தமமானவள். அவள் ஒரு சமயம ஹிமாலயபர்வதச் சிகரத்தில் வீற்றிருந்தாள். அவ்விமாலய மெப்படிப்பட்ட தெனின், காமத்தினால் தாபமடைந்த ஹிருதயத்தினையுடைய தேவகணங்களும் கின்னர கணங்களும் அம்மலையில் அப்ஸரசுக்களோடு கிரீடைசெய்கின்றார்கள். மேலும் அங்கு மஹாபவித்திரமாகிய ஜலத்தையுடைய கங்கையானது மோதுகின்ற அலைகளோடு கூடினதாகப் பிரவகித்துக்கொண் டிருக்கின்றது, அத்தன்மையமலைச் சிகரத்தில் மேற்கூறிய சுருசியென்னும் அப்ஸரசிருந்தாள்.

அப்போது அவள் சுவர்க்கத்தினின்றும் ஆகாயமார்க்கமாகத்தனக்கெதிரே சமீபத்தில் வந்துகொண்டிருந்த இந்

திரனுடைய ஓர் தூதனை நோக்கிக் கேட்டதாவது:—மிக பாக்கியவானாகிய தேவதூதரே! தேவகணங்களில் சிரேஷ்டராகிய நீவிர் எங்கிருந்து வருகின்றீர்? இப்பொழுதெங்கு செல்லுகின்றீர்? அதைக் கிருபையோடு கூறுவீரென்றாள்.

தேவதூதன் சொல்லுகின்றான்:—மங்கலமுடையவளே! நீ நல்லகாரியங் கேட்டனை. அதனைச்சொல்லுகிறேன்; கேள்: அரிஷ்டநேமி யென்று ஒரு இராஜரிஷி யிருக்கின்றார். அவர் தன் புத்திரனிடம் இராஜ்ஜியத்தைக் கொடுத்து வைராக்கிய முடையவராய்ச் சகலவிஷயவாசைகளையு மொழித்துக் கந்தமாதன பர்வதத்திற் சென்று தபசுசெய்கின்றார். அந்தத்தர் மாத்மாவிடத் தெனக் கொரு காரியமிருந்தது. நான் இந்திரனது தூதனாதலால் அவர்கட்டளையைச் செய்துமுடித்து மேற்கொண்ட சகலவிருத்தாந்தங்களையும் தெரிவித்தற்பொருட்டு இப்பொழுது இந்திரரிடஞ் செல்லுகிறேன்.

அப்ஸரசு:—பகவானே! அவ்விருத்தாந்தம் யாதென்பதை யெனக் கறிவியும். என்னிடம் நீர் மிகப் பிரியமுடையவரென்றுணர்ந்து தம்மைக் கேட்கின்றேன். மஹாபுருஷர்களை ஒருவன் பிரசினம் செய்வானாயின அவர்கள் அதனால் வருத்தப்படாது (தங்கள் வியவகாரங்களைவிட்டு) விடையளிக்கின்றார்களானதால் அவ்வாறே தாமும் அறிவிப்பீராக வென்றாள்.

தேவதூதன்:—சுபமுடையவளே! அந்த விருத்தாந்தத்தைக் கேள். விஸ்தாரமாக நான் உனக்குச் சொல்லுகிறேன். அவ்வரசன் கந்தமாதன பர்வதத்தில் பெரிய தபத்தைச் செய்வது கண்டு தேவதைகளுக்கரசனாகிய இந்திரன் என்னை யழைத்து 'ஒ, தூதனே! நீ கந்தமாதனபர்வதத்

திற்கு விமானம், அப்ஸரசு, பலவகையான சாமக்கிரியை கள், கந்தர்வர்சள், யக்ஷர், சித்தர், கிந்நரர், தாளம், மிரு தங்கம் முதலானவைகளை உடன்கொண்டுபோ. பலவகைக் கொடிகளும் விருக்ஷங்களும் நிறைந்த கந்தமாதனபருவதத் திற்குப் போய் அங்குள்ளஅரசனை விமானத் தமர்த்தி இங் குக் கொண்டுவா' வென்று கட்டளையிட்டார். சுந்தரியே! அப்பொழுது இந்திரனிட்ட கட்டளையின்படியே விமான முதலான சாமக்கிரிகளோடு நான் அரசனிருந்தவிடஞ்சென்று அரசனைப்பார்த்து "இராஜனே! தமக்காக விமானம் கொண்டுவந்திருக்கின்றேன். அதில் தாமமர்ந்து சுவர்க்க த்திற்குச் செல்லும்; தேவபோகங்களைப் புசியும்" என்றறி வித்தேன். இவ்வாறான எனது வார்த்தையினைக் கேட்டு பின்வருமாறு அரசன் கூறலாயினன்.

தேவதூதனே! முதலில் சுவர்க்கத்தின் விருத்தாந் தங்களை நீ எனக்குத் தெரிவிப்பாயாக. உனதுசொர்க்கத் திலுள்ள குணங்களென்பவற்றையும் தோஷங்களென்பவற் றையும் நான் கேட்டு அவற்றை மனதில் விசாரஞ் செய்து பிறகு எனக் கிச்சை யுண்டாகுமாயின் வருகின்றேன்.

எனலும், நான் சொன்னதாவது:—

இராஜனே! சுவர்க்கத்தில் பெருத்த திவ்வியபோகங்க ளிருக்கின்றன. அந்தச் சுவர்க்கத்தைப் பெரிய புண்ணி யத்தால் ஜீவர்கள் அடைகிறார்கள். பெரும்புண்ணியமுடை யோர் சுவர்க்கத்தின் உத்தமசுகங்களையும், மத்திம புண் ணிய முடையோர் மத்தியம சுகங்களையும், கனிஷ்ட (தாழ் ந்த) புண்ணியமுடையோர் கனிஷ்ட சுகங்களையு மடைகின் றனர். இவையே சுவர்க்கத்திலுள்ள குணங்களாம். இவற் றை யுமக்குத் தெரிவித்தேன். இப்பொழுது சுவர்க்கத்

துள்ள தோஷங்களைக் கேட்பாயாக: வேந்தனே! தன்னி னும் உயர்ந்தஸ்தானங்களில் பிறர் இருப்பதைக் காண்பதி னாலும் அவர்கள் உத்தம சுகங்களைப் புசிப்பதைப் பார்ப்பதினாலும் இவர்களுக்குத் தாப முண்டாகின்றது. ஏனெனின், இவர்கள் தங்களினும் மேன்பாடுடையவர்களைக் கண்டு சகியாதவராவர். மேலும், தனக்குச் சமமான சுக மனுபவிப்பவரைக் கண்டும் எனக்குச் சமமாக ஏன் இவனி ருக்கின்றான் என்பதனால் குரோதமடைகிறார்கள். கனிஷ்ட புண்ணியமுடையோர் தனக்குத் தாழ்ந்தவிடத்திருப்பது கண்டு இவர்களைவிட யான் மேலென்பதனால் அபிமானமு முண்டாகின்றது. இன்னும் ஒரு தோஷமுமுண்டு. அதாவது எப்பொழுது இவர்களுடைய புண்ணியங்கள் நசிக்கின்ற னவோ அப்பொழுதே இவர்களை மிருத்தியு(பூ) லோகத் திற்றள்ளிவிடுகின்றார்கள். ஒரு கணமும் அங்கிருக்கச்செய் கிறதில்லை.

அரசனே! இவை முதலிய தோஷங்கள் சுவர்க்கத்திருக் கின்றன. நீர்கேட்டதினாலே சுவர்க்கத்துள்ள சுகதுக்கங்களை உமக்குத் தெரிவித்தேனென்றேன். சுபமுடையவளே! எப் பொழுது இவ்வண்ணம் இராஜனுக்கு யானறிவித்தேனோ அப்பொழுது அரசன் எனக் குரைத்ததாவது:—

தேவதூதனே! இந்த சுவர்க்கத்தை யநுபவிக்கும் தகு தியு மெனக் கில்லை; எனக்கிச்சையுமில்லை. யான் கடினமான தபத்தைச் செய்வேன்; தவஞ்செய்து இச்சரீரத்தையு மொழி ப்பேன். "எப்படி சர்ப்பமானது தன்சட்டையைப் பழமை யென்றெண்ணி நீக்குகின்றதோ, அதுபோல" யானும் நீக்கி விடுவேன்.

தேவதூதனே! நீ உனது விமானத்தை எங்கிருந்து கொண்டுவந்தாயோ அங்கு கொண்டுபோ உனக்கென் னமஸ்காரமிருக்கட்டும் என்றான்.

தேவியே! எப்பொழுது இராஜனிவ்வாறு சொன்னனோ, அப்பொழுது யான் விமானம் அப்ஸரசு முதலானவர்களோடு சுவர்க்கம் சென்று சகலவர்த்தமானங்களையும் தேவராஜனுக் கறிவித்தேன். அப்பொழுது இந்திரன் சந்தோஷித்து அழகான இனிமையுள்ள வாக்கியங்களால் கூறலாயினர். அதாவது: தூதனே! நீ மீண்டும் எங்கு அரசனிருக்கின்றானோ அங்கு செல். அவனுக்குச் சம்சாரத்தில் விரக்தியு(வைராக்கியமு)ண்டாகி ஆத்மபதத்தி லிச்சையிருக்கின்றது. அவனை ஆத்மதத்துவங்களை யாத்மாவாக வறிந்துள்ள வால்மீகரிடத்திற் கழைத்துக் கொண்டுபோ. அவருக் கென் விண்ணப்பத்தைத் தெரிவிப்பாய். அதாவது "மகரிஷியே! இவ்வரசனுக்குத் தத்துவஞானத்தை யுபதேசிக்கவேண்டும் இவன் ஞானத்திற் கதிகாரியா யிருக்கின்றான். ஏனெனின், இவனுக்குச் சுவர்க்கத்திலு மிச்சையில்லை; மற்றெதிலு மிச்சையில்லை. ஆனதால் தத்துவ ஞான மடைந்து சம்சாரதுக்கத்தி னின்று முக்தியடையும் பொருட்டு இவனுக்குத் தத்துவஞானோபதேசத்தினை தாங்கள் செய்யவேண்டும்" என்று தெரிவிப்பாய் என்றான்.

பத்ரையே! எப்பொழுது இந்தவிதமாக தேவராஜனறிவித்தானோ அப்பொழுது யான் அரசனிருக்குமிடத்திற் சென்று தெரிவித்ததாவது:—"அரசனே! நீர் சம்சாரசமுத்திரத்தைக் கடந்து மோக்ஷமடையும்பொருட்டு வால்மீகராசிரமத்திற்குச் செல்லும். வால்மீகர் தமக்குபதேசிப்பார்"

என்று தெரிவித்து இராஜனை என்னுடன்கொண்டு வால்மீக ராசிரம மடைந்து அங்கரசனை அவர்முன்னமர்த்தி அவரிடம் இந்திரனுடைய விண்ணப்பத்தையுந் தெரிவித்தேன். பத்ரை யே! அங்குநிகழ்ந்த விருத்தாந்தங்களைக் கேட்பாயாக. எப் பொழுது நாங்கள் சென்று நமஸ்கரித்து உட்கார்ந்தோமோ அப்பொழுது வால்மீகர் இராஜனை நோக்கி க்ஷேமமா வென்று வினவினர்.

இராஜன் சொல்லலாயினன்:—பகவானே! மேலானதத் துவ முணர்ந்தவரே! வேதாந்த முணர்ந்தவரிற் சிரேட்டரே! யான் இப்பொழுது கிருதார்த்தனானேன். தமது தரிசனத் தால் இப்பொழுது அடியேனுக்கு க்ஷேமமுண்டா யிருக்கின் றது. அடியேன் தம்மைச் சிறிது கேட்கின்றேன்: கிருபை செய்து நான் சம்சாரபந்தத்தினின்று முக்தமாகும் பொருட்டு விடையளிக்கவேண்டும் என்றான்.

வால்மீகர்:—இராஜனே! மஹாராமாயண கதையை யுனக்குச் சொல்லுகிறேன். நீ அதைக்கேட்டு அதன் தாற்பரி யத்தை ஹிருதயத்தில் தரிப்பதற் கெத்தனம் செய்வையா யின் ஜீவன்முக்தனாகச் சஞ்சரிப்பாய்.

இராஜனே! எதன்கண் வசிஷ்டராமசந்திரசம்வாத ரூபமான கதைக ளிருக்கின்றனவோ, அது முழுவதும் மோ க்ஷோபாயத்தையே அறிவிக்கின்றது. அதைக்கேட்டு இராம சந்திரர் தனது சுவபாவத்தில் நிலைத்து ஜீவன்முக்தராகச் சஞ்சரித்ததுபோல நீயும் சஞ்சரிப்பாய் என்றார்.

இராஜன்:—பகவானே! இராமசந்திர ரென்பவர் யாவர்? அவரெப்படி யிருந்தார்? எவ்வாறிருந்து சஞ்சரித் தாரென்பதைக் கிருபையோடு அருளவேண்டும்.

வால்மீகர் :—இராஜனே ! சாபவசத்தராய் ஸ்ரீஹரியான விஷ்ணுவானவர் சஞ்சலமுடைய மானிடவடி வெடுத்தார். அவர் அத்வைதஞானசம்பன்னராயினும் சிறிது அஞ்ஞானத்தை அங்கிகரித்து மானிடசரீரத்தைத் தாங்கியிருந்தார்.

இராஜன் :—பகவானே ! சிதாநந்தவடிவ ஹரி யென்பவருக்கு எக்காரணத்தாற் சாபமுண்டானது ? எவர் கொடுத்தா ரென்பதைத் தெரிவிக்கவேண்டும்.

வால்மீகர் :—இராஜனே ! ஒரு காலத்தில் நிஷ்காமமுடைய சநற்குமாரர் பிரஹ்மபுரியி லமர்ந்திருந்தார். திரிலோகாதிபதியான விஷ்ணுபகவான் வைகுண்டத்தினின்று மிறங்கி அங்கு வந்தார். அப்பொழுது அவரைக் கண்டு பிரஹ்மதேவரோடு சகல சபாஜனங்களும் எழுந்துநின்றார்கள் ; பூஜையும் செய்தார்கள். ஆயினும் சநற்குமார ரென்பவர் மாத்திரம் பூஜை செய்யவில்லை. அதுகண்டு விஷ்ணுபகவான் சொன்னதாவது : " சநற்குமாரனே ! உனக்கு நிஷ்காமத்தன்மையி னபிமான மிருத்தலால் நீ காமாதுரனுய் சுவாமிகார்த்திகேய னென்னும் பெயரோடு கிஞ்சிஞ்ஞனுய் அவதரிப்பா " யென்றார்.

எப்பொழுது விஷ்ணுபகவா னிப்படிக் கூறினரோ அப்பொழுது சநற்குமாரர் மறுசாப வடிவாக "விஷ்ணுவே! உமக்குச் சர்வஞ்ஞத்தன்மையி னபிமான மிருக்கின்றது; அந்த உம்முடைய சர்வஞ்ஞத்தன்மையானது சிறிதுகாலம் வரையில் நீங்கி யிருக்கும்; நீ ரஞ்ஞான முடையவ ராவீர் " ரென்றார்.

இராஜனே! இது ஒருசாபம். பின்னும் கேள்! ஒரு காலத்தில் பிருகுவின் ஸ்திரீ மரணமடையவே அதனால் தாபமடைந்த அந்த ரிஷியைக் கண்டு விஷ்ணுபகவான் நகைத்தனர். அப்போது பிராஹ்மணராகிய பிருகு சாபங்கொடுத்ததாவது: "விஷ்ணுவே! நீர் என்னைப் பார்த்து நகைத்தகாரணத்தால் நீரும் என்னைப்போல ஸ்திரீவியோகத்தால் துக்கமுடையவராவீ" ரென்றார், மற்றும் ஒரு காலத்தில் பிருந்தை என்பவள் விஷ்ணுவை நோக்கி "விஷ்ணுவே! நீர் என்னைத் துன்பப்படுத்தியதால் நீரும் ஸ்திரீவியோகத்தால் துன்புறுவீ" ரென்று சபித்தாள். மேலும் ஒரு நாள் தேவசர்மாவென்னும் பிராஹ்மணர் பகவானுக்குச் சாபம் கொடுத்திருக்கிறார். அதனைக் கேட்பாயாக:—ஒரு நாள் நரசிம்மவேடதாரியாய் ஸ்ரீஹரி கங்கைக்கரையோரம் போய்க்கொண்டிருக்கையில், அங்கு தேவசர்மாவென்னும் பிராஹ்மணருடைய பத்நியிருந்தாள். அவளை நோக்கி நரகரியானவர் பயங்கரவடிவோடு நகைத்தார். அதைக் கண்டு ரிஷிபத்னியானவள் பயத்தால் பிராணனை விட்டனள். அப்பொழுது தேவசர்மாபிராஹ்மணர் சாபங்கொடுத்ததாவது: "நீர் என் ஸ்திரீயை வியோகமடையச்செய்ததால் நீரும் அவசியம் ஸ்திரீவியோகமடைவீர்" என்றார்.

இராஜனே! சநற்குமாரர், பிருகு, பிருந்தை, தேவசர்மா வென்னும் இவர்களது சாபத்தினால் விஷ்ணுபகவான் மானிடவடிவைத் தாங்கி தசரதராஜனது கிரகத்தில் அவதரித்தார். இராஜனே! இந்தவிதத்தால் சரீரத்தைத் தரித்தவரானார். இதுவரையில் பகவானுக்குச் சாபமுண்டான காரணத்தைத் தெரிவித்தேன். இனி நீ வினவிய மோக்ஷ

சாதன விருத்தாந்தங்களைச் சொல்லுகிறேன். சாவதான மாகக் கேட்பாயாக:—

தேவலோகம் பூலோகம் பாதாளலோக மென்னும் மூன்றுலோகங்களையும் பிரகாசிப்பிப்பதாகவும், உள்ளிலும் வெளியிலும் ஆத்மதத்துவத்தினால் நிறைந்துள்ளதாகவும், அநுபவவடிவாகவும், எனதாத்மாவாகவு மிருக்கின்ற அந்த சர்வாத்மாவிற்கு நமஸ்காரம்!

இராஜனே! இங்காரம்பஞ்செய்த இந்நூலிற்கு விஷயம் யாது? பிரயோஜனம் யாது? சம்பந்தம் யாது? அதிகாரியாவ னென்பவற்றைக் கூறுகின்றேன்; கேட்பா யாக: சச்சிதாநந்தவடிவ அசிந்திய (சிந்தனைக் கெட்டாத) சின்மாத்திர ஆத்மாவை பிரஹ்மாபின்னமாகச் செய்வதே இதற்கு விஷயமாம். பரமாநந்தப்பிராப்தி யும் அநாத்மஅபின்னத்தினா லுண்டாகின்ற துக்கங்களின் நிவிருத்தியுமே இதற்குப் பிரயோஜனமாம். பிரஹ்ம வித்தையாகிய மோக்ஷோபாயத்தைக்கொண்டு ஆத்ம பதப்பிரதிபாதகஞ்செய்வது அதாவது ஆத்மபதத்தினை எடுத்துரைப்பது சம்பந்தமாம். "யானத்வைதப்பிரஹ்மம்; அநாத்மாவாகிய தேகாதிகளால் கட்டப்பட்டிருக்கின்றேன்; இவற்றினின் றெப்படி விடுபடுவேன் என்னும் நிச்சயத்தோ டுகூடிய பிரவர்த்தியையுடையவன் எவனோ அத்தன்மைய மிக்க ஞானியல்லாதவனும் மூடனல்லாதவனுமாகிய விகிரு தியுடையவனே இதற்கு அதிகாரியாவன்.

இந்நூல் பரமாநந்தத்தைக் கொடுப்பதாகும் மோக்ஷோ பாயமாம். எவன் முதலில் ஆறுகாண்டமாயுள்ள பூர்வ ராமாயணத்தை விசாரித்துப் பின்பு மோக்ஷோபாயத்தைக்

கூறும் வைராக்கிய முதலான ஆறு பிரகரணங்களோடுகூடிய இந்நூலை விசாரஞ்செய்கின்றனோ அவன் ஞானியேயாவன். மீண்டும் ஜனனமரணவடிவ சம்சாரத்தை யடையான். ஓ, ராஜனே! இந்த மகாராமாயணமானது மிக்கபாவன முடையது. இதில் இராமசரித்திரம் அடங்கியிருப்பதால் இத னைச் சிரவணம்செய்வதினாலேயே சர்வபாபங்களும் நாசமா கின்றன. இதனை முன் யான் எனது பரத்துவாஜனென்னும் சிஷ்யனுக்குபதேசித்திருக்கின்றேன். அவ்வாறே நீ மீண்டும் கேட்பாயாக: சத்ருகுலகாலனாகிய அரசனே! உச000-ம் கிரந்தவடிவினதான பூர்வராமாயணமாகவும் ௬உ000-ம் கிரந்தவடிவினதான உத்தரராமாயணமாகவும் பிரபலகதை களோடு கூடியதாகவும் ஒவ்வொன்றும் ஆறு காண்டங்களு டையதாகவும்முன்பு என்னால் அமைக்கப்பெற்றுள்ளன. அவற்றில் பூர்வராமாயணத்தை ஒருசமயம் பரத்வாஜன்சித்த ஏகாக்கிரமுடையவனாக என்னிடம் வந்தபொழுது அவனுக்கு யானுபதேசித்தேன். அதைக் கேட்டு அவன் எனது வசன வடிவ சமுத்திரத்தினின்றும் சாரவடிவ இரத்தினங்களை எடுத்து இருதயத்திற் றரித்தவனாகி ஒருசமயம் மேருபர்வத மீது சென்றான். அங்கு பிதாமஹராகிய பிரஹ்மா அமர்ந் திருக்கக்கண்டு அவன் அவரை நமஸ்கரித்து அவரது சமீபம மாந்து அவருக்கு இக்கதையினைச் சொல்லலாயினான். அத னைக் கேட்ட பிரஹ்மாவானவர் சந்தோஷமடைந்து பரத்து வாஜனைப்பார்த்துச் சொன்னதாவது: "புத்திரனே! யான் உன்மீது சந்தோஷமடைந்திருக்கின்றேன். ஆகையால் உனக் கிஷ்டமானதான ஒருவரத்தைக் கேட்பாயாக" வென்றார்.

இராஜனே! எப்பொழுது இந்தவிதமாக பிரஹ்ம தேவர் தெரிவித்தாரோ அப்பொழுது பரம உதாரத்தன்

மையை இடமாகக்கொண்டுள்ள பரத்துவாஜன் கூறலாயி ஞன் :—" பூதபவிஷயத்திற் கீசுவரரே ! எப்பொழுது தாம் பிரசன்ன(சந்தோஷ)முடையவ ரானீரோ அப்பொழுது இந்த வரத்தைக்கொடும். அதாவது சகலஜீவர்களும் சம்சார துக்கத்தினின்றும் முக்தராகி பரமபதமடையு முபாயத் தைக் கூறு" மென்ருர். அதுகேட்டு,

பிரஹ்மா :—புத்திரனே ! இப்பொழுது நீ உனது குருவாகிய வால்மீகரிடத்திற் செல்வாயாக. மீண்டும் அவர் அநிந்திதமா(நிந்திக்கப்படாததா)கிய ஆத்மபோதகமான மகாராமாயண சாஸ்திரத்தைச் சொல்ல முயற்சித்திருக் கின்ருர். அதைக் கேட்டு ஜீவர்கள் மகாமோகத்தையுண்டாக் கும் சம்சாரசமுத்திரத்தை கடப்பார்கள். மேலும் இந்த உத்தரராமாயண சாஸ்திரமானது சம்சார சமுத்திரத்தைக் கடப்பதற்கு ஓர் தெப்பம்போன்று பரமபாவனமுடையதா யிருக்கிறது என்ருர்.

வால்மீகர் :—இராஜனே ! இவ்விதமாகத் தெரிவித்துப் பரமேஷ்டியாகிய பிரஹ்மாவானவர் பரத்வாஜனேடு என தாசிரமம்வந்தார். அவரைச்செவ்வையாக விதிப்படி பூஜித் தேனப்போது சகல பூதங்களின் இதத்தில் பிரியமுடைய அந்த பிரஹ்மதேவர் எனக் சறிவிக்கலாயினர்.

பிரஹ்மா:-முனிவர்களில் சிரேஷ்டராகிய வால்மீகரே! இந்த இராமசந்திராது சுவபாவங்களைச் சொல்ல ஆரம்பித்த முயற்சி யெதுவோ அதைவிட்டுவிடலாகாது. இதனை முழுவ தும் முடிக்கவேண்டும். இந்த மோக்ஷோபாயமானது சம்சா ரவடிவ சமுத்திரத்தைக் கடத்தற்குக் கப்பல்போன்றிருக்கி ன்றது. இதனுல் சகலஜீவர்களும் கிருதார்த்தமடைவார்கள்.

வால்மீகர்:—இராஜனே! இவ்வாறு பிரஹ்மதேவரெனக் கறிவித்து அந்தர்தானமானார். எப்படிச் சமுத்திரத்திற் சுழலுண்டாகி ஒரு முகூர்த்தம்வரையிலிருந்து மறுபடியும் லயமடைகிறதோ அதுபோலப் பிரஹ்மதேவர் மறைந்து போனார். பிறகு யான் சமீபமிருந்த பரத்வாஜனைப் பார்த்து புத்திரனே! பிரஹ்மா என்ன தெரிவித்தாரென்று கேட்டேன். அப்பொழுது,

பரத்வாஜர்:—பகவானே! தங்களுக்குப் பிரஹ்மதேவரறிவித்ததாவது: "முநிசிரேஷ்டரே! நீர் எந்த இராமருடைய சுவபாவத்தைச் சொல்லுதற்கு முயற்சித்திருக்கின்றீரோ அதைத் தியாகஞ்செய்ய(விட்டுவிட)லாகாது. *முடிவுவரையில் நீர் பிரயாசையெடுக்கவேண்டும். ஏனென்றால் இச்சம்சார சமுத்திரத்தைக் கடத்தற்கு இக்கதை கப்பல்போன்றிருக்கின்றது. இதனால் அநேக ஜீவர்கள் கிருதார்த்தமடைந்து சம்சாரசங்கடத்தினின்றும் முக்தராவார்கள் என்றார்.

வால்மீகர்:—இராஜனே! பிரஹ்மதேவர் இவ்விதமாக எனக்கெப்பொழுது தெரிவித்தாரோ அப்பொழுது பிரஹ்மதேவரது ஆஞ்ஞையையநுசரித்து யான் இந்நூலைமுடித்து பரத்துவாஜனை நோக்கி "புத்திரனே! வசிஷ்டருடைய உபதேசத்தைப் பெற்று எந்தவிதமாக ஸ்ரீராமசந்திரர் சந்தேகமின்றியவராகச் சஞ்சரித்தாரோ அதுபோல நீயும் சஞ்சரிப்பாய்" என்றேன். அப்போது,

---

* முதலில் கதைவடிவ இராமாயணத்தைச் சொன்னீர். இனி மோக்ஷோபாயத்தைக்கூறும்.

பரத்வாஜர்:-பகவானே! இராமசந்திரர் எந்தவிதமாக ஜீவன்முக்தராக விருந்து சஞ்சரித்தா ரென்பதை ஆரம்ப முதல் கிரமமாக எனக்குச் சொல்லவேண்டும் என்றார்.

வால்மீகர்:—அவ்வாறு மிக்கவாதரவோ டென்னை வேண்டிக்கொண்ட பாரத்துவாஜனை நோக்கி நான் கூறியதாவது: குழந்தாய்! பாரத்துவாஜா, நீ கேட்டபடியே உனக்குச்சொல்லுகிறேன்; அதைக் கேட்பதினாலே சகல * மோகங்களையும் கெடுத்துவிடுவாய்.

எந்தவிதமாக எப்பொழுதும் சம்சாரத்திற் பற்றின்றி கமலநேத்திரராகிய ஸ்ரீராமசந்திரர் விபவகாரத்தைச்செய்து சுகமடைந்தாரோ, அந்தவிதமாக புத்திமானாகிய நீயும் செய்வாயாக. †மகாமனதுடைய இலக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர், கௌஸல்யை, சுமித்திரை, ஸீதை, அதுபோலவே தசரதர், இராமசந்திராது மித்திரர்களாகிய கிருதார்த்தர் அவிரோதரென்னு மிருவர்கள் ஆகிய இவர்களெல்லோரும் சம்சாரத்தைக் கடந்து பிரஹ்மஞான மடைந்தார்கள். வசிஷ்டர், வாமதேவர், எட்டு மந்திரிகள் அதுபோலவே அந்யமாகிய அநுயாயிமுதலானவர்களும் பிரஹ்மஞானத்தையறிந்தவர்கள். திருஷ்டி, ஜயந்தன், பாசன், சத்தியன், விஜயன், விபீஷணன், சுசேஷணன், ஹநுமான், இந்திரஜித்தென்னு மிவ்வெட்டு மந்திரிகளும் ஆகிய இவர்கள் எல்லோரும் சமமுடையோராய் ஜீவன்முக்தர்களாகிய

---

* ஆத்மஞானத்திற்குப் பிரதிபந்தகமாயுள்ள அஞ்ஞானவடிவ மலமெதுவோ அதனைக் கெடுத்துவிடுவாய்.

† மகா மனதுடைய=சர்வவியாபக அபரிச்சின்ன பிரஹ்மவடிவ வஸ்துவைக் கிரகணம் செய்வதிற் றகுதியுள்ள.

மகாத்மாக்களாவர். இவர்கள் எதாப்பிராப்தமானவற்றை (பிராரப்தாநுகூலமாக வருவனவற்றை) அந்தக்கரண சமமுடையோராய் இராகத் துவேஷங்களின்றி அநுபவித்துக் கொண்டும் எங்ஙனம் எக்கியங்களைச் செய்தார்களோ, தானங்களைச்செய்தார்களோ, சஞ்சரித்தார்களோ, ஸ்மரித்தார்களோ அதாவது வேதத்திலுள்ள பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களை ஸ்மரித்து அவைகளின் பொருட்களை மனனம் செய்து பிரஹ்மஞானத்தை யடைந்தார்களோ, அங்ஙனம் நீயும் சஞ்சரிப்பாயாயின் புத்திரனே! இச்சங்கடங்களினின்றும் முக்தமானுயென் றறிந்துகொள். அபார சம்சார சமுத்திரத்தில் மூழ்கிய புருடர்கள் ஞானவடிவ உத்தமயுக்தி (சாதனசதுஷ்டயவாயிலாகச் சமாதி)யினையடைந்து பிரபல ஞானபலத்தால் மீண்டும் சோகத்தையும் தீனத்தன்மையுமடைகிறதில்லை. அதனல் சந்தாபமின்றியவர்களாய் நித்தியத்திருப்தர்களாகவே யிருக்கின்றனர்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய

வைராக்கியப்பிரகரணத்தின்
கதாரம்பவர்ணனமென்னும்
முதற்சர்க்கம் முடிந்தது.

---

# தீர்த்தயாத்திராவர்ணனம்



பரத்துவாஜர் வாக்கியம்:— பகவானே! ஜீவன்முக்தனது நிலைமை யெத்தன்மைத்து? இராமசந்திரர் முதலானோர் எப்படி ஜீவன்முக்தரானார்கள்? அதனை ஆதிமுதல் அந்தம் வரையிலும் விடாமல் நான் நித்தியசுக மடையும் பொருட்டு எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

வால்மீகர்:—புத்திரனே! இந்தத் தோற்றமுடைய ஜெகத்து எதுவோ அது உண்மையில் சிறிது முண்டாகவில்லை. விசாரமின்மையால் தோற்றுகிறது; விசாரித்தகாலத்து நிவர்த்தியாய்விடுகின்றது. ஆகாயத்தில் எந்த * நீலநிறம் தோற்றுகின்றதோ அது மயக்கத்தினாலாகியதாம். விசாரித்துப் பார்க்குங்காலத்தில் நீலநிறத்தின் தோற்றம் நீங்கிவிடுகின்றது. அதுபோல அவிசாரத்தால்ஜெகத்துத்தோன்றுகின்றது. விசாரத்தினால் லயமடைகின்றது. சிஷ்யனே! எதுவரையில் சிருஷ்டியி னத்தியந்தாபாவம் (முற்றுமின்மை) உண்டாகிறதில்லையோ, அதுவரையில் பரம(மேலான) பதப்பிராப்தி உண்டாகிறதில்லை. எப்பொழுது திருசியத்தின்

* ஆகாயத்தில் எந்த் நிறமுமில்லை. ஏனெனின் நீலம், பீதம் முதலான வடிவங்கள் ஆகாரமுடைய வஸ்துவிலுண்டாகின்றன. ஆகாயமோ நிராகாரத்தையொத்திருக்கின்றது. ஆகலின் நீலநிறம் வாயு மண்டலத்திலுள்ள தத்துவங்களின்சமூகவடிவாம். அல்லது வேறுசிலர் மதத்தின்படி வாயுபடலமே நீலநிறமாகத்தோன்றுகின்றதாம்.

(காணப்படும் ஜெகத்தின்) அத்தியந்தாபாவமுண்டாகின்றதோ, அப்பொழுதே சுத்தசிதாகாய (கலப்பின்றிய சித்து வடிவ ஆகாயமாகிய) * ஆத்மசத்தை (ஆத்மாவின் இருப்பு) விளங்குகின்றது. சிலர் இந்த திருசியத்திற்கு மஹாப்பிரளயத்தில் ஒருவாறு அபாவமு(இன்மையு)ண்டென்கின்றார்கள். என்றபோதிலும் யானுனக்கு மூன்றுகாலத்தினபாவத்தைச் சொல்லுகின்றேன். இது பிரஹ்மஞானத்தின் பொருட்டுப் பிரவர்த்தித்தலையுடைய யோகவாசிட்ட மகாராமாயண சாஸ்திரமாகிய சத்சாஸ்திரத்தைச் சிரத்தையோடு ஆதிமுதல்அந்தம்வரையில் கேட்டு அதைத் தாரணை (மனதின்கண் தரித்தலைச்)செய்வதால் விளங்கும். பிராந்தி (மயக்கம்) நீங்கி அகிருத்ரும சாந்தி(சுவதசித்த ஆத்மஸ்திதி)யினை நீ யடைவாய். சிஷ்யனே! சம்சாரமானது பிரம (மயக்க) மாத்திரத்தால் சித்தித்திருக்கின்றது. இதனை பிரமமாத்திர மென்றறிந்து ஸ்மரியாமலிருக்க வேண்டும். இதுவே ஜீவன்முக்தியாம். இவனது பந்தத்திற்கு(கட்டிற்கு)க் காரணம் வாசனையாம்; வாசனையாலுழன்று திரிகின்றான். எப்பொழுது வாசனை நசிக்கின்றதோ அப்பொழுது பரமபதத்தி னடைவுண்டாகின்றது. வாசனையென்னும் ஒரு பிரதிமை(பொம்மை) யிருக்கின்றது. அதன்பெயர் மனமாம். எப்படி ஜலமானது குளிர்ச்சியின் மிகுதியால் ஜடத்தன்மையையடைந்து பனிக்கட்டியாகி பிறகு சூரியதாபத்தால் கரைந்து மீண்டும் ஜலவடிவத்தையடைந்து சுத்தஜலமாகவேயாகின்றதோ, அதுபோல ஆத்மவடிவஜலத்தில் சம்சார சத்தியத்தன்மைவடிவ ஜடத்

---

* ஜெகத்து சத்தியமென்னும் ஸ்புரணமும் எதார்த்த ஞானிக்கொருபோது முண்டாகிறதில்லை.

தன்மையாகிய குளிர்ச்சியிருக்கின்றது. அதனால் மன வடிவ பனிக்கட்டிப்பிரதிமையுண்டாகின்றது. ஞானவடிவ சூரியனுதயமாகவே சம்சாரத்தின் சத்தியத்தன்மைவடிவ ஜடத்தன்மையும் சீதளத்தன்மையும் நிவிருத்தியாகின்றன. எப்பொழுது சம்சாரத்தின் சத்தியத்தன்மையும் வாசனையும் நிவிருத்தியாகின்றனவோ, அப்பொழுது மனம் நாசமாகின்றது. * மனம் நாசமாகவே மேலான கல்யாண (க்ஷேம) முண்டாகின்றது. ஆனதால் இவனுக்கு பந்தத்திற்குக்காரணம் வாசனையாம். வாசனைநீக்கமே முக்தியாம். அந்த வாசனை சுத்தம் அசுத்தமென்றிரண்டு வகையாம். இவன் தனது உண்மைவடிவ சொரூபத்தை யறியாததால் அநாத்ம வடிவாகிய தேகாதிகளில் அகங்காரத்தைச் செய்கின்றான். இவ்வாறு எப்பொழுது இவனுக்கு அநாத்மாவி (ஆத்மா வல்லாதவற்றி)னிடத்து ஆத்மா வென்னும் அபிமான முண்டாகின்றதோ அப்பொழுது பலவிதமான வாசனைகளுண்டாகின்றன. அதனால் கடியந்திரம்(கலையக் கட்டிய ஏற்றம்)போலக் கிடந்து உழல்கின்றான். சாதுவே! நீ எந்த பஞ்சபூத சரீரத்தைப் பார்க்கின்றனையோ அவ்வெல்லாம் வாசனாவடிவாம்; வாசனையினாலேயே நிலைத்திருக்கின்றன. எப்படி மணிகள்கயிற்றின் ஆசிரயமாக நிலைத்திருந்து கயிறு அறுந்தவுடன் நிலைதவறி வெவ்வேறாக விழுந்துவிடுகின்றனவோ, அப்படி வாசனைகள் நசிக்கவே பஞ்சபூதசரீரங்கள் நிலைக்கின்றனவில்லை. ஆனதால் சகல அநர்த்தங்களுக்கும் காரணம் வாசனையேயாம். மேலும் எந்த சுத்தவாசனை

---

* அநேக விதமான வாசனைகளின் சமூகவடிவம் மனமாம். அது நசிக்கவே மனம் நசிக்கின்றது.

யிருக்கின்றதோ அதிற்றான் ஜெகத்தின் *அத்தியந்தாபாவ நிச்சயமுண்டாகின்றது.

ஓ, சிஷ்யனே! அஞ்ஞானியின் நிச்சயமானது வாசனை வடிவால் மீண்டும் ஜன்மத்திற்குக் காரணமாகின்றது. ஞானியின் வாசனையானது மீண்டும் ஜன்மத்திற்குக் காரணமாகின்றதில்லை. எப்படி வறுக்காதவிதை வறுத்தவிதை யென்னு மிரண்டில் வறுக்காதவிதையினை விதைத்தால் மீண்டும் முளைக்கின்றதோ; வறுத்தவிதை மீண்டும் முளைக்கிறதில்லையோ, அதுபோல அஞ்ஞானிக்கு வாசனை இரசத்தோடு கூடியிருத்தலால் ஜன்மத்திற்குக் காரணமாகின்றது. ஞானிக்கு வாசனை இரசமின்றியிருத்தலால் ஜன்மத்திற்குக் காரணமாகின்றதில்லை. ஞானியின் செய்கைகள் சுபாவகுணத்தாலேயே நிகழ்கின்றன. எந்த குணங்களோடும் சேர்ந்தும் தன்னில் சேஷ்டைகள் உண்டாகின்றனவாக அவன் காண்கின்றதில்லை. உண்டல், பருகுதல், ஈதல், பேசுதல், நடத்தல் முதலான வியவகாரங்களைச் செய்யினும் உள்ளில் சதா அத்வைத நிச்சயத்தினைத் தரித்தவனாகின்றான். அவனுக்கு ஒருபோதும் துவைதபாவனையின் ஸ்புரணமு(எழுச்சியு)ண்டாகிறதில்லை. தனது சுபாவத்தில் நிலைத்திருத்தலால் நிர்க்குண(குணமின்றியவ)னும் அரூப (வடிவமின்றியவ)னுமாகின்றான். அவனது செய்கைகளும் ஜன்மத்திற்குக் காரணமாகிறதில்லை. எப்படிக்குயவனுடைய திகிரி சுழற்றும்போது சுழன்றுகொண்டேயிருந்து நிறுத்தும்போது மந்த

---

* பிரஹ்மஞானிக்கு ஜெகத்தின் சத்தை அசத்தாகத் தோன்றுகின்றது. அவன் எங்கும் பிரஹ்மசத்தையின் மகிமையையே காண்கின்றான்; ஜெகத்து சத்தியத்தன்மை வடிவாக இல்லையென்று ஜெகத்தின் தோற்றமின்றி யிருத்தலே அதனத்தியந்தாபாவமாம்.

மந்தமாக நிலைக்கின்றதோ, அப்படி எதுவரையில் அகங்காரத்தோடு கூடிய வாசனைகள் இருக்கின்றனவோ அதுவரையில் ஜன்மம் மீண்டும் அடையப்படுவதாகும். அகங்காரம் நீங்குங்கால் ஜன்மம் உண்டாகிறதில்லை.

ஓ, சாதுவே! இந்த அஞ்ஞானவடிவ வாசனையை நாசஞ்செய்வதற்குச் சிரேஷ்டமானவுபாயம் பிரஹ்மவித்தையேயாம். இதுவே மோக்ஷோபாயசாஸ்திரமாம். ஏனைய சாஸ்திரவடிவப் படுகுழியில் விழுவானுயின் கற்பம் வரையில் விஷமமின்றிய (மாறுதலின்றிய) பதத்தை அடையான். பிரஹ்மவித்தையை ஆசிரயஞ் செய்தவன் சுகமாக ஆத்மபதப்பிராப்தியை யடைவான்.

பரத்துவாஜனே! இராமவசிஷ்ட சம்வாதத்தோடுகூடிய இந்த மோக்ஷோபாயகிரந்தமானது விசாரிக்குந் தகுதியினையுடையதாம். ஞானத்திற்குப் பரமகாரணமாம். ஆனதால் ஆதிமுதல் அந்தம் வரையில் இந்த மோக்ஷோபாயத்தைக் கேட்பாயாக. எவ்வாறு ஸ்ரீ ராமசந்திராதியோர் ஜீவன்முக்தராகச் சஞ்சரித்தனரோ அதுபோல நீயும் சஞ்சரிப்பாய். ஒருநாள் ஸ்ரீராமசந்திரர் வித்தியாப்பியாசஞ்செய்து பாடசாலையினின்றும் கிரகத்திற்கு வந்தார். அன்றுமுழுவதும் விசாரமுடையவராகக் காலத்தைக் கழித்து மறுபடியும் மனதில் துவாரகை ஜெகந்நாதமுதலான தீர்த்தயாத்திரையின் சங்கற்ப முடையவராய்த் தமது பிதாவிடஞ் சென்றுர். எவர் எல்லாப் பிரஜைகளையுஞ் சுகமாகவைத்திருக்கிருரோ எவரிடஞ்செல்வதால் சகலப்பிரஜைகளும் சுகமடைகிருர்களோ அத்தன்மைபதசரதராகிய தனது தந்தையின் பாதாம்புஜங்களை இரகுநாதர் பற்றினர். மிருதுவான இதழ்களோடுகூடிய

தாமரைமலர்களை அன்னப்பட்சிகள் பற்றுவனபோல விரல்களாகிய கேசரங்களோடுகூடிய தசாதரது பாததாமரைகளை ஸ்ரீராமசந்திரர் பற்றி நமஸ்கரித்துச் சொன்னதாவது:

தந்தையே! என்சித்தத்தில் ஜெகந்நாதம் துவாரகை முதலிய தீர்த்ததரிசனங்களின் எழுச்சியுண்டாயிருக்கிறபடியால் தாங்கள் உத்திரவு கொடுப்பீர்களாயின் நான் தீர்த்த தரிசனங்களைச் செய்துவருவேன். நான் தங்களது புத்திரன்; தங்கள் பாதுகாப்பிற்குட்பட்டவன். இதற்குமுன் நான் ஒன்றும் தங்களைக் கேட்டதில்லை. இந்தப் பிரார்த்தனையை இப்பொழுது செய்திருக்கிறேன். ஆகலின் நான் போகும்பொருட்டு உத்திரவு கொடுங்கள். எனது வேண்டுகோள் மறுக்கப்படலாகாது. ஏனெனின், எவர்களுடைய மனோரதங்களும் தங்களுடைய கிரகத்திற்கு வந்து சித்திக்கவில்லையென்பது இந்த மூன்றுலகங்களிலும் இதுவரையி லில்லை; எவரும் திருப்தியடைந்தே சென்றிருக்கிறார்கள். ஆகையால் கிருபை செய்து எனக்கு உத்திரவுகொடுக்கவேண்டுமென்றார்.

வால்மீகர் சொல்லலாயினர்:—பரத்வாஜனே! இந்த விகமாக ஸ்ரீராமசந்திரர் தெரிவித்தபோது பக்கத்திலிருந்த வசிஷ்டரும் தசாதருக்கு அறிவித்ததாவது: இராஜனே! ஸ்ரீராமசந்திரருக்கு உத்திரவு கொடும். இவருக்குத் தீர்த்த யாத்திரை செய்துவரவேண்டுமென்று எண்ணமுண்டாயிருக்கிறது. இவர் இராஜகுமாரரானதால் இவருக்குத் துணையாகச் சேனைகளையும் தனத்தையும் மந்திரிகளையும் பிராமணர்களையும் உடன்போகும்படி செய்யும். இவர் தெரிசனஞ்செய்து வரட்டும் என்றார்.

பாத்துவாஜனே! எப்பொழுது இப்படித் தெரிவித்தாரோ அப்பொழுது நல்ல நக்ஷத்திரத்தினைச் சோதித்துச் சுப முகூர்த்தம் வைத்து ஸ்ரீ இராமசந்திரருக்குஉத்திரவுகொடுத்தார். நல்ல மங்களகரமான அலங்காரங்களையணிந்து பிராஹ்மணர்கள் சுவஸ்திவசனங்கள் கூற, எப்பொழுது இராமசந்திரர் தாய்தந்தைகளி னடிபணிந்து இவ்வாறு புறப்படவாரம்பித்தாரோ, அப்பொழுது அங்குள்ள யாவரும் அவரது பிரிவாற்றாமையால் அவரைக் கட்டித்தழுவிக் கண்ணீர் விட்டார்கள்.

அவர்களை ஒருவாறு சமாதானப் படுத்திவிட்டு இலட்சுமணர் முதலான தம்பியரோடும், மந்திரிகளோடும் வேதவிதிகளை யறிந்த வசிஷ்டாதிப் பிராமணர்களையும் மிகுதியான திவ்யங்களையும், சேனைகளையும் உடன்கொண்டு அநேகமான தானதருமங்களைச் செய்து முடித்து அதன்பின் அரண்மனையினின்றும் வெளிப்பட்டார். அப்போது அங்குள்ள ஜனங்களும், ஸ்திரிகளும் ஸ்ரீராமசந்திரரை இருதயத்திலிருத்தி அவர்மேல் இமயமலையில் பனி மூடினாற் போல ஓயாமல் தங்கள் கரங்களால் பொரி புஷ்பம் என்பவற்றினை அள்ளிப் பொழிந்தார்கள். அப்பொழுது இராமசந்திரர் ஆங்காங்கு பிராமணர்களுக்கும் ஏழைகளுக்கும் தக்கவாறு தானதருமங்களைச் செய்துகொண்டே தனது கோசலதேச முதற்கொண்டு சகல தேசங்களையும், அவற்றின்கண் ணுள்ள பவித்திரமான க்ஷேத்திரங்களையும், வனங்களையும், தேவதைகளையும், முனிவர்களது ஆசிரமங்களையும், நகரங்களையும், கிராமசமீபங்களிலுள்ளகாடுகளையும், சமுத்திரங்களையும், பர்வதங்களினடிவாரங்களையும், சந்திரனை யொத்த ஜலத்தையுடைய

மந்தாகினியையும், நிர்மலமாகிய கமலங்கள் நிறைந்த காளிந்தியையும், சரஸ்வதி, சதத்ரு, சந்திரபாகா, இராவதி, வேணீ, கிருஷ்ணை, கிருஷ்ணவேணி, நிர்விந்தை, சரயூ, சர்மணவதி, விதஸ்தா, விபாசா, பாதுஹா, பிரயாகை, நைமிஷம், தர்மாரண்யம், கயை, காசி, ஸ்ரீபர்வதம், கேதாரம், புஷ்கரம், மானஸஸரசு, உத்தரமானஸம், ஹயக்ரீவம், திர்த்தவிருந்தம், அக்கினிதீர்த்தம், மஹாதீர்த்தம், இந்திரத்யும்னஸரசு, மற்ற தடாகங்கள், நதிகள், நதங்கள், சிறிய குளங்கள், கூபங்கள் என்பவற்றையுங் கண்டு சென்றார். கார்த்திகேயம் சாளக்கிராமம், மற்றும் நாற்புறமுமுள்ள விஷ்ணுவாலயங்கள் சிவாலயங்களையுங் கண்டார். பலவித ஆச்சரியங்களோடு கூடிய நான்கு சமுத்திரக்கரைகளையும், விந்தியாசல மந்தராசலங்களிலுள்ள சோலைகளையும், சப்த குலாசலங்களையும், மகாமகாத்மாக்களாகிய இராஜரிஷி, பிரஹ்மரிஷி, தேவப் பிராஹ்மணர் முதலானோர்களின் பவித்திரமும் மங்களாகாரமுமான ஆசிரமங்களையும் ஆக இவ்வாறு ஜம்புத்வீபத்திலுள்ள சர்வப் பிருதிவிகளையும் ஒருவருடத்துள் தரிசித்தார். யாத்திரை செய்து முடித்தபிறகு சிவபெருமான் சர்வதிசைகளிலும் சஞ்சரித்துக் கைலாயத்தை வந்தடைவது போல ஸ்ரீராமசந்திரர் தன் தம்பிகள் முதலானோரோடு அயோத்தியாபுரியை வந்தடைந்தார்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற ஸ்ரீ யோகவாசிட்ட மகாராமாயணத்தில் தேவதூதனாற் சொல்லப்படும் மோக்ஷோபாயமாகிய வைராக்கியப்பிரகரணத்தின் தீர்த்தயாத்திராவர்ணனமென்னும் இரண்டாவது சர்க்கம் முடிந்தது.



## விசுவாமித்திராகமனவர்ணனம்.

---

அவதாரிகை:—இராமசந்திரரது மெலிவுற்ற நிலைமையும், இராஜனுக்கு அதன் காரணத்தைத் தெரிந்துகொள்ளுமிச்சையும், விசுவாமித்திரரது வரவும் இதிற் கூறப்படுகின்றன.

வால்மீகர் சொல்லுகின்றார் :—பாரத்துவாஜனே! எப்பொழுது ஸ்ரீராமசந்திரர் யாத்திரை முடித்து அயோத்தியை வந்தடைந்தாரோ அப்பொழுது நகரவாசிகளாகிய ஸ்திரீகளும், புருஷர்களும் அவரது திருமேனி முற்றும் மறைபடும்படியாகப் புஷ்பங்களை வாரிச்சொரிந்து வாயினால் ஜெயஜெயவென்று சப்தித்து மிகுந்தசந்தோஷத்துடன் ஆரவாரித்தார்கள். அப்பொழுது ஸ்ரீராமசந்திரர் தமது கிரகத்திற் பிரவேசித்ததானது இந்திரன் புத்திரன் தனது சொர்க்கத்தில் பிரவேசிப்பதுபோலிருந்தது. அங்கு முதலில் இராஜாவாகிய தசரதரையும் பிறகு வசிஷ்டரையும் நமஸ்கரித்துச் சபையிலுள்ள சகல ஜனங்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்த மரியாதை கொடுத்துப்பிறகு அந்தப்புர மேகினர். அங்கும் கௌசலைமுதலான தாய்மார்களை விதிப்படி நமஸ்கரித்துப்பந்துக்கள் சகோதரர்கள் முதலான குடும்பபரிவாரங்களோடும் ஒருமித்திருந்தார். ஏ, பாரத்துவாஜனே! இந்தவிதமாக ஸ்ரீராமசந்திரரது வரவாலும் அவரது பிரியவார்த்தைகளாலும், ஜனங்கள் முரளிகானத்தைக் கேட்டு வண்டுகள் சஞ்சரிப்பதுபோல சஞ்சரித்தார்கள்.

அதனால் ஏற்பட்ட உற்சவமானது ஏழு தினங்கள் வரையி லும் மிக்க வைபவத்துடன் நடந்தேறியது. அச்சமயத்தில் தன்னைச் சந்திக்க வருபவர்களுக்கும் ஏதாவதொன்றை விரும்பிவருபவர்களுக்கும் ஸ்ரீராமசந்திரர் தானதர்மங்க ளைச் செய்துகொண்டேயிருந்தார். மேலும் எங்கும் பலவேறு வாத்தியங்கள் ஒலிப்பதும், சதா கட்டியர்கள் கட்டியங் கூறிக்கொண்டே இருப்பதுமாக இவ்வண்ணம் அயோத் தியாபுரியில் பெருந் திருவிழாவாக இருந்தது. அதன் பிறகு ஸ்ரீராமசந்திரர் ஆசரித்ததைச் சொல்லுகிறேன்; கேட்பீராக:

இராமசந்திரர் பிராதக்காலத்தெழுந்து விதிபூர்வகமாய் சந்தியாவந்தனஞ் செய்து இந்திரனுக்குச் சமானமாகச் சபையில் வீற்றிருக்குந் தனது பிதாவினை தெரிசிப்பதும் அங்கு வசிஷ்டர் முதலியோரோடு ஞானசம்பந்தமான விசித்திரக் கதைகளால் பகலில் ஒரு ஜாமம்வரையிலும் காலங்கழிப்பதும் பிறகு தமது தந்தையின் அநுமதியின் பேரில் பன்றி, எருமை முதலான துஷ்டமிருகங்களால் நிறைந்த காடுகளில் அவற்றை வேட்டையாடுமிச்சையால் பெருஞ் சைந்நியத்துடன் சென்று வேட்டையாடித் திரும் பித் தன் கிரகத்திற்குவந்து ஸ்நானாதிகிரியைகளை முடித்து பந்துமித்திரர்களோடு போஜனஞ்செய்வதும் அவர்களுடன் இராக்காலத்தைக் கழிப்பதுமாயிருந்தார். தீர்த்தயாத் திரையினின்றுத் திரும்பிவந்தது முதல் தனது பந்துக்களு டன் பெரும்பாலும் இவ்வண்ணம் தனது பிதாவின் கிரகத் தில் வசித்துக்கொண்டிருந்தார். ஏ, பாபமற்றவனே! இவ் விதமாக ஸ்ரீ ராமசந்திரர் இராஜர்களுக்குரிய வியவகார யோக்கியதையை யுடையவரும் சாதுக்களுடைய சித்தத்

தில் சந்திரனுக்குச் சமானமான வாநந்தத்தைக் கொடுப்பவரும் சர்வஜீவர்களையும் ஆநந்திக்கச்செய்யும் அமிர்தத்தைப் போன்றவருமாக விருந்துகொண்டு காலத்தைக் கழித்து வந்தார்.

இச்சமயம் இரகுவம்சச் சிரேஷ்டராகிய இராமசந்திரரும் அதேப்பிரகாரம் அவரது சகோதரர்களாகிய இலக்ஷுமணரும் சத்ருக்னரும் கொஞ்சங்குறைய பதினாறு வயதுடையவர்களாயிருந்தார்கள். மேலும் அக்காலத்தில் பரதர் தனது பாட்டனாரது கிரகத்திற்குச் சென்றிருந்தார். ஞானவானாகிய தசரதராஜனே பூமிமுழுவதினையும் பரிபாலித்துக்கொண்டும் மந்திரிகளுடனிருந்து தமது புத்திரர்களின் விவாகசம்பந்தமாகப் பரியாலோசனைகள் செய்துகொண்டுமிருந்தார்.

வால்மீகர் :—ஏ, பாரத்துவாஜனே.! இப்படிச் சிலநாள் கழிய ஓர் நாள் வெளியிலிருந்து வந்த இராமசந்திரர் அரண்மனையில் தமது அந்தப்புரத்தினை யடைந்து அங்கு * சோகமுற்றவராக வீற்றிருந்தார். இராஜகுமாரர்களுக்குரிய சேஷ்டைகளை யெல்லாம் விட்டு ஏகாந்தத்தில் சிந்தையோடு கூடி யிருந்தார். இந்திரியங்களுக்கு விஷயமாகும் இரசங்களோடு கூடிய பதார்த்தங்களை விட்டொழித்துச் சரீரத்தில் துர்ப்பலமுள்ளவரைப் போன்று முககாந்தியற்றவராயிருந்தார். தாமரைமலர் உலர்ந்தபின் வெண்ணிறமாகிவிடுவது போல அவர் முகம் வெளுத்திருந்தது.

---

* இதுவரையில் இராமசந்திரது சித்தசுத்திக்குக் காரணமாகிய நித்தியகர்மங்களைத் தெரிவித்து இப்பொழுது அதன் பிரயோஜனவடிவ வைராக்கியாதி சம்பத்துக்களை வர்ணிக்கின்றார்.

உலர்ந்துபோன தாமரைமலரில் வண்டுகளிருப்பன போல காந்தியற்ற இவரது முக கமலத்தில் நேத்திரங்களாகிய வண்டுகள் தங்கியிருந்தன. அந்நிலைமையும் ஓர் அழகைத் தருவதாகத்தா னிருந்தது. அவருக்கு இச்சை யென்பது நிவர்த்தியாகி யிருந்தது. எப்படி சரத் காலத்தில் தடாகங்கள் நிர்மலமாயிருக்குமோ, அப்படி இச்சையாகிய மலம் ஒழிந்து சித்த மென்னும் தடாகம் நிர்மலமாயிருந்தது. நாளுக்குநாள் அவரது சரீரமும் நிர்மலமாயினது. எங்கு உட்காருவாரோ அங்கு சிந்தையோடு கூடியவராய் மௌனமாயிருப்பார். எழுந்திருப்பது மில்லை. உட்காரும் பொழுது இடது கன்னத்தில் கையைவைத்துக்கொண்டு சித்திரப் பதுமையினைப் போல வீற்றிருப்பார். வேலைபாட்களும், மந்திரிகளும் சமீபத்தில் வந்து 'ஓ, பிரபுவே! இது ஸ்நானசந்தியாவந்தனுதிகளுக்குச் சமயம். தாம் எழுந்திருக்கவேண்டும்' என்று எப்பொழுது விசேஷமாகப் பிரார்த்திப்பார்களோ அப்போதுதான் ஸ்நானுதிகளைச் செய்வார். அப்பொழுதும் மனதினுல் ஒன்றையும் விசாரிக்கிறதில்லை. உண்ணல், பருகுதல், பேசுதல், நடத்தல், அணிதலாகிய கிரியைகள் எவ்வளவுண்டோ அவ்வளவும் அவருக்கு விரசமாயின. இந்தவிதமாக இராமசந்திர ரிருப்பதைக் கண்ட இலட்சுமணரும், சத்ருக்னரும் தாமும் அவ்வண்ணமே யானுர்கள். அப்பொழுது தசரதர் இதன் விபரத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு இராமசந்திரரது பக்கத்தில் வந்தமர்ந்தார். பார்ப்பதற்கு இவர் மிகமெலிவுற்றவராகவும், சிந்தனைமிக்கவராகவு மிருந்தார். இதனைக் காணுலும், "அடடா! இவனுக்கு என்ன அவஸ்தையுண்டாயினதோ!" என்று சொல்லி அவரது இந்தச் சோகத்தை

நீக்கும்பொருட்டு அவரைத் தனது மடியிலிருத்தி மிக்க மிருதுவும் மதுரமுமான மொழிகளால் "ஏ, புத்திரனே! உனக்கு என்ன துக்கம் நேரிட்டது? எதனுல் துக்கமுடை யவனுக விருக்கின்றாய்?" என்றார். அப்பொழுது ஸ்ரீ ராமசந்திரர் "ஓ, எந்தையே! எனக்கொரு துக்கமுமில்லை" யென்று தெரிவித்து * சும்மா விருந்தார். இப்படியுஞ்சில நாள் கழியவே இதனைக்கண்ட அரசனுக்கு மிக்கசோக முண்டாயிற்று. சகல ஸ்திரிகளும் சோகமுடையவர்களா னார்கள். பிறகு அரசன் அமைச்சரோடிருந்து தனது புத்திரனுக்கு எந்தவித யுக்திகளால் சோக நிவர்த்தி யைச் செய்யலாமென்று பரியாலோசனை செய்து அருகி விருந்த வசிஷ்டரை நோக்கி "முநீசுவரரே! என் புத்தி ரன் ஏன் சோகமுடையவனுக விருக்கிறார்?" என்று கேட்டார். அப்பொழுது வசிஷ்டர் சொல்லுகின்றார்: "ஓ, வேந்தனே! மகா புருஷர்களுக்குக் குரோதமும் அற்பகா ரணத்தினுல் உண்டாகிறதில்லை; மோகமும் அற்பகாரணத் தினுல் உண்டாகிறதில்லை; சோகமும் அற்பகாரணத்தினுல் உண்டாகிறதில்லை. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகா யாதி மகாபூதங்கள் அற்பகாரியங்களால் விகாரமுடையன வாகாமல் எப்பொழுது ஜெகத்தின் உற்பத்திலயங்கள் ஏற் படுகின்றனவோ அப்பொழுதே விகார முடையனவாகின் றன. அதுபோல மகாபுருஷர்கள் அற்பகாரியங்களால் விகாரமுடையவர்களாகின்றதில்லை ஆதலால் இராஜனே!

---

* தந்தையோ நம்மைச் சம்சாரகாரியத்தில் பொருத்த வெண் ணுகின்றார். இவரிடம் சம்சாரத்தின் அநித்தியத் தன்மையையும் வைராக்கியாதி விஷயங்களையுந் தெரிவிப்போமாயின் இவருக்குத் துக்கமுண்டாகுமென்றெண்ணி ஒன்று முரைக்காது சும்மாவிருந்தார்.

தாம் சோகங்கொள்வது தகுதியன்று. இராமசந்திரர் சோக மடைந்திருப்பதும் யாதேனும் விஷயத்தை முன்னிட்டே யிருக்கும். பின்னுல் இவருக்குச் சுகமுண்டாகும். நீர் சோகப்படவேண்டியதில்லை'' யென்றூர்.

அவதாரிகை :-விசுவாமித்திரர் வருதலும், இராஜன் அவரைவிதிப்படி பூஜித்தலும், மேலும் அவரைச் சந்தோஷிப்பிக்க வெண்ணி அரசன் பிரதிஞ்ஞைசெய்தலும் இங்குக் கூறப்படுகின்றன.

வால்மீகர் சொல்லலாயினர் :—ஏ, பாரத்துவாஜனே! இந்தவிதமாக வசிஷ்டரும், தசரதரும், அந்தப்புரத்துள்ள இராணிகளும் விசாரஞ்செய்துகொண்டிருக்கும்போது விசுவாமித்திரர் என்னும், பிரசித்திபெற்ற மகரிஷி அயோத்தியாதிபதியைக் காணவந்தார். தருமகாரியங்களை நடத்துவதில் புத்திமானுகிய அந்த ரிஷியின் யஞ்ஞத்தை மாயாவிகளும், பராக்கிரமத்தால் மதர்த்தவர்களுமாகிய இராக்ஷஸர்கள் நாசமாக்குவதால், அந்தத் தமது யஞ்ஞத்தின் இரக்ஷணையின் பொருட்டுத் தசரதரிடம் வரலாயினர். வந்தவர் அங்குள்ள தூதனைப்பார்த்து “ தூதனே ! தசரதரிடம் காதிபுத்திரனுகிய விசுவாமித்திரர் வாயிலில் நிற்கின்றூர்என்று தெரிவிப்பா'' யென்றூர். அப்பொழுது அவன் மற்ருெருவனைப் பார்த்து நமது மகாராஜரிடஞ்சென்று “சுவாமியே ! ஒரு பெரிய தபஸ்வியானவர் வாயிலில் நிற்கின்றூர். அவர் தங்களிடம் விசுவாமித்திரர் வந்திருப்பதாகத் தெரிவிக்கச் சொன்னுர் என்று தெரிவிப்பா'' யென்றுன். அதுகேட்ட தூதன் மண்டலேசுவரர்களால் பூஜிக்கப்படுபவரும், பெரிய பெரிய ரிஷிகள், முனிவர்கள், சாதுக்கள், அமைச்சர்கள், மித்திரர்கள் முதலானவர்களால் சூழப்பெற்றுத் தமது

சிம்மாசனத்தில் மகாதேஜசுள்ளவராகப் பிரகாசிப்பவருமாகிய தசரதமகாராஜரிடஞ் சென்று, “ பிரபுவே! மகா தேஜசுள்ளவரும், பாலசூரியனைப்போன்றப் பிரகாசமுள்ளவரும், அருணனையொத்த செஞ்சடையோடு கூடியவருமாகிய ஒருவர் வந்திருக்கின்றார். அவர் எங்கெங்கிருக்கின்றாரோ அங்கங்குள்ள கொடிகள், யானைகள், குதிரைகள், சஸ்திர அஸ்திரங்கள் முதலானவைகளைத் தமது தேஜஸால் சுவர்ணம்போலப் பிரகாசிக்கச் செய்துகொண்டிருக்கிறார். இவரே காதிபுத்திராகிய விசுவாமித்திரராம். வாயிலில் நிற்கின்றார் ” என்றான்.

ஓ, பாத்துவாஜனே! எப்பொழுது தசரதரிடம் தூதன் இவ்வாறு தெரிவித்தானோ அப்பொழுது, மண்டலேசுவரர்களால் சூழப்பெற்று மகா தேஜசுள்ளவராக வீற்றிருந்த அரசன் அதனைக் கேட்டதனால் தமது சுவர்ணசிம்மாசனத்தினின்றும் எழுந்திருந்து பாதசாரியாய்த் தமது பக்கத்தில் வசிஷ்டர் ஒருபுறமும், வாமதேவர் ஒருபுறமுமாகத் தம்மைத் தொடரவும், மண்டலேசுவரர்கள் கட்டியர்களைப் போலத் துதிக்கவும், அவர்களால் சூழப்பெற்று அரண்மனை வாயிலை நோக்கிச் சென்றார். அந்த அவசரத்தில் எங்கு விசுவாமித்திரர் தமது திருஷ்டிக்கு முதல் முதல் புலப்பட்டாரோ அங்கிருந்தே அரசன் அடிக்கடி தமது முடியினைச் சாய்த்து அவ்வாறு முடியினைச்சாய்த்தவிடமெல்லாம்முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றதென்னும்படி நமஸ்கரித்துக்கொண்டே விசுவாமித்திரரிடஞ் சென்றார். விசுவாமித்திரரோ அக்கினிக்கொழுந்து போலப் பிரகாசிக்குந் தமது பருத்த சடைகள் தோள்வரையிற் றாழவும் தமது சரீரம் சொர்ணம் போலப் பிரகாசிக்கவும் இதயத்தில் சாந்தமும்,

கோமளமுமாகிய சுபாவம் வெளிப்படவும் மகா தேஜசுள்ள வராய் அழகான காந்தியுள்ளவராய்ச் சாந்தவடிவினராய்க் கையில் மூங்கிலாலமைத்த கின்னரியை யுடையவராய் மிகுந்த தைரியமுடையவராய்ப் பிரகாசித்துக்கொண்டிருந் தார். இவ்வண்ணமான விசுவாமித்திரரது பாதத்தில் சதா சிவனைச் சூரியன் பணிவதுபோலத் தாழ்ந்து வணங்கித் தசர தர் சொல்லலாயினர்: "இன்றுதமது தரிசனத்தால் எமக்குப் பெரும்பாக்கியங் கிடைத்தது. எம்மீது தாம் பெருத்த அநுக்கிரகஞ் செய்து இருக்கின்றீர். எங்களுக்குப் பேரா நந்தம் பிராப்தமாயிருக்கின்றது. அநாதியும் அநந்தமும் எதுவோ, முதல் இடை கடை என்பவற்றினின்றும் நீங்கி யுள்ள ❋ அவிநாசி எதுவோ அத்தகைய அகிருத்திருமமா கிய ஆநந்தமே தமது தெரிசனத்தால் எனக்குப் பிராப்தமா னதாகக் காணப்படுகின்றது. ஏ, பகவானே! இன்றெனக் குப் பெரும்பாக்கியம் உண்டாயிருக்கின்றது. தாம் எனது க்ஷேமத்தின் பொருட்டு வந்திருப்பதால் நான் தர்மாத்மா வாக வெண்ணப்படுவேன். பகவானே! தமது வரவானது எனது எண்ணத்தில் இருந்ததே கிடையாது. தாம் பெருத்த அநுக்கிரகம் செய்திருக்கின்றீர். சூரியன் ஒரு காரியத்தின் பொருட்டு பூமியில் வந்தது போலத் தாம் இங்கு வந்ததாக நினைக்கிறேன். தம்மிடம் க்ஷத்திரிய சுபாவமும் பிராஹ்ம ணசுபாவமுமாகிய இரண்டுகுணங்களும் விளங்குகின்றன. இவ்விதம் சுபகுணங்கள் நிறைந்தவராயிருத்தலால் தாம் யாவரினும் மேலானவராகக் காணப்படுகின்றீர்கள்.

---

❋ தாற்பரிய மிதுவாம்; தமது தெரிசனத்திலெனக்குண்டாகிய ஆநந்த மெதுவோ அதன் பயனளவின்றியதாம். இதனாலுண்டாகிய ஆநந்தமெதுவோ அவற்றினனுபவமும் எப்பொழுது மிருக்கும்.

முநீச்வரரே! தாம் க்ஷத்திரியராக விருந்து பிராஹ்மணரானதைப்போன்ற சாமர்த்தியத்தை எவரிடமும் யான் கண்டிலேன். தமது சரீரம் பிரகாசமுள்ளதாகக் காணப்படுகின்றது. எந்தெந்தமார்க்கங்களிலெல்லாம் தமது திருஷ்டி பட்டுக்கொண்டு வந்ததோ அந்தந்த மார்க்கங்களிலெல்லாம் அமிருத மழை பெய்துகொண்டே வந்ததாக வெண்ணுகிறேன். முநீச்வரரே! தமதுவரவினாலும்தெரிசனத்தினாலும் எனக்குப் பெருத்த இலாபம் கிடைத்ததென்று எண்ணுகிறேன்” என்றார். ஓ, பரத்துவாஜனே! விசுவாமித்திரரை நோக்கி இவ்விதமாகத் தசரதர் சொன்னார். அக்காலத்தில் வசிஷ்டரும் விசுவாமித்திரரைக் கட்டித் தழுவிக்கொண்டார். மண்டலேசுவரர்களாகிய அங்குநின்ற அரசர்களும் அவரைப் பலவிதங்களால் நமஸ்கரித்தார்கள். இப்படி ஒருவரை யொருவர் சந்தித்து மிக்கக் களிப்படைந்தார்கள். பிறகு தசரதர் விசுவாமித்திரரை உள்ளே அழைத்துவந்து இராஜசிம்மாசனத்தில் அமர்த்தினர். வசிஷ்டர், வாமதேவர் முதலியோரும் அமர்ந்தார்கள். அப்பொழுது தசரதர் விசுவாமித்திரரை அர்க்கியபாத்தியார்ச்சனைகள் பிரதக்ஷிணாதிகளென்பவற்றால் பூஜித்தார். அப்பொழுது வசிஷ்டர் விசுவாமித்திரரையும், விசுவாமித்திரர் வசிஷ்டரையும், இவ்விதமாக ஒருவர்க்கொருவரும் பூஜை செய்துகொண்டார்கள். பிறகு அவரவர்களும் தங்கள் தங்கள் ஆசனத்தமர்ந்தார்கள். அப்பொழுது தசரதர் சொல்லுகிறார்: ‘ஏ, பகவானே! இன்றைக்குப்பெரும்பாக்கியமிருந்தபடியால் தமது தரிசனம் கிடைத்தது. தாபம் அடைந்த ஒருவனுக்கு அமிருதம் கிடைத்ததுபோலவும், பிறவிக்குருடனுக்கு நேத்திரம் கிடைத்து அவன் ஆநந்தமடைவது போலவும், தரித்திரனுக்குச் சிந்தாமணி

கிடைத்து அவன் சந்தோஷமடைவது போலவும், இறந்து போன ஒருவனுடைய பந்து விமானத்தேறி ஆகாயத்தில் வரக்கண்டு அவன் சந்தோஷப்படுவது போலவும், தமது வரவினாலும், தெரிசனத்தினாலும் ஆநந்தமடைந்திருக்கின்றேன். முநீச்வரரே! தமது வருகை எதன்பொருட்டென்பதைக் கிருபைசெய்து சொல்ல வேண்டும். தமது கோரிக்கை பூர்ணமானதாக நினைக்கவேண்டும். ஏனெனில் தமக்குக் கொடுப்பதற்குக் கூடாததான பதார்த்தம் ஒன்றுமேயில்லை. என்னிடமுள்ள பொருள்களெல்லாம் தம்முடையனவென்னுந் தகுதியுடையனவாக விருக்கின்றனவென்று தாம் நிச்சயமாகவெண்ணவேண்டும். தமது கட்டளையை நிறைவேற்றத் தயாராயிருக்கின்றே'' னென்றார்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினாலருளப்பெற்ற ஸ்ரீ யோகவாசிட்ட மகாராமாயணத்தில் தேவதூதனாற் சொல்லப்படும் மோக்ஷோபாயமாகிய வைராக்கியப்பிரகரணத்தின் விசுவாமித்திராகமனவர்ணன மென்னும் மூன்றாவது சர்க்கம் முடிந்தது.



## தசரதவிஷாதவர்ணனம்.

அவதாரிகை:—இராஜனது பிரசம்சையும், முனிவர் யஞ்ஞவிக்னத்தின் சூசனையும், அதன் ரக்ஷணத்தின்பொருட்டு இராமசந்திரரை தசரதரிடம் யாசித்தலும் இதிற் கூறுகின்றார்.

வால்மீகரது வாக்கியம்:—பரத்வாஜா! எப்பொழுது இந்தவிதமாக இராஜனாகிய தசரதர் தெரிவித்தாரோ அப்பொழுது முனிவர்களில், சிரேஷ்டராகிய விசுவாமித்திரர் சந்தோஷமடைந்தார். அதனால் அவருக்கு மயிர்க்கூச்சலுண்டாகவே பூரணச்சந்திரனைக்கண்டு பாற்கடல் சந்தோஷிப்பதுபோல மேலுஞ் சந்தோஷமுடையவராய் அவர்சொன்னதாவது: "ஏ, இராஜசிம்மமே! உம்மிடம் இரண்டு குணங்கள் சிரேஷ்டமாக விருக்கின்றன, ஒன்று தாம் இரகுவம்சஸ்தராக விருப்பது. மற்றையதோ ஸ்ரீவசிஷ்டர் தமக்குக் குருவாக அமைந்திருக்கவும் தாம் அவரது ஆணையின்படி நடந்துவருகின்றீர் என்பதே. இவற்றால் தாம் ஏன் தன்னியராகக்கூடாது? தாம் தன்னியரே! ஏ, இராஜனே! நான் வேண்டிவந்த பிரயோஜனமெதுவோ அதைத் தம்முன் வெளிப்படுத்துகிறேன்; கேட்பீராக: நான் பத்திரவு யாகம் செய்வதாக ஏற்பாடு செய்திருக்கின்றேன். அதனை ஆரம்பிக்கும் பொழுதெல்லாம் யாகசாலையினிடமாகக் காதூஷணரென்னும் இராக்ஷஸர்கள் வந்து எனது யாகத்தினை நாசஞ் செய்கின்றார்கள். எங்கெங்கு யஞ்ஞ மாரம்பிக்கின்றேனோ அங்கங்கும் அவர்கள் வந்து இரக்தம், மாமிசம், எலும்பு

என்பவைகளைச் சிந்தி அந்தவிடங்களையெல்லாம் யஞ்ஞஞ் செய்வதற்குத் தகுதி யில்லாதனவாக்கி அசுத்தப்படுத்திச் செல்லுகின்றார்கள். அதைவிட்டு வேற்று பிரதேசங்களில் ஆரம்பித்தபோதிலுா் அவ்வவ்விடங்கட்கும்அதேப்பிரகாரந் தொடர்ந்து வருகிறார்கள். ஆனதால் அவர்களை நாசஞ்செய்ய வேண்டித் தம்மிடம் வந்தேன். ஒருக்கால் 'நீரும் அவர்களை சிக்ஷிப்பதில் சாமர்த்திய முடையராவீரே' யென்று என்னைக் குறித்துச் சொல்லுவீராயின், வேந்தனே! யானோ யஞ்ஞத்தை யாரம்பித்திருப்பவனாயிருக்கின்றேன். அதற்கு க்ஷமை (பொறுமை) முக்கிய அங்கமாம். ஆகையால் அவர்களுக்கு நான் *சாபம் கொடுப்பேனேயாயின் அவர்கள் அதனால் சாம்பலாய் விடுவார்களென்றபோதிலும் அந்தச்சாபமும் குரோதமின்றி யுண்டாவதற்கில்லை. ஆதலால் அக்குரோதத்தால் எனது யஞ்ஞம் பயனற்றதாகின்றது. சும்மாவிருந்தாலோ அவர்கள் யஞ்ஞங்களை அசுத்தமாக்கிச் செல்லுகிறார்கள். ஆனதால் தம்மைச் சரணடைந்திருக்கின்றேன். எனது காரியங்களை முடிவடையச் செய்யும். இராஜனே! தம்முடைய புத்திரர் இராமசந்திரரோ கமலநயனமும் காகபக்ஷமு முடையவராக விருக்கின்றார்; அவரை என்னுடனனுப்பும். அவர் இராக்ஷஸர்களை நாசஞ்செய்வார். அதனாலென்னுடைய யாகமும் பயனுள்ளதாகும். தம் குழந்தை சிறுவராயிருக்கிறாரென்று நினைத்து நீர் சோகப்படவேண்டாம். இவர் இந்திரனுக்குச் சமமான சூரவீரர். இவருக்கெதிரில் அந்த இராக்ஷஸர்கள் சிம்மத்தின் முன் மான்குட்டிகள்

---

* சாபம் கொடுப்பதால் தபத்தின் பயன் கெடுகின்றது; யஞ்ஞமும் முடிவடைவதின்றதில்லை.

நிற்காதனபோல நிற்கமாட்டார்கள். ஆனதால் தாம் இவரை என்னுடனனுப்பும். உமது தர்மமும் கீர்த்தியும் வளரும்; எனது காரியமும் நிறைவேறும் என்பதில் சந்தேகமேயில்லை. இராஜனே! இந்த மூன்றுலகத்திலும் இராமசந்திரரால் ஆகாத காரியம் ஒன்று மில்லையென்றறிந்தே நான் அவரைக் கொண்டுபோகின்றேன். இவர் என் பாதுகாப்பிற் குட்பட்டிருப்பார். இவருக்கொரு விக்கினமும் நேரிடாதபடி பாதுகாப்பேன். தமது புத்திரர் பரப்பிரஹ்ம வஸ்து வென்று யானறிவேன்;. வசிஷ்டர் அறிவார். திரிகாலவர்த்தமானங்களையும் கண்டறியக்கூடிய ஞானிகளும் இவரை யறிவார்கள். இவர்களைத் தவிர மற்றெவர்களுக்கும் இவரை யறிந்துகொள்ளுஞ் சாமர்த்தியமில்லை. ஆனதால் எனது காரிய சித்தியின் பொருட்டு இவரை என்னுடனனுப்பும். சமயங்கண்டுஎ, இராஜனே! எவன் காரியஞ் செய்கின்றானோ அவனுடைய அக்காரியம் அற்பமாக விருந்தாலும் பெரிய சித்தியைத் தருவதாகின்றது. துதியைச்சந்திரனைக் கண்டு ஒருவன் ஓர் நூலிழையை அர்ப்பணஞ்செய்வானாயின் (தானமாகக் கொடுப்பானாயின்) அது அற்பமாயினும் எப்படி அதிகமாகிய பலனைக் கொடுக்கின்றதோ, மற்றைய நாட்களில் முழுவஸ்திரங்களைத் தானமாகத் தந்தபோதிலும் அதேவிதமான பயன் எப்படி சித்திக்கிறதில்லையோ, அப்படியே சமயத்திற் செய்யும் காரியம் அற்பமாயினும் அதிக சித்தியைத் தருகின்றது. சமயமின்றியபோது பெரியகாரியங்களும் சொற்ப பயனையே தருவனவாகின்றன. ஆதலால் தாமிப்பொழுது என்னுடன் இராமரை யனுப்பும். எப்பொழுது இராமர் என்னுடன் வருகின்றாரோ அப்பொழுது கரதூஷணரென்னும் பெரிய

தைத்தியர்களும் அவர்முன் னிற்கச் சத்தியற்று ஓடிப்போவார்கள். சூரியப்பிரகாசத்தின் முன் னக்ஷத்திரப்பிரகாசம் மறைந்துபோவதுபோல இவரது தேஜஸுக்குமுன் அவர்களெல்லோரும் அற்பமேயாவர்கள். கருடனைக்கண்ட சர்ப்பம் ஓடுவது போல இராமரைக் கண்டதும் ஓடிப்போவார்கள். ஆனதால் எனதுகாரியசித்தியின் பொருட்டு என்னுடனனுப்பும். உமது தர்மமும் நிலைநிற்கும். இராமரின் பொருட்டுத் தாம் சந்தேகங்கொள்ள வேண்டாம். இராமசந்திரரது முன்னிற்பதற்கு அந்த இராக்ஷசர்களுக்குச் சாமர்த்தியம் சற்றுமில்லை. இராமசந்திரரை யானுமிரக்ஷிக்கிறேனென்றார்.

பரத்துவாஜா! இப்படி விசுவாமித்திரர் சொல்லுவதைத் தசரதர்கேட்டுச் சும்மாவிருந்து பிறகு மூர்ச்சித்துக் கீழே விழுந்து ஒரு முகூர்த்தம்வரையில் அசேதனமா மிருந்தார்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
தசரதவிஷாதவர்ணனமென்னும்
நான்காவது சர்க்கம் முடிந்தது.



## தசரதோக்திவர்ணனம்.

அவதாரிகை:—அரசன் இராவணாதியரின் பலத்தை யறிந்திருப்பதால் ஸ்ரீராமசந்திரருக்கு யுத்தத்தில் அவர்களை எதிர்க்கும் ஆற்றலின்று எனக்கூறுதலும், புத்திரவாஞ்சையால் அரசனுரைத்தலும் இதிற் கூறப்படுகின்றன.

வால்மீகர் சொல்லலாயினர்:—பரத்வாஜா! இவ்வாறான தசரதர் ஒரு முகூர்த்தகாலஞ்சென்றெழுந்து மகாதீனனைப் போன்று மகாமோகத்தில் மூழ்கியிருந்ததால் தைரியமிழந்தவராய்ச் சொல்லலாயினர்.

தசரதர்:—முநீசுவரரே! தாம் இப்பொழுது என்ன வார்த்தை சொன்னீர்! இராமசந்திரரோ குமாரப் பருவத்தோடுகூடியவர் மேலும் அஸ்திரசஸ்திர வித்தைகளையுங் கற்றவரல்லர். புஷ்பசயநத்திலேயே சயனஞ்செய்யும் பழக்கமுடைய செல்வக்குழந்தை. இவர் எங்ஙனம் யுத்தத்தினை யறியவல்லவராவர்? அந்தப்புரத்தில் ஸ்திரீகளின் பக்கத்திலிருந்தே வளர்ந்துவருபவராகவும் இராஜகுமாரர்களோடு எப்பொழுதும் விளையாடிக் கொண்டிருப்பவராகவு மிருக்கின்றார். ஒருபோதும் இவர் இரணபூமியைப் பார்த்ததேயில்லை; ஒருபோதும் புருவநெரித்து யுத்தஞ் செய்ததுமில்லை. தாமரைபோன்ற கைகளையும் மிருதுவான சரீரத்தையுமுடையவராகு மிவர் இராக்ஷதர்களோடு எவ்வண்ணம் யுத்தஞ் செய்வார்? மெல்லிய தாமரைக்கும் கடினமான கல்லுக்கும் யுத்தம் நடத்தல் எங்ஙனம் பொருந்தும்? இராமசந்திரரது சரீரம் தாமரையைப்போன்று மிக்க கோமளமா

யிருக்கின்றது. இராக்ஷதர்களோ மிகக்கொடிய சிலையைப் போன்றிருக்கின்றார்கள். அவர்களோடு இவர் யுத்தஞ்செய்வதென்பது எவ்வாறு கூடும்? எனக்குப் புத்திரவிச்சையினால் ஒன்பதினாயிர வருஷங்கள் கழிந்து பதினாயிர வருஷங்கள் நடக்கின்றன; இப்பொழுது விருத்தனாயிருக்கின்றேன். இந்த விருத்தாவஸ்தையில் எனக்கு நான்கு புத்திரர்களுண்டாயிருக்கின்றார்கள். இவர்களோ வெகு பாலியர்கள். இவர்களில் கமலநயனரான இராமசந்திரருக்கு இப்பொழுது பதினாறுவது ஆண்டு நடக்கின்றது. இவர் எனக்கு மிகுந்த பிரியத்திற் குரியவர்; எனது பிராணன். நான் ஒரு கணமும் இவரைப் பிரிந்திருக்கச் சகியேன். இவரைத் தாங்கள் அழைத்துச் செல்வீர்களானால் என் பிராணனும் இவரோடே வெளிப்பட்டுவிடும்; நான் மரணமடைந்துவிடுவேன். முனீசுவரரே! இவரிடம் அன்பு செலுத்துவதில் நான்மாத்திரமன்று; இவரது தம்பிகளான இலக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர், தாய்மார்கள்முதலான எல்லோருக்கும் இவரே பிராணனாக விருக்கின்றார். தாம் இராமரை அழைத்துப்போவீராயின் நாங்களெல்லோரும் மரிப்போம்; இது நிச்சயம். பிரிவினையைச்செய்து எங்களைக் கொல்லவேண்டிய எண்ணத்துடன் தாம் இங்கு வந்திருந்தால் இவரை அழைத்துச்செல்லும். முனீசுவரே! என் சித்தத்தில் இராமரே நிறைந்திருக்கின்றார். இவரைத்தம்முடன் எவ்வாறு அனுப்புவேன்! பூரணசந்திரனைக் கண்டு பாற்கடல் சந்தோஷிப்பதுபோலவும், சந்திரனைக் கண்டு சகோரப்புள் சந்தோஷிப்பதுபோலவும், மேகத்துளியைக் கண்டு சாதகப்பக்ஷி சந்தோஷிப்பதுபோலவும் நான் அவரை அடிக்கடிப் பார்த்துப்பார்த்துச்சந்தோஷித்துக் கொண்டிருக்கின்றேன்.

இவரைப் பிரிந்து எப்படி என் உயிர்தரிக்கும் ? முநீசுவரரே! எனக்கு இராமரிடத்திலுள்ளதைப் போன்ற பிரியம் ஸ்திரீகளிடத்தும் கிடையாது; தனத்தினிடத்தும் கிடையாது; இராஜ்ஜியத்தினிடத்துங் கிடையாது; மற்ற எந்த வஸ்துக்களிலுமேகிடையாது. இராமர் எனக்கு இப்பேர்ப்பட்டவராயிருக்கிறபடியால் ஏ, முநிநாயகமே! தமது வார்த்தையைக் கேட்டதால் எனக்குப் பெருத்த சோகம் உண்டாகிவிட்டது. தமது வரவானது எனது தூர்ப்பாக்கியத்தின் பொருட்டென்றே இப்பொழுது நினைக்கவேண்டியிருக்கின்றது. தமது வசனத்தைக் கேட்டதால் தாமரையின்மீது பனிபெய்யவே அது நஷ்டமடைவதுபோல எனக்குத் துன்பமேவிளைவிக்கின்றது; பனியினால் நஷ்டமடைந்த தாமரையினைப்போன்று நான் பெருத்த நஷ்டத்திற்குள்ளாயினேன். பருத்தமேகமானது ஆகாயத்திற்கிளம்பிச்செல்லும்பொழுது பெரியகாற்றுப் பிரவேசித்து அதன் கெம்பீரத்தன்மையைக் கெடுப்பதுபோல உமது இந்த வாக்கியத்தினால் எனக்கிருந்த பெருத்த சந்தோஷம் கெட்டுப்போய்விட்டது. வசந்தருதுவிலுண்டான கொடிகள் கிரீஷ்மருதுவில் (ஆனி ஆடி மாதங்களில்) கருகிப்போவதுபோல உமது வசனத்தைக் கேட்டு எனது மனதின் கண்ணுள்ள சந்தோஷமானது கருகுகின்றது. முநீசுவரரே! இராமசந்திரரை தம்முடனனுப்புஞ் சாமர்த்தியம் அடியேனிடத்தில்லை. தாம் சம்மதங் கொடுப்பீராயின் *சஸ்திரவித்தை §அஸ்திரவித்தை மந்திரவித்

---

* வாள் முதலியவற்றைக்கரத்திற் றாங்கி யுத்தஞ்செய்வதைக் கூறுவது சஸ்திரவித்தை.

§ கையினின்றும் அம்பு முதலானவற்றை எய்துஎதிரிகளைக் கொல்வதினைக் கூறுவது அஸ்திரவித்தை.

தைகளிற் றேர்ந்த சதுரர்களாகிய மகாசூரர்களால் நிறைந்த யானை தேர் குதிரை காலாட்களாகிய சதுரங்கங்களோடு கூடிய ஒரு ‡ அக்ஷோகிணி சேனையுடன் நானே தம்முடன் வருகின்மீறன். ஒருக்கால் தமது யஞ்ஞத்தை நாசஞ்செய் பவன் குபேரனுக்கு பந்துவும் விசிரவசுவின் புத்திரனுமான இராவணனுயிருந்தாலோ அவனை ஜெயிக்கும் ஆற்ற லடியே னிடத்திலில்லை. பூர்வம் என்னை ஜெயிக்கு மெண்ணத்தா லென்னை எதிர்த்தவர்களை யெல்லாம் நான் நாசஞ்செய்து கொண்டே வந்தேன். இப்பொழுதோ விருத்தாவஸ்தை யால் சரீரம் தளர்வுற்றிருக்கின்றது. இக்காரணத்தால் இராவணனை எதிர்க்கு மாற்றல் என்னிடத்திலில்லை. முனீசு வரரே! தமது வரவானது எனது துர்ப்பாக்கியத்தின் பொ ருட்டுண்டானதென் றெண்ணுகின்றேன். இப்பொழுதோ எனக்கு முன்போலப் பராக்கிரமமில்லை. இராவணனைக் கண்டு பயப்படுகிறேன். நான்மாத்திர மல்ல; இந்திராதி தேவதைகளும் நடுங்குகிறார்கள். இராக்ஷதர்களெல்லோ ரும் அவன் வசப்பட்டு நடக்கின்றார்கள். இக்காலத்தில் இராவணனோடு யுத்தஞ் செய்யுஞ் சக்தி யாருக்கிருக்கின்றது! தற்சமயம் அவனே பெரிய சூரவீரனு யிருக்கின்றான். முனீசுவரரே! அவனை ஜெயிப்பதற்கு அடியேனுக்கே ஆற்ற லில்லை யென்றால் இந்த இராஜகுமாரராகிய இராமசந்திரருக் கெங்கிருந் துண்டாகும்? அல்லது மதுவின் புத்திரனும்

---

‡ பதினாயிரம் யானை, முப்பதினாயிரம் தேர், பரிமீதேறிபெரும் போர்செய்யும் வீரர் பத்துலக்ஷம், முப்பத்தாறுகோடி பதாதிகள் கூடிய சேனாசமூகத்தை ஒரு அக்ஷோகிணி என்பர்.

அசுரர்களில் சிரேஷ்டனுமான இலவணனென்னு மிராக்ஷத னெனிலோ அவன் தமது யஞ்ஞத்தைக் கெடுக்கமாட்டான். அப்படி ஒருவேளை கெடுப்பானுயின் அவனிடமும் எனது பிரிய புத்திரனை யனுப்பமாட்டேன். மற்றும் இயமனை யொத்த சுந்தோபசுந்த புத்திரர்களாகிய சுபாகு மாரீச னென்பவர்களும் தங்களுடைய யாகத்தைக் கெடுக்கும் எண்ண முடையவர்களல்ல. அல்லாமல் அவர்களே தங்க ளுக்கு எதிரிகளாக வருவதாயின் அவர்களை யுத்தேசித்தும் தம்முடன் எனது தயாபாத்திரரான இராமசந்திரரை ஒரு நாளும் அனுப்பவே மாட்டேன். மேலும் எந்த இராம சந்திரரை என்னிடம் யாசிக்கவந்தீரோ அவர் இப்போது அசௌக்கிய முடையவராகவு மிருக்கின்ருர். அவரிடம் ஏதோ ஓர் சிந்தை குடிகோண்டிருக்கின்றது. அவர் மிக துர்ப்பலராகவுமிருக்கின்ருர். அந்தப்புரத்தில் ஏகாந்தத்தில் எப்பொழுதும் தனித்தே யிருக்கின்ருர். இராஜகுமாரர் களுக்குரிய உண்டல் உடுத்தல் முதலான சகலசேஷ்டைகளும் அவருக்கு விரசமாகத் தோற்றுகின்றன. அவருக்கு இன்ன வாறு துக்கம் உண்டாயின தென்பதையும் என்னல் அறியக் கூடவில்லை. தாமரை மலர் காய்ந்து வெண்ணிற மாவது போல் அவர்முகம் மிக வெளுத்திருக்கின்றது. இவற்று லெல்லாம் அவருக்குப் போர்செய்வதில் சற்றுஞ் சாமர்த்திய மில்லை யென்று நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? தானிருக்கு மிடத்தை யல்லாது வெளிப் பிரதேசத்தைச் சற்றும் காணுதவர் எப்படி யுத்தஞ்செய்யவல்லவராவர்? முனீசுவரரே! ஆகையால் யுத்தஞ் செய்யுஞ் சாமர்த்திய மில்லாதவரும் எங்களெல்லோருக்கும் பிராணனுகவு மிருக்கு மிவரை விட்டுப்பிரிந்து எங்ஙனம் உயிர்தரிப்போம்!

ஜலமின்றி மச்சங்கள் உயிர்தரியாதன போல யாம் இராம சந்திரரை யின்றி உயிர்தரியேம். இராக்ஷதர்களோடு போர் செய்ய யான் வருகின்றேன். இராமசந்திரரோ அவ்விஷயத் திற் றகுதியற்றவராயிருக்கின்றார்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
தசரதோக்திவர்ணனமென்னும்
ஐந்தாவது சர்க்கம் முடிந்தது.



## இராமசமாஜவர்ணனம்.

அவதாரிகை:—இராக்ஷதர்களின் மகிமையையும் பலத்தையும் கூறக் கேட்டதால் விசுவாமித்திரருக் குண்டான கோபமும், வசிஷ்டர் இராமருக்குக் கொஞ்சங் கொஞ்சமாகச் சமாதானஞ் செய்து கலக்கத்தை நீக்கி தைரியப்படுத்த முயலுதலும் கூறப்படுகின்றன.

வால்மீகர்:—பரத்வாஜா! எப்பொழுது தசரதர் மகா தீனனைப்போல மோகத்தால் தைரியமிழந்தவராய் இவ்வாறுரைத்தாரோ அப்பொழுது அவ்வார்த்தையினைக் கேட்ட விசுவாமித்திரர் அடக்கொணுக் கோபவசத்தராய்ச் சொன்னதாவது: "இராஜனே! உமக்குரிய நீதியினை நன்றாய் ஞாபகப் படுத்திக்கொள்ளும். தாம் என்னைக் கண்ட அந்தக்ஷணத்திலேயே, 'தாம் எதைஅபேக்ஷித்து வந்தீரோ அது பூர்ணமாயிற்றென்று நினைத்துக்கொள்ளு' மென்று சொல்லிமுடித்தீர். இப்பொழுதோ தமது தர்மத்தை முற்றிலும் அகற்றிவிட்டீர். சிம்மம்போன் றிருக்கவேண்டிய நீர் நரியைப் போன்று ஓடுவேனென்றால் ஓடும்! ஆனால் இந்த இரகுவம்சத்தில் ஒருவரும் தம்மைப்போல் இருந்ததேயில்லை. சந்திர மண்டலத்தில் குளிர்ச்சியேயன்றி அக்நி வெளிப்படாதது போல உமது குலத்தில் ஒருபோதும் இப்படி ஏற்பட்டிருந்ததேயில்லை. நீர் உம்மிஷ்டப்பிரகாரஞ் செய்யும். நான் எழுந்து செல்லுகின்றேன். சூநியமான வீட்டைச் சூநியமே சென்

றடையும். ஆனல் இது தமக்கு யோக்கியமானதல்ல! நீர் இருந்து சௌக்கியமாய் இராஜ்ஜியத்தை நடத்திக்கொண்டிரும். மேல் எது நடக்கவேண்டு மென்பதை யான் நன்றாயறிவேன். தாமே தம் தர்மத்தைவிடுவதென்றால் விடும்" என்றார். ஓ, பரத்வாஜ! இந்தவிதமாகப் பூர்ண கோபத்தோடு விசுவாமித்திரர் எப்பொழுது தெரிவித்தாரோ அப்பொழுது ஐம்பதுகோடி பிருதிவிகளும் நடுங்கின. இந்திராதிதேவர்களும் இதெவ்வாருமோவென்று நடுங்கினார்கள். அப்பொழுது வசிஷ்டபகவான், இராஜனாகிய தசரதரை நோக்கிச் சொல்லுகின்றார்.

வசிஷ்டர்:—இராஜனே! இந்த இக்ஷுவாகு குலத்தில் இதுவரையில் தோன்றியவர்க ளெல்லோரும் பரமார்த்தத்தை யடைந்தவர்களேயானார்கள். ஆனல் தசரதராகிய தாம் மாத்திரம் என் தமது தர்மத்தைக் கைவிடுகின்றீர்? சற்று முன் னென் னெதிரிலேயே விசுவாமித்திரரை நோக்கி "உமது இச்சை யெதுவோ அதனைப் பூர்ணஞ்செய்வே" னென்று.தெரிவித்துவிட்டு இப்பொழுது ஏன் பின்வாங்குகின்றீர் ? இராமசந்திரரை இவரோ டனுப்பும். சர்ப்பங்களினின்றும் அமிருதத்தைக் கருடன் இரக்ஷிப்பதுபோல இவர் தமது புத்திரரைப் பாதுகாப்பார். இவர் எத்தன்மையரென்பதைக் கேட்பீராக: இவருக்குச் சமமான பலம் எவருக்கு மில்லை. சாக்ஷாத்து பலமே ஓர் உருவெடுத்து வந்தவர். மேலும் இவர் தர்மாத்மா. சர்வதர்மங்களும் நேரே ஓர் உருக்கொண்டெழுந்தவர். இவரைப் போன்ற தபசுவி வேறெவருமில்லை, இவர் தவத்திற்கு ஓர் பொக்கிஷமாவர். இவரைப்போன்ற புத்திமானும் ஞானத்தினல் பிரஹ்மத்தை

யடைந்ததால் இவருக்குச் சமானமானவரும் ஒருவரும் இல்லை. இவரைப் போன்ற சூரர் எவருமில்லை, ஏனெனின் இவர் ஆதியில் இராஜ்ஜிய மாளும்பொழுது கிருசாசுவ ரென்பவர் இவருக்கு ஓர் அஸ்திரத்தினைக் கொடுத்திருந்தார், அவ்வஸ்திரமானது பிரஜாபதியின் புத்திரரைப் போல வீரமும் பிரகாசமும் மகாதேஜஸுமுடையதாய் ஓர் சேவகனைப் போல இவரைச் சதாசேவித்துக் கொண்டிருந் தது. மேலும் தக்ஷப்பிரஜாபதிக்கு ஜயை சுப்பிரபையென்று இரண்டு புத்திரிகளிருந்தார்கள். அவ்விருவரையும் அவர் இந்த இருஷிக்குக் கொடுத்திருக்கின்றார். ஜயை யென் பவளினின்றுங் காமசாரர்களாகிய (இச்சித்த வடிவெடுக்கக் கூடிய) 500 புத்திரர்களையும் சுப்பிரபை என்பவளினின்றும் 500 புத்திரர்களையும் மீண்டும் போருக்கஞ்சாத பயங்கரவடி வுடைய சங்கர்ஷணரென்னும் பெயரால் 50 புத்திரர்களையும் உண்டாக்கியிருக்கின்றார். அந்த ஸ்திரீகளும் இவரது முன்னிலையில் மூர்த்திகரித்து நிற்கின்றார்கள். ஆனதால் இவரை ஜெயிப்பதற்கு எவர்க்குஞ் சாமர்த்தியமில்லை. எவர்களுக்குத் துணையாக விசுவாமித்திரரிருக் கின்றாரோ? அவர்களுக்கு மூன்று லோகங்களிலும் பயமில்லை. ஆதலால் இவரோடு தமது புத்திரரையனுப்பும் சம்சயம் வேண்டாம். இவரது சகாயமிருக்கும்போது தமது புத்திரரை ஒருவரும் ஒன்றுமே செய்யமுடியாது. இவருடைய திருஷ்டி பட்ட மாத்திரத்தாலேயே சூரியனுதயமாவதால் இருள்கெடுவது போல சர்வதுக்கங்களும் நசித்துவிடும். இராஜனே! இவ ருடனிருப்பதால் தமது புத்திரனுக்குத் துன்பமெங் கிருந் துண்டாகும்? தாம் இக்ஷுவாகுகுலத்திற்பிறந்தவரா கவும் தசரதனென்னும் பெயருடையவராகவு மிருக்கின்றீர்.

தாமே தமது தர்மத்தை நிலைபெறச் செய்யாவிடின் மற்ற ஜீவர்களது தர்மபரிபாலனம் எவ்வாறு நடைபெறும்? சிரேஷ்டமான புருஷர்கள் எவ்வாறு நடக்கின்றார்களோ அவ்வாறே மற்ற ஜீவர்களும் நடக்க வாரம்பிக்கின்றார்கள். தம்மைப்போன்றவர்கள் சொன்னசொற்களைக் காப்பாற்றார்களாயின் வேறெவர்களால் என்ன கூடும்? தமது குலத்திலுள்ளவர்கள் இதுவரையில் சொன்ன சொற்களைத் தவிர்த்துநடந்ததே கிடையாது. ஆனதால் தமது தர்மத்தை விடுவது தமக்குத்தகுதியன்று தமது புத்திரனை இவருக்குத் துணையாகக்கொடும். தாம் இவரது இளம் பருவத்தை யுத்தேசித்து பயமும் சோகமு முடையவராயினும் இதனை மாத்திரம் மறுத்துரைக்கவேண்டாம். காலன் உருக்கொண்டு எதிர்நின்றானாயினும் விசுவாமித்திரரதுமுன்னிலையில் தமது புத்திரனுக் கொன்று முண்டாகாது. தாம் சோகங்கொள்ள வேண்டாம். தமது புத்திரரை இவருடனனுப்பும். தாம் அனுப்பாவிடில் இரண்டு விதமாகத் தமது தனம் நஷ்டமடையும். முதலாவது: கூபம் (கிணறு), தடைவாவி, குளம் முதலானவற்றை ஏற்படுத்திய புண்ணிய மெதுவோ அது நஷ்டமாகும். இரண்டாவது: தவம், விரதம், யஞ்ஞம், தானம், ஸ்நானமுதலான புண்ணிய கிரிகைகளினாலுண்டாகும் சர்வ நற்பலன்களும் நஷ்டமாகும். தமது வீடும் பிரயோசனமற்றதாகும். ஆதலால் சோகங்களை விட்டுத் தமது தர்மத்தை ஸ்மரித்து (பிரயத்தனத்தால் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து) இராமசந்திரரை இவரோடனுப்பும்; அனுப்பும். தமது சர்வகாரியங்களும் பயனுடையனவாகும். இராஜனே! இப்படித் தாம் செய்வதாக விருந்தால் ஆதியில் விசாரஞ் செய்தே சொல்லியிருக்கவேண்டும்.

ஏனென்றால், விசாரமின்றிய காரியத்தின் பரிணாமமானது எவ்விதத்தும் துக்கவடிவே யாகின்றது. ஆனதால் இவரோடு தமது புத்திரனைச் சிக்கிரம் அனுப்பும்.

அவதாரிகை:—இராஜனாலனுப்பப்பட்ட ஓர் தூதன் இராமசந்திரரது செய்கையினை அந்தப்புரத்திற் சென்றறிந்து மீண்டும் வந்து இராஜனிட மறிவித்தல் முதலாயின கூறப்படுகின்றன.

வால்மீகர் சொல்லாயினர்:—ஏ, பரத்துவாஜா! எப்பொழுது வசிஷ்டர் இவ்வாறு தெரிவித்தாரோ அப்பொழுது தசரதராஜன் தைரியங்கொண்டு சிரேஷ்டமான ஓர் தூதனை அழைத்துச் சொன்னதாவது: "ஏ, மகாபாகுவே! இராமசந்திரரை அழைத்து வருக" வென்றார். அச்சமயம் அவரருகிலிருந்துகொண்டு, அந்தப்புரத்திற்குள்ளிலும் வெளியிலும் போக்குவரத்தையுடையவனுயுமிருந்த சஞ்சல சுபாவமின்றிய அந்தத் தூதன் மகாராஜா உத்தரவின்பேரில் இராமசந்திரரிடம் விரைவிற்சென்று ஒரு முகூர்த்தகாலங் கிரமித்துத் திரும்பிவந்து அரசனிடம் தெரிவித்ததாவது: "தேவனே! இராமசந்திரர் ஆழ்ந்த சிந்தையில் மூழ்கியிருக்கின்றார். நான் அவரிடஞ் சென்று தாங்கள் செல்லவேண்டு மென்று பன்முறையுந் தெரிவித்தேன். அதற்கவர் 'ஏது செல்லுகின்ற' தென்று சொல்விட்டு மீண்டும் மௌனமாயிருக்கின்றார்" என்றான். ஏ, பரத்வாஜா! இந்தவிதமாகத் தூதன் சொல்லக்கேட்ட அரசன் 'நல்லது இராமசந்திருடைய மந்திரிகளையுந் தூதர்களையுந் தருவியு' மெனவே அவர்களும் அவ்வாறே அங்குவந்து அரசனது முன்னிற்க அரசன் அவர்களை நோக்கி மிக்க ஆதரவோடு

மிருதுவான வசனங்களால் யுக்தியோடுஞ் சொல்லலாயினர்: "இராமசந்திருக்குப் பிரியமானவர்களே! எனது இராம சந்திரருக்கு என்ன நேர்ந்தது? இந்த நிலைமை அவருக்கெ தன்பொருட்டுண்டானது? இவ்வெல்லாவற்றையும் கிரம மாகத் தெரிவியுங்களென்றார்.

மந்திரிகள்:—தேவனே! நாம் என்ன சொல்லுவோம்! எமது எஜமானராகிய இராமசந்திரர் பெருத்த சிந்தையில் மூழ்கியிருப்பதால் நாங்கள் எல்லோரும் தங்கள் திருஷ்டிக்கு மாத்திரம் பிராணனைத் தரித்திருப்பவர்களாகக் காணப் படுகின்றோமே யொழிய உண்மையில் மரித்தவர்களாகவே யிருக்கின்றோம். மகாராஜாவே! என்றைக்கு இரகுநாதர் தீர்த்த யாத்திரையை முடித்து அரண்மனை வந்தடைந் தாரோ அன்று முதலே இவருக்கு இவ்விதம் சிந்தை யுண்டானதென்று யூகிக்கின்றோம். உத்தம போஜன பதார்த்தங்கள், உயர்ந்த பானங்கள், அலங்காரமான ஆடை யாபரணாதிகள், வேடிக்கை விநோதங்களென்னு மிவற்றில் எதனை யெதனை அவர்முன் கொண்டு போகின்றோமோ அவற்றை யெல்லாம் அவர்காண்பதால் கோபித்தல்மாத்திரத் தினையே செய்கின்றார். சுகசாதனமானவைகளை முற்றிலும் நிராதரவுசெய்கின்றார். உயர்ந்த மணிகளாலிழைக்கப்பட்ட ஆபரணங்கள் அந்தப்புரத்தில் இவரது மாதாவினால் இவ ருக்களிக்கப்படினும் அவற்றினையுஞ் சற்றும் இலக்ஷியஞ் செய்யாது கண்டவிடங்களிலெல்லாம் எறிந்துவிடுகின்றார்; இல்லையென்றால் அவற்றை ஏழைகளுக்குக் கொடுத்து விடு கின்றார். எந்தப் பதார்த்தங்களாலும் இவருக்குச்சந்தோஷ மெனபது உண்டாகிறதேயில்லை. பலவிதப் பணிகள் பூண்டு பலரையும் மோகிக்கச் செய்யும் அழகுள்ள ஸ்திரீகள் இவர்

முன்னின்று பலவேறுபட்ட ஆடல் பாடல்களைச் செய்யினும் அவற்றினையும் விஷம்போலெண்ணுகிறார். சாதகப்பக்ஷிகள் மேகத்துளியொழிந்த மற்றைய ஜலங்களை இரும்பியும் பாரா தனபோல இவர் இவ்விஷயசாதனங்க ளெல்லாவற்றையுஞ் சற்றும் பார்க்கின்றதில்லை. அந்தப்புரத்தினின்றும் ஸ்திரீகள் இவரது கண்ணிற்படும்படியாக வெளிவந்தால் அவர்களைக் கண்டு கோபித்துக்கொள்வார். மகாராஜாவே! இவருக் கெதுவும் நலமுடையதாகத் தோற்றுகிறதில்லை. மற்றெது வோ ஒரு சிந்தையில் மூழ்கி யிருக்கின்றார். உண்டல் உடுத்தல் முதலானவைகளில் இவருக்குச் சற்றும் இச்சையே யில்லை. ஒருநாளும் திருப்தியாகப் புசித்ததே கிடையாது; பசியோடேயிருக்கின்றார். இராஜ்ஜியத்திலு மிச்சை யில்லை. இந்திராதிகளின் சுகங்களிலு மிச்சையில்லை. உன்மத்த (வெறிகொண்டவ)னைப் போன்றிருக்கின்றார். சுகத்திற் கேதுவான புஷ்பமுதலானவைகளை எங்களில் யாராயினும் அவரிடம் கொண்டுபோனால் அதனாலும் கோபமுறுவர். இவருக்கு எவ்வகையால் இச்சிந்தையுண்டாயினதென்பதை நாங்க ளறிந்துகொள்ளவுங்கூடவில்லை. ஓர் அறையில் பத்மாசனஞ் சேர்த்து இடது உள்ளங்கையில் கன்னத்தை வைத்துக் கொண்டு சூநியமனத்தராக வீற்றிருக்கின்றார். பெரிய மந்திரிகள் வந்து ஏதாவது கேட்டால் அப்பொழு தவர்களைப் பார்த்து "நீங்கள் எதனைச் சம்பத்தென்கின்றீர் களோ அது ஆபத்தின் காரணமாம். எதனை ஆபத்தென் கின்றீர்களோ அது ஒரு நாளும் ஆபத்தாகிறதில்லை. எந்த நாநாவிதமாகிய சம்சாரபதார்த்தங்களை மிகுந்த இரமணீய மானவையாகக் கருதுகிறீர்களோ அவ்வெல்லாம் பொய்யே! இச்சம்சாரத்தில் அறியாமையிலேயே சகலரும் மூழ்கி

யிருக்கின்றார்கள். இவ்வெல்லாம்கானற்சலத்தினை யொத்த தாம். இதனைச் சத்திய மெனக்கருதிச் சகலரும் மதியற்ற மானானது எங்கெங்கும் ஓடித் துக்கமடைவதைப் போல துக்கமடைகின்றார்கள்" என்றிவ்வாறு, பிரபுவே! அவர்களை நோக்கி விடையளிப்பார். அவருக் கெதுவும் சுகத்தைத் தருவதாகத் தோன்றவில்லை. நாங்கள் நகைப்பிற்கேதுவான வார்த்தைகளாடினும் அவர் அதினாலும் நகைக்கிற தில்லை. முன்னெந்தபதார்த்தங்களைப் பிரியமாகக் கொண்டிருந்தாரோ அவற்றை யெல்லா மிப்பொழுது தள்ளிவிடுகின்றார். நாளுக்குநாள் வெகு துர்ப்பலராகின்றார். அந்தப்புரத்தில் ஸ்திரீகளோடிருக்கும் பொழுது அவர்கள் இராமசந்திரரைச் சந்தோஷிப்பிக்கப் பல சேஷ்டைகள் செய்யினும் அதனால் கொஞ்சமும் சந்தோஷப்படுகிறதில்லை. மழைத்துளிகளால் மலை அசையாததுபோல இவர் சலன மடைகிறதில்லை. "இராஜ்ஜியம் சத்தியமல்ல. போகம் சத்தியமல்ல. இந்த ஜகம் சத்தியமல்ல சகோதரர்கள் சத்தியமல்ல. மித்திரர்கள் சத்தியமல்ல. மித்தியாபதார்த்தத்தில் மூடர்கள் பெரு முயற்சியினைச் செய்கின்றனர். எதைச் சத்தியமென்றும் சுகத்தைத் தருவதென்றுங் கருதுகிறார்களோ அது பந்தத்திற்குக் காரணமாம்! என்றிவ்வாறாக சிற்சில சமயங்களில் பேசுவார். மீண்டும் யாமுரைக்கவேண்டியிருப்பதென்ன? இவரைக் காண்பதற்கு இராஜாக்கள் அல்லது பண்டிதர்கள் வந்தால் அவர்களைப் பார்த்து "இவர்கள் பசுக்களாவர். ஆசைவடிவக் கயிற்றினால் கட்டப்பட் டிருக்கின்றார்க" ளென்று சொல்லுகின்றார். மகாராஜாவே! போக வேதுவாகிய பதார்த்தங்களைப் பார்த்து அவரது சித்தம் மலர்ச்சியடைவதில்லை. அவற்றையுங் கண்டு கோபிக்கின்றார்.

சாதகப்பக்ஷி மார்வாடிதேசத்திற் செல்லுங்கால் அங்கு மழைத் துளிகளைக் காணாது துக்கமடைவன போன்று இராமசந்திரர் விஷயங்களைக் கண்டு துக்கமடைகின்றார். இவைகளால் இவர் சந்தோஷ மடையாமையால் இவருக்குப் பரமபதமடையும் விருப்ப மிருப்பதாக வெண்ணுகிறோம். ஆனால் ஒருபொழுதும் இவ்வபிப்பிராயத்தினை இவரது வாயாற் சொல்ல நாங்கள் கேட்டதேயில்லை. சிலநேரம் பாடுகின்றார். சிலநேரம், 'அடடா அநாதை! அடிக்கப்பட்டிருக்கின்றேன்!', என்றும் 'அடே மூர்க்கர்களே! நீங்கள். சம்சாரசமுத்திரத்தில் ஏன் மூழ்கிப் போகின்றீர்கள்? இச்சம்சாரம் பரம அநர்த்தத்திற்குக் காரணம். இதில் சுகம் ஒருபோதுமில்லை. இதனின்றும் விடுபடுமுபாயத்தைச் செய்யுங்கள்! என்று அவர் சொல்ல நாங்கள் கேட்டிருக்கின்றோம், மகாப்பிரபுவே! இவர் ஒருவரோடும் பேசுகிறதுமில்லை; சிரிக்கிறது மில்லை. மந்திரியோடும் அந்தப்புரத்திலுள்ள ஸ்திரீகளோடும் பேசுகிறதில்லை; தாயோடும் பேசுகிறதில்லை. பரமசிந்தனையில் மக்கினமாயிருக்கின்றார். எப்பதார்த்தங்களைப் பார்த்தும் ஆச்சரியப்படுகிறதில்லை. ஒருவன் 'ஆகாயத்தில் ஓரிடத்தில் ஓர் சோலையிருக்கின்றது. அதின்கண்ணுள்ள புஷ்பத்தை யான் கொண்டுவந்தேன்!' என்று சொல்லுவானாயினும் அதையுங் கேட்டு ஆச்சரியப்படுகிறதில்லை. அவர் ஏதோ ஒரு சிந்தனையில் மூழ்கியிருக்கின்றார். அவரது சிந்தையினை நீக்கக்கூடிய சாமர்த்தியமுடையவரை நாங்கள் இதுவரையிலும் கண்டதேயில்லை. அவருக்குச் சிந்தையானது ஆழமும் நீளமும் காணாத ஓர் பெரிய சமுத்திரமா யிருக்கின்றது.

இராஜனே! இராமசந்திரருக்குப் புசிப்பதிலும் அணிவதிலும் பேசுவதிலும் பார்ப்பதிலும் ஒரு கருமத்தைச் செய்வதிலும் இச்சையில்லாததாகவே, இவரது சரீரம் நாசமின்றி ஜீவித்திருக்கவேண்டுமே யென்னுங்கவலை எங்களுக்குத் தினமும் அதிகரித்துக்கொண்டே வருகின்றது. தாம் சக்கிரவர்த்தியாயிருப்பதால் தமக்கு ஆயுள் பலமென்பன வுண்டாகட்டும்; தமக்குப்பருத்த சுகமுண்டாகட்டும்; தாம் சம்ராட்டாகக் கடவீ ரென்றிவ்வாறு யாராவது அவரிடம் வந்து அவரைநோக்கி ஆசிவசனங்களைக்கூறின், அவர்களைக்கடினமானப் பிரதிமொழிகளால் அடக்கிவைப்பார். இந்தச்சிந்தை இராமசந்திரருக்கு மாத்திரமன்று இதனைக்கண்ட இலக்ஷ்மண சத்துருக்னர்களுக்கும் இவ்வண்ணமே யுண்டாயிருக்கின்றது. இவர்களது சிந்தையை மாற்றக்கூடிய சாமர்த்தியம் எவருக்கேனு மிருந்தால் அவ்விஷயத்தில் உடனே பிரவர்த்திப்பது மிக்கநலம். இல்லை யென்றால் சிந்தையிலேயே மூழ்கியிருப்பார்கள் எப்பதார்த்தத்திலும் அவர்களுக்கிச்சையில்லை. வேந்தரே! மேலும் நாங்கள் யாதுதெரிவிப்போம்!! தமது புத்திரர் இப்பொழுது அதீதராயிருக்கின்றார்; ஒற்றைவஸ்திரத்தை யுடுத்தும் அதனையே போர்த்துக் கொண்டு மிருக்கின்றார். இக்கஷ்டத்தை எங்களால் கண்டு சகிக்கக் கூடவில்லை. ஆகையால் இவரது சிந்தை எவ்வுபாயத்தால் நீங்குமோ அவ்வுபாயத்தினைச் சீக்கிரம் தேடுங்கள் என்றிவ்வண்ணம் மந்திரிமுதலானவர்கள் தெரிவித்து துடிதுடித்தமனத்துடன் கைகட்டி வாய்பொத்தி மௌனமுற்றிருந்தார்கள்.

அவதாரிகை:—விசுவாமித்திரரது ஆஜ்ஞயாற் சபையில் வரவழைக்கப்பட்ட இராமசந்திரரை அவரதுவியசனத்திற்குக் காரணம் யாதென வினவுதலும் அவருக்கு தைரியமுரைத்தலு மிதிற் கூறப்படுகின்றன.

விசுவாமித்திரர் சொல்லலாயினர்:—சாதுவே! இராமசந்திரர் அப்படியிருப்பாராயின் என்னிடங் கொண்டுவருக. அவரது துக்கத்தை அதிசீக்கிரத்திற் போக்குகின்றேன். தசரதராஜனே! நீர் தன்னியர். எவனுடைய புத்திரன் விவேகவைராக்கியாதிகளை யடைந்திருக்கின்றானோ அவனை தன்னியன், இராஜனே! இச்சபையிலமர்ந்திருக்கும் யாம் நமது புத்திரருக்குப் பரமபதத்தினடைவு உண்டாகும்படி செய்வோம். இப்பொழுதே அவரது சர்வதுக்கங்களும் நசிக்கும். நாமும் வசிஷ்டர்முதலியோரும் இங்கிருக்கும்பொழுதே அவருக்குத்தகுந்த யுக்திகளால் ஓர் உபதேசஞ் செய்கின்றோம். அதனால் அவருக்கு ஆத்மபதத்தினடைவு உண்டாகி ஓட்டாஞ்சல்லியும் பொன்னுஞ் சமமெனக் காணும் நிலைமையுண்டாகும். எமது க்ஷத்திரிய வர்ணத்துக்குரிய பிரகிருத ஆசாராதிகளையும் அநுஷ்டிப்பார். உள்ளத்திற் பிரேமையைத் தாங்கி, பாகிய (வெளி) பதார்த்தங்களில் விருப்பு வெறுப்பற்ற உதாசீனராயிருப்பார். அதனால் உமது குலம் கிருதகிர்த்திய (செய்யவேண்டியவற்றைச் செய்தலு முடையதாகும், அவரைச்சீக்கிரம் தருவியுமென்றார்.

வால்மீகர்:—பரத்துவாஜா? முநீந்திரர் இவ்வாறு சொல்லவே அதனைக்கேட்ட தசரதர் மந்திரியையும் தூதர்களையும் பார்த்துப் பெண்மானை ஆண்மான் உடன்கொண்டு வருவதுபோல இராமசந்திரரையும் அவரோடு கூடியுள்ள இலக்ஷ்மண சத்ருக்னர்களையும் அழைத்து வாருங்கள் என்

ளுர். அதுகேட்ட மந்திரியும் வேலையாட்களும் இராம சந்திரரிடஞ் சென்று இராஜனது உத்திரவைத் தெரிவித் தார்கள். அதன்பேரில் இராமசந்திரர் தமது தம்பிமார்க ளுடன் உடனே புறப்பட்டு அந்தப்புரத்தைவிட்டு சபாமண் டபம் வந்தடைந்தார். அங்கு சாமரங்கள் வீசவும் மகா மகாமண்டலேசுவர்களால் சூழப்பட்டும் கொலுவீற்றிருந்த அரசனையும் வசிஷ்டர் விசுவாமித்திரர் என்பவர்களையுங் கண்டார். மகாதேவர் கார்த்திகேயரது வரவை எதிர் நோக்குவதுபோல இராமச்சந்திரரது வரவை தசரதர் எதிர் நோக்கினர். விசுவாமித்திராதியோர் இவரது மெலிவுற்ற சரீர நிலைமையையும் முககாந்தியினையுங் கண்டுகளித் தார்கள். அப்பொழுது அங்குவந்த இராமசந்திரர் தமது தம்பிகளுடன் தசரதரையும் அதுபோலவே விசுவாமித்திர ரையும் வசிஷ்டரையும் நமஸ்கரித்தார். சபையிலுள்ள மகா மகா பிராஹ்மணர்களையும் நகஸ்கரித்தார். மற்றும் அங்கிருந்த மண்டலேசுவரர்களோ எழுந்துநின்று இவர்களை நோக்கி நமஸ்கரித்தார்கள். பின்னர் மகாராஜன் இராம சந்திரரைத் தமது மடிமீதிருத்தி முத்தமிட்டு தேகம் புளகாங்கிதமடைந்து கூறுகின்றார்; "புத்திரனே! கேவல விரக்தியினால் பரமபதப்பிராப்தியுண்டாகிறதில்லை. உனக்கு வசிஷ்டர் குருவாக விருக்கின்றார். அவரது உபதேசமாகிய யுக்தியைக்கொண்டால் உனக்கும் பரமபதப் பிராப்தி யுண் டாகும்" என்றார்.

வசிஷ்டர் கூறுகின்றார் :—இராமசந்திரரே! நீர் தன் னியர். மேலும் மகாசூரர். ஏனெனின் நீர் விஷயவடி வாகிய சத்துருவை ஜயித்திருக்கின்றீர். விஷயமோ

ஜயித்தற்கரியதும் கொடியதுமாம். அதைத்தாம் ஜெயித்திருப்பதால் தன்னியர்! தன்னியர்!!

விசுவாமித்திரர்:— ஓ, கமலநயன! இராமசந்திரரே! தமது அந்தரங்கத்துள்ள சஞ்சலத்தன்மையினை யகற்றித் தாம் உண்மையில் அதன்கண் இரகசியமாக வைத்துக்கொண்டிருப்பதை வெளிப்படையாகச் சொல்லும். இராமசந்திரரே! தம்முடைய இந்த மோகமானது எவ்வாறுண்டானது? எதன்பொருட்டுண்டானது? எவ்வளவுவரையிலும் நிலைக்கக்கூடியதென்பதைத் தெரிவியும். தமக்கு எதில் இச்சையோ அதைத் தெரிவியும். ஒருபோதும் துக்கம் இல்லாததாகிய பதம் எதுவோ அப்பதத்தைத் தாம் அடையும்படியாக நாங்கள் செய்வோம். ஆகாயத்தை எலிகள் ஒருபோதும் சேதிக்காததுபோலத் தமக்கு ஒரு பீடையும் இனியுண்டாகாது. இராமசந்திரரே! நீர் சந்தேகிக்கவேண்டாம். தமது சகல துக்கங்களையும் நாம் நாசமாக்க வல்லேம். தமது மனதின் கண்ணுள்ள விருத்தாந்தங்கள் எவையோ அவற்றை விபரமாகத் தெரிவியும்.

வால்மீகர் சொல்லலாயினர்:—பரத்வாஜா! விசுவாமித்திரர் இவ்வண்ணம் சொல்லவே அதனைக் கேட்ட இராமசந்திரர் மேகங்களைக்கண்ட மயில்களைப்போன்று சந்தோஷமுடையவரானர். தம்மனத்திலுள்ள சர்வ துக்கங்களையும் விலக்கினர். விஸ்வாமித்திரரது வசனத்தைக்கேட்டு அப்பொழுதே தனக்கு அப்பதத்தின் அடைவு நிச்சயமாய் உண்டாகுமென்று மனதினல் தீர்மானித்தார்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
இராமசமாஜவர்ணனமென்னும்
ஆறவது சர்க்கம் முடிந்தது.



# இராமவைராக்கியவர்ணனம்.

அவதாரிகை:—வால்மீகர்:—பாத்வாஜா! இவ்வண்ணம் முநீசுவரர் சொல்லும் வார்த்தைகளைக்கேட்ட இராமசந்திரர் சந்தோஷித்தவராய் மிகக்கம்பீரமான மதுர மொழிகளால் உரைக்கின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர்:—பகவானே! எனதுவிருத்தாந்தம் எதுவோ, அதைத் தம்முன்னிலையில் கிரமமாகத்தெரிவிக் கின்றேன். யான் இந்தத்தசரதருடைய கிரஹத்தில் ஜன்மித்தேன் கிரமமாகவும் வளர்ந்துவந்திருக்கின்றேன் உபநயனுதிக்கிரியைகளும் எனக்கு நடந்திருக்கின்றன நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்து ப்ரஹ்மசர்யாதி விரதங்களைக் கைக்கொண்டு மிருக்கின்றேன். இப்பால் ஓர் நாள் அத்தியயனஞ்செய்து வீட்டுக்கு வருங்கால் என துள் ளத்தில் தீர்த்தயாத்திரை தேவதரிசனம் என்பவைகளைச் செய்வதில் எனக்கு இச்சை பிறந்தது. அப்பொழுது எனது தந்தையிடம் உத்திரவுபெற்றுக்கொண்டு கெங்கை முதலிய சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து சாளிக்கிராமம் ஜெகந்நாதம் முதலான க்ஷேத்திரங்களையும் விதியோடு தரிசனம் செய்து யாத்திரையைப் பூர்த்திசெய்து இவ்விடம் வந்தேன். அதன் பொருட்டு இங்கு ஓர் பெரியமகோற்ச வமும் கொண்டாடப்பட்டது. அப்பொழுது ? என்மனதில் பிராதக்காலத்தில் எழுந்து ஸ்நானசந்தியாவந்தனுதி கர்மங் களை அநுஷ்டித்தபிறகே போஜனம் செய்யவேண்டுமென் னும் திடமான இச்சையுண்டானது. இவ்வண்ணம் சிலகாலங்

கழிந்தன. அதற்குமேல் எனதுள்ளத்தின்கண் ஓர் விசாரம் பிறந்தது. அவ்விசாரமானது என்னுள்ளத்தை முற்றிலும் அபகரித்துச்சென்றது. எப்படி நதியின் கரையிலுள்ள பல கொடிகள் முதலானவற்றை நதியின்பிரவாகம் இழுத்துச் செல்லுமோ அதுபோல என்னிருதயத்திலுள்ள ஜகத்தின் ஆசைவடிவக்கொடிகளை விசாரவடிவப் பிரவாகமானது இழுத்துச்சென்றது, அப்பொழுது யான் பின்வருமாறு அறியலானேன்; இராஜ்யம் செய்தென்ன! போகங்களைப் புசித்தென்ன! இந்த ஜகத் மயக்கவடிவமேயாம். மூடன் இதன் வாசனையைத்தரிக்கின்றான். ஸ்தாவர ஜங்கம வடிவமாகத்தோற்றுகின்ற இந்த ஜகத்தெல்லாம் பொய்யேயாம். முநீசுவரரே? இங்குள்ள பதார்த்தங்களெல்லாம் மனதின் கண் நிலைத்திருக்கின்றன. மனமும் மயக்கமாத்திரமாம். இவைகளையடைந்து மனம் துக்கம் அடைகின்றது. மனமானது எப்பதார்த்தத்தைச் சத்தியமென்றும் சுகத்தைத் தருவதென்றும் கருதிச் செல்லுகின்றதோ? அது முற்றிலும் கானல் ஜலத்தை ஒத்திருக்கின்றது. எங்ஙனம் கானலைக் கண்டு ஜலமெனக்கருதி மான்கள் ஓடுகின்றனவோ? அங்கு ஜலமில்லாததாகவே மான்கள் மீண்டும் ஜலத்தினைத்தேடி அலைந்தலைந்து களைத்துப் போகின்றனவோ? அவைஎவ்வளவு பிரயாசைப்படினும் ஜலம் அவற்றிற்குக் கிடைத்தற் கரியதாகுமோ, அங்ஙனமே மூட மானையொத்தஜீவர்கள் உலகபதார்த்தங்களைச் சுகத்திற்கேதுவெனக்கருதி அவற்றை அடைவதிற் பிரயத்தனம் செய்கின்றார்கள். அதனால் ஒரு போதும் சாந்தியடைகிறதில்லை. முநீசுவரரே! இவ்விந்திரிய போகங்கள் சர்ப்பம் போன்றிருக்கின்றன; எது தீண்டுவதால் ஜனனமரணங்கள் அடையப்படுவதாகுமோ? ஜன்மங்களி

னின்றும் வேறுபல ஜன்மங்களும் அடையப்படுவதாகுமோ? அந்தஸர்பத்துக்குச் சமானமான போகங்களும் ஜகத்து மாகியஇவைகளெல்லாம்மயக்கமாத்திரமேயாம். இதில்ஆசை வைப்போன் மகாமூடனென்று நான்விசாரித்து அறிகின் றேன். இவையெல்லாம் போக்குவரத்துடையனவே. எப் பதார்த்தங்களுக்கு நாசமுண்டாகாதோ அப்பதார்த்தமே அடையத்தகுந்ததாம் என்னும் காரியநிச்சயத்தால் இப் போகங்களை நீக்கியிருக்கின்றேன். இங்குக்காணப்படுகின்ற சம்பத்தாகின்ற பதார்த்தங்களெவைகளோ அவைகளெல் லாம் ஆபத்தின்வடிவமே; இவற்றின்கண் சிறிதும் சுகமில்லை. எப்பொழுது இவற்றின் வியோகமுண்டாகின்றதோ அப் பொழுது முள்தைத்தாற்போல் மனதில் வலியுண்டாகின் றது. எப்பொழுது இந்திரியங்களுக்கு போகங் கிட்டுகின் றதோ அப்பொழுது அவற்றின்கண் ஏற்படும் ராகத்வேஷங் களால் தாபமுண்டாகின்றது. எப்பொழுது கிடைக்கவில்லை யோ அப்பொழுது ஆசையினால் ஜீவர்கள் தபிக்கப்படு கின்றார்கள். ஆகையால் இந்தப்போகம் துக்கவடிவமாம் கற்பாறையில் துளைகளில்லாததுபோல போகவடிவதுக் கமாகிய பாறையில் சுகவடிவதுளைகள் உண்டாகிறதில்லை. முனீசுவரரே! இந்த விஷயமாகிய ஆசையால் நீண்டகால மாகத் தபித்துக்கொண்டிருக்கின்றேன். ஈரவிருக்ஷத்தின் பொந்தில் அற்பமாக அக்கினி பற்றுமாயின் அப்பொழுது அதிற் புகையுண்டாகிச்சிறிது சிறிதாகப்பற்றி எரிவதுபோல போகவடிவ அக்கினியினால் மனதுதபித்துக் கொண்டே யிருக்கின்றது இவ்விஷயங்களில் சுகம் அற்பமும் இல்லை; துக்கம் மிகுதியும் இருக்கின்றது. இவைகளை இச்சிப்பதுவே மூடத்தனம். கிணற்றை மூடிகொண்டிருக்கும் புற்களையும்

கொடிகளையுங்கண்டு மான்கள் அவற்றைப்புசிக்குமிச்சையாற் சென்று அக்கிணற்றில் விழுந்து துக்கமடைவது போன்று மூடர்கள் போகங்களைச் சுகமெனக் கருதி புசிக்கச்செல்லு கின்றார்கள். அவற்றைப் புசிப்பதால் ஜன்ம ஜன்மாந்திரங் களென்னும் படுகுழியில் வீழ்ந்து துக்கமடைகின்றார்கள்.

முநீசுவரரே! போகமென்பது ஓர் திருடனும். அவன் இராத்திரியில் திருட ஆரம்பித்து ஆத்மவடிவ தனத்தைக் கொண்டுபோகின்றான். அதன் வியோக(நீக்க)த்தால் இவன் மகா தீனனாகின்றான். மேலும் எந்தபோகத்தின் நிமித்தத் தால் இந்த எத்தனம் ஏற்படுகின்றதோ, அதுவும் துக்க வடிவமாம். சாந்தியினடைவு உண்டாகிறதில்லை. எந்தச் சரீராபிமானத்தினால், இதில் எத்தனத்தைச் செய்கின்றானே அச்சரீரமும் க்ஷணத்தில் அழிவதாம். அசார (சாரமின்றிய) வடிவமுமாம். எவனுக்குப் போகங்களில் சதாஇச்சை இருக் கின்றதோ அவனேமூர்க்கனும் ஜடனுமாவன். அவனதுவார்த் தைகளும் செய்கைகளும், உலர்ந்த மூங்கிறுண்டிலுள்ள துளைகளின்வழியாய்க் காற்று நுழைந்துஅக்காற்றின் வேகத் தால் சப்தமுண்டாகின்றதுபோல, அவனது வாசனையினால் ஆகின்றனவாம். தாகத்தினாற் களைத்திருக்கும் ஒருவன் மார் வாடி தேசத்திற்குச் செல்ல இச்சியாததுபோல, நானும் இந்தப் போகங்களைத் துக்க மெனக்கண்டு அவற்றின்கண் இச்சை செய்யாதிருக்கின்றேன். இந்தச் செல்வமும் பரம அநர்த்தத்(சுகத்திற்குமாறான)தைத் தருவதாகின்றது. எதுவரையில் அது கிட்டவில்லையோ அதுவரையில் அதனை யடைய எத்தனிக்கவேண்டியிருக்கின்றது. அதுவும் பெரும் அநர்த்த(துக்ககாரண)த்தினால் கிடைக்கின்றது. அது எப் பொழுது கிடைக்கின்றதோ அப்பொழுது சீலம், சந்தோஷ

தர்மம், உதாரம், மிருதுத்தன்மை, வைராக்கியம், விசாரம், தயைமுதலானநற்குணங்கள் நாசமாகின்றன. இக்குணங்கள் நசிக்கவே இவனுக்குச் சுகமெங்கிருந்துண்டாகும்; பரமதுக்கமே பிராப்தமாகும். ஆனதால் இதை யான் பரம துக்கத்திற்குக் காரணமென்றறிந்து நீக்கியிருக்கின்றேன்.

முநீசுவரரே! எதுவரையில் ஒருவனுக்குச் செல்வம் கிட்டவில்லையோ அதுவரையில் அவனிடம் குணம் தங்கியிருக்கின்றது. இலக்ஷுமி பிராப்தமாகும் போதே சகல (நற்) குணங்களும் நாசமாகின்றன. வசந்தருதுவிலுண்டான பூங்கொத்துக்களில் ஆனி ஆடி மாதம் வருகிறவரையில் இரஸமிருந்து அம்மாதங்களில் அப்பூங்கொத்துக்கள் கருகிப் போவதுபோல, ஐசுவரியம் வந்தபோது சகல குணங்களும் கருகிப் போகின்றன, எதுவரையில் ஐசுவரியம் உண்டாகவில்லையோ அதுவரையில் மதுரமாகவசனிக்கின்றான். ஐசுவரிம் உண்டானபோது கோமளத் தன்மை மிருதுத்தன்மைகளின் நீக்கமுண்டாகி கடூரத்தன்மையைப் பொருந்தியவனுகின்றான். எப்படிச் சீதள சம்பந்தமாகாதவரையில் ஜலமானது தனது சுபாவமாகிய ஜலவடிவாகவேயிருந்து குளிர்ந்த பரிசமானவுடன் பனி வடிவாகிக் கடின துக்கத்தைத் தருவதாகின்றதோ அப்படி ஜீவர்கள் ஐசுவரியத்தால் ஜடத் தன்மையை அடைகின்றார்கள்.

முநீசுவரரே! சம்பத்தெனப் படுவதெதுவோ அது ஆபத்திற்கு மூலமாம். ஏனெனின் ஐசுவரிய முண்டானபோது பெருஞ் சுகங்களைப் புசித்து அஃதின்மையில் ஆசையால் தபிக்கின்றான். இந்த ஜன்மத்தினின்றும் வேறு ஜன்மாந்தரங்களை யடைகின்றான், ஐசுவரியத்தை

விரும்புவதே மூடத்தனம்; இது க்ஷணத்தில் நாசமடைகின்றது. இதனின்று போகங்களுண்டாகி அழிகின்றன. ஜலத்தில் அலைகளுண்டாகி அழிவதுபோல ஆகின்றன. மின்னல் நிலையில்லாதது போல போகங்கள் நிலைபெறுகிறதில்லை. எதுவரையில் இவனை ஆசை தீண்டவில்லையோ அதுவரையில் அவனிடம் சுபகுணமிருக்கின்றது. பாலில் சர்ப்பம் தீண்டுகிற வரையில் மதுரமிருந்து தீண்டியபின் அது விஷமாவது போல ஆசை யுண்டானபோது சுபகுணங்களில்லாதன வாகின்றன.

ஸ்ரீ வால்மீகிமஹரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
இராமவைராக்கியவர்ணனமென்னும்
ஏழாவது சர்க்கம் முடிந்தது,



## இலக்ஷ்மிநைராசியவர்ணனம்

அவதாரிகை:—சகல மூடர்களுக்கும் பிரியமானதும் சநாபோக வடிவ அனர்த்தங்களை விளைவிப்பதுமாகிய தனத்தினை நிந்திக்கின்றார்.

ஸ்ரீராமசந்திரர்:—முநீசுவரரே! இலக்ஷ்மி(செல்வமானது) பார்ப்பதற்கு மாத்திரம் வெகு அழகாயிருக்கிறது. இது கிடைத்த மாத்திரத்தில் சகல நற்குணங்களும் நாசமாகின்றன. விஷக்கொடியானது பார்ப்பதற்கு மாத்திரம் வெகு அழகாகவிருந்து பரிசித்த மாத்திரத்தில் பரிசித்தவனைக் கொல்லுவதுபோல, இலக்ஷ்மியின் பிராப்தி உண்டாகவே ஆத்மபதத்தினின்றும் மரணம் (நீக்கம்) உண்டாகின்றது. மகாதீனத்தன்மையும் உண்டாகின்றது. ஒருவன் தனது வீட்டில் புதைந்து கிடக்கும் (சிந்தித்ததைத்தரும்)சிந்தாமணியைத் தோண்டி எடுத்துக் கொள்ளாதவரையில் தரித்திரனாகவே யிருக்கின்றதுபோல அஞ்ஞானத்தினால் ஞானமில்லாதவனும் மகாதீனனாகவே இருக்கின்றான்; ஆத்மாநந்தத்தை யடைகிறதில்லை. ஆத்மாநந்தமடையும் மார்க்கத்தை நாசஞ்செய்வது ஐசுவரியமென்னும் இலக்ஷ்மியாம். இதனது பிராப்தத்தால் குருடனைப் போலாகின்றான்.

முநீசுவரரே! எப்பொழுது விளக்கு நன்றாய் சுடர்விட்டெரிகிறதோ அப்பொழுது அதன் பெரியப்பிரகாசம் காணப்படுவதாகின்றது. எப்பொழுது தீபம் அணைந்து போகின்றதோ அப்பொழுது அந்தப் பிரகாசம் இல்லாத

தாகின்றது அதன் கருமைத்தன்மையும் அடிக்கடி எழுந்த வாசனை மாத்திரமும் தங்கிநிற்பதாகின்றன. அதுபோல ஐசுவரியமானது அவனுக்குப் பெருத்த போகங்களைப் புசிப்பிக்கின்றது. அதினின்றும் ஆசை என்னும் கருமையை உண்டாக்கிக் கொண்டிருந்து அது நீங்கும்போது வாசனையாகிய ஆசைவடிவமையைத் தங்க விட்டுச் செல்லுகின்றது. அந்த வாசனையாகிய ஆசையால் அநேக ஜனன மரணங்களை யனுபவிக்கின்றான். ஒரு போதும் இவனுக்குச் சாந்தி கிடைக்கின்றதில்லை. எவனுக்கு ஐசுவரியம் அடையப்பட்டதாகின்றதோ அவனுக்கு அப்பொழுது அது சாந்தியை உண்டாக்குங் குணங்களை நாசஞ்செய்வ தாகின்றது. எதுவரையிற் காற்றில்லையோ அதுவரையில் மேகங்கள் தங்கியிருந்து காற்றுண்டான போது அவை நாசமடைகின்றன அதுபோல இலக்ஷ்மி உண்டானபோது நற்குணங்கள் நாசமடைந்து கருவம் வளர்கின்றது.

முநீசுவரரே! ஞானகவிருந்தும் தனது பெருமையைத் தானே சொல்லிக்கொள்ளாதவனும் சமர்த்தனயிருந்தும் பிறரை அவமதியாது சர்வத்திலும் சமபுத்தியோடு இருப்பவனும் எப்படி கிடைப்பது துர்லபமோ (கிடைத்தற் கரிதோ) அப்படி ஐசுவரிய முடையவனுயிருந்தும் சுபகுணங்களோடிருப்பது மிகத் துர்லபமாம்.

முநீசுவரரே! ஆசை என்னும் சர்ப்பத்தை வளர்ப்பதற்கு ஐசுவரிய மென்னும் பால் இருக்கின்றது. அது அதனைக் குடித்தும் போகமென்னும் வாயுவைப் புசித்தும்

நாசமடையாது * அந்தக்கருமங்களால் வளர்ந்து வருகின்றது; ஒருபோதும் கெடுகிறதில்லை. ஐசுவரியமானது மகா மோகவடிவ மதயானை சஞ்சரிப்பதற்குரிய மலைகளும் காடுகளுமாக விருக்கின்றது. குணவடிவத் தாமரைக்கு ஐசுவரியம் ஓர் இரவாகவுமிருக்கின்றது. போகவடிவ ஆம்பல்களுக்கு ஐசுவரியம் சந்திரனாக விருக்கின்றது. வைராக்கியவடிவத் தாமரைகளைக் கருகச் செய்யப் பனியாகவு மிருக்கின்றது. ஞானவடிவ சந்திரனை மறைப்பதற்கு இந்த ஐசுவரிய இலக்ஷுமி ஓர் இராகுவைப் போன்றிருக்கின்றது. மோகவடிவ ஆந்தைகளுக்கு இது இரவாக விருக்கின்றது. துக்கவடிவ மின்னல்களுக்கு இந்த இலக்ஷுமி ஆகாசமாகின்றது. ஆசையென்னும் கொடிகளை வளர்ப்பதற்கு இலக்ஷுமி மேகமாகின்றது; ஆசையென்னும் அலைகளுக்கு ஐசுவரியம் ஓர் சமுத்திரமாம். மோக வடிவ பிசாசங்கள் சஞ்சரிப்பதற்கு ஐசுவரியம் கானகமாம். ஆசையென்னும் வண்டுகளுக்கு ஐசுவரியம் தாமரையாகின்றது. ஜன்ம துக்க வடிவ ஜலத்திற்கு இந்த ஐசுவரியம் கரையாம்.

முநீசுவரரே! வாளின் கூரியமுனையானது பார்ப்பதற்கு மிக்க அழகாயிருப்பினும் தீண்டினல் நாசத்திற் கேதுவாவதுபோல இந்த ஐசுவரிய இலக்ஷுமியும் பார்வைக்கு மிக்க அழகாயிருந்து தீண்டிய பின்னர் துக்கத்திற்குக்

---

* ஐசுவரிய விருத்தியானது யுத்தம் யௌவனம் வாணிஜ்யமென்னும் கர்மங்களாலுண்டாகின்றது. எதனிடத்துப் பெரும்பாலும் பாபத்தின் சம்பவ மிருக்கின்றதோ அது யாகதானதி கர்மங்களினல் நாசமாகின்றது.

காரணமாகின்றது. இதுவே விசாரவடிவ மேகத்தை நாசஞ் செய் யும் வாயுவாம்.

முநீசுவரரே! இதை நான் விசாரித்துப் பார்த்தேன். இதில் சுகமென்பது சிறிதுமில்லை. சந்தோஷ வடிவ மேகத்தை நாசஞ்செய்வதற்கு இது சரத்காலமாம். அப்புருஷர்களிடத்தில் எதுவரையில் இலக்ஷ்மி யுண்டாக வில்லையோ அதுவரையில் சுபகுணங்கள் புலப்படுகின்றன. ஐசுவரியம் பிராப்தமானபோது சுபகுணங்கள் நாசமடைகின்றன.

முநீசுவரரே! ஐசுவரியம் இத்தன்மைய துக்கத்தைத் தருவதென்றறிந்து நான் இதில் இச்சையை விட்டிருக்கின்றேன். இப்போகங்கள் மித்தியாவடிவமாம். மின்னல்கள் தோன்றி மறைவதுபோல இந்த ஐசுவரிய இலக்ஷ்மியும் தோன்றி மறைகின்றது. ஜலத்திற்குக் குளிர்ச்சி சுபாவமாவது போல ஐசுவரியத்திற்கு ஜோதி சுபாவமாம். மூடர்கள் இந்த ஜடத்தை * ஆசிரயிக்கின்றார்கள். நான் இதைச் சலனவடி வென்றறிந்து நீக்கியிருக்கின்றேன்.

---

* விஷ்ணுபகவானுக்குத் தரித்திரமும் இலக்ஷ்மியும பத்நிகளென்பது புராணப்பிரசித்தம். பெரும் ஆச்சரியம்! எவன் இந்தலக்ஷ்மியை இவள் சபத்நியாகிய தரித்திரத்தைக் கைக்கொண்டு நீக்குகிறானோ அவனை இலஜ்ஜையில்லாதுமீண்டும் தழுவிக்கொள்ளுகிறாள். இந்த இலக்ஷ்மியானவள் ஸத்ரீயைப்போல மநோஹரவடிவெடுத்து சித்தவிருத்தியை யிழுத்துக்கொள்ளுகிறாள். தஷ்ட அர்த்தங்களால் சாதியமானதும் க்ஷணத்திற் கெடுவதும், சர்ப்பங்களின் வரிசைபோலச் சுற்றியுள்ளதும், பாழுந்துறவிற் படர்ந்துள்ள புஷ்பக்கொடிகள்போன்றதுமாகக் காணப்படுகின்றனள்.

ஸ்ரீ வால்மீகிமஹரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
இலக்ஷ்மிநைராசியவர்ணனமென்னும்
எட்டாவது சர்க்கம் முடிந்தது.



## ஸம்ஸாரசுகநிஷேத வர்ணனம்.

அவதாரிகை:—மானசிகமும் சாரீரகமுமான ரோகங்களும், விருத்தாவஸ்தையில் விழுங்கப்பட்ட காமக்குரோதாதி மலினங்களும், மூர்க்கனுடைய ஜீவனமும் யௌவனமும், ஆயுள் நிந்தையு மிதிற் கூறப்படுகின்றன.

ஸ்ரீராமசந்திரர்:—முனீசுவரரே! எவன் இந்த ஐசுவரியத்தைக்கண்டு சந்தோஷப்படுகின்றானோ அவன் மூர்க்கன்: ஏனெனின் தாமரைஇலையின்மீது ஜலத்துளி நிலையாதது போல இந்த ஐசுவரியம் க்ஷணத்தில் நாசமாகத்தக்கது. ஜலத்தில் அலைகளுண்டாகி நசிப்பனபோல ஐசுவரியமுண்டாகி நாசமாகின்றது.

முனீசுவரரே! காற்றை யடக்குவது கடினமாயினும் அதைச் சிலர் அடக்கிவிடுகின்றார்கள். ஆகாயத்தைச் சூர்ணமா(பொடியா)க்குவது கடினமாயினும் அதையும் சூர்ணமாக்கிவிடக்கூடும். பிரதிபிம்பச்சந்திரனைப் பிடிப்பது கடினமாயினும் அதையும் பிடித்துவிடலாம். மின்னலைத் தடுப்பது கடினமாயினும் அதையும் தடுத்து (நிலைபெறச் செய்து)விடலாம். ஆயினும் ஐசுவரியத்தை யடைந்த ஒருவன் அதில் நிலைபெற்றிருத்தல் கூடாத காரியம். எப்படி முயற்கோடு கொண்டு ஒருவரை யொருவர் கொல்லமுடியாதோ, அப்படி ஐசுவரியம் நிலைத்திருத்தலைக் காணமுடியாது. ஐசுவரியம் மின்னலொளி

போன்று தோன்றி மறைவதாகின்றது. எப்படி கண்ணுடியின்மீது முத்துக்கள் நிலைக்காவோ, எப்படி அலைகளின் முடிவினைக் காணமுடியாதோ, அப்படியே ஐசுவரியம் ஸ்திரமடைவதைக் காண ஒருவராலும் முடியாது. ஐசுவரியமானது மின்னல் தோன்றி மறைவ தொத்திருக்கின்றது. ஐசுவரியத்தை யடைந்து தன்னை அமரனுகக் கருதுபவன் மூடனென்று எண்ணப்படுவான். ஐசுவரியத்தை யடைந்து எவன் போகங்களை விரும்புகின்றுனே அவன் மகா ஆபத்திற்குப் பாத்திரமாவான். அவன் ஜீவித்திருப்பதைவிட மரிப்பது மேலானது. ஸ்திரீகள் தங்கள் நாசத்தின்பொருட்டு கருப்பத்தை இச்சிப்பதுபோல மூடர்கள் தங்கள் நாசத்தின் பொருட்டு ஜீவனவாசையைக் கொள்ளுகின்றுர்கள். எவர்களுக்குப் பரமபதத்தில் நிலைத்தலிருக்கின்றதோ அதனுல் அவர்களுக்குத் திருப்தியுண்டாயிருக்கின்றதோ அந்த ஞானிகளாகிய புருஷர்களின் ஜீவனமே சுகத்தின் பொருட்டாகின்றது. அவர்களது ஜீவனத்தால் மற்றவர்களின் காரியமும் சித்தியாகின்றது. அவர்களுடைய ஜீவனம் சிந்தாமணியினைப்போன்று சிரேஷ்டமுடையதாம். எவனுக்குச் சதா போகத்தில் இச்சையிருக்கின்றதோ ஆத்மபதத்தில் விமுக(மாறுன நோக்க முடையவ)னுகின்றுனே அவனது ஜீவனம் எந்தச் சுகத்தின்பொருட்டுமன்று. அவன் மனிதனு மன்று; கழுதை. விருக்ஷங்கள் பக்ஷிகள் மிருகங்கள் ஜீவிப்பதுப்போல இவனது ஜீவனமுமாம். எவன் சாஸ்திரங்களைப் படித்தும் அடையத்தக்க பதத்தை யடையவில்லையோ அவனுக்கு மற்றச் சுமைகளைப்போல சாஸ்திரம் படித்தலும் சுமையேயாம். படித்தும் விசாரித்தறிதலைச்செய்தும் அவற்றின் சாரங்களைக் கிரகியானுயின்

அவ்விசாரணையும் அவனுக்கு ஓர் பாரமாகின்றது. மனமென்பது ஆகாயவடிவமாம் அதற்குச் சாந்தமுண்டா காவிடின் அம்மனமும் பாரமாம். எவன் மானிடவடிவெடுத் தும் சரீராபிமானத்தை விடாதிருக்கின்றானோ அவனுக்கு அந்தச் சரீரமும் பாரமாம். இந்தச் சரீரத்தின் பயனாக ஆத்மபதம் அடையப்பட்டதாயின் அப்பொழுதே இந்தச் சரீரம் சிரேஷ்டமானதாக வெண்ணப்படும். அதற் கந்நிய மாகிய பயன்களை யுத்தேசித்து ஜீவித்திருப்பது முற்றும் வீணேயாகின்றது. அந்த ஆத்மபதப்பிராப்தியும் அப்பியா சத்தால் கிடைக்கின்றது. பூமியைத் தோண்டுவதால் ஜலம் கிட்டுவதுபோல அப்பியாசத்தால் ஆத்மபதம் அடையப் படுவதாகின்றது. எவன் ஆத்மபதத்தினின்றும் விமுக னுவானோ அவனேஆசையென்னும் பெருங்கயிற்றாற் கட்டப் பட்டு சம்சாரத்தில் உழன்று திரிபவனாகின்றான். சம்சார மென்னும் அலைகள் அநேககாலமாக உண்டாகி நாசமாவது போல ஐசுவரியமும் க்ஷணத்தில் நாசமாவதாம். இதை யடைந்து எவன் அபிமானியாகின்றானோ அவன் மூடன். எப்படி எலியைப் பிடிப்பதற்குப் பூனை பதுங்கியிருக் கின்றதோ, அப்படி ஐசுவரியமானது இவனை நரகத்திற் சேர்ப்பதற்கு வீட்டிற் பதுங்கியிருக்கிறது. எப்படி அஞ்சலியில்(கைகுவித்தலில்) ஜலம் தங்குகிறதில்லையோ அப்படி இலக்ஷ்மியும் நிலைக்கிறதில்லை. இத்தகைய க்ஷணத்தில் நாசமாகும் ஐசுவரியத்தையும் சரீரத்தையு மடைந்து போகத்தில் இச்சைவைப்பவன் மகா மூடன். அவன் மிருத்தியுவின் வாயிலகப்பட்டும் ஜீவிக்க வெண்ணு பவனாகின்றான். எங்ஙனம் பாம்பின் வாயில் அகப்பட்டத் தேரையானது கொசு முதலியவைகளைப் புசிக்க வெண்

னுவது மூடத்தனமோ, அங்ஙனமே இவன் மிருத்தியு வின் வாயில் அகப்பட்டிருந்தும் போகத்தை விரும்புவது மூடத்தனமாம். மேலும் யௌவனவஸ்தையானது நதி யின் பிரவாகத்தினைப் போன்றும், சர்ஜ்ஜனர் துர்ஜ் ஜனரை விட்டு விலகுவதைப் போன்றும் அகன்றபின்பு நாசத்தோடு தோழமைபூண்டுள்ள விருத்தாவஸ்தையானது வந்தடைகின்றது. இதிலும் பலவித துக்கங்கள் பிரபலமாக உண்டாகின்றன. சரீரம் தளர்வடைகின்றது. பிறகு மரண முண்டாகின்றது. ஒரு கணமும் மிருத்தியு இவனை மறக்கிற தில்லை; சதா பார்த்துக்கொண்டேயிருக்கின்றான். மகா காமியாகிய புருஷனுக்கு அழகான ஸ்திரீ கிடைத்தபோது அவன் அவளைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே சதா நோக்க முடையவனாவதுபோல மிருத்தியுவானவன் ஜீவர்களை ஒருநாளும் பாராமல் இருப்பதே கிடையாது.

முனீசுவரரே! மூடர்களது ஜீவனம் துக்கத்திற்குக் காரணமாம். எப்படி விருத்தர்களது ஜீவனம் துக்கத் திற்குக்காரணமாமோ, அப்படி அஞ்ஞானிகளது ஜீவனமும் துக்கத்திற்குக் காரணமாம். அவர்கள் அதிக நாள் ஜீவித் திருப்பதைவிட மரிப்பது சிரேஷ்டம். ஒருவன் மனித சரீரமடைந்தும் ஆத்மபதமடையப் பிரயத்தனஞ்செய் யானாயின் அவன் தன்னைத்தான் கொன்றவனாகின்றான், அவனே ஆத்மஹத்தி செய்தவனாவான்.

முனீசுவரரே! இந்த மாயையானது பார்ப்பதற்கு அழகாகவிருப்பினும் முடிவில் நாசமாகின்றது. எப்படி மரத்தின் உட்பாகத்தை வண்டுகள் சாப்பிட்டுக்கொண்டே போக வெளிக்குமாத்திரம் அம்மரம் அழகாகவே காணப்

படுகின்றதோ அப்படி இவன் வெளிக் கழகாகக் காணப்படினும், உள்ளில் இவனை ஆசையென்பது சாப்பிட்டுக்கொண்டே போகின்றது எந்தப் பதார்த் தங்களை சத்தியமென்றும் சுகவடிவமென்றுங் கருது கின்ருனே அந்தப் பதார்த்தங்கள் சுகவடிவாகிறதில்லை, சர்ப்பத்தின் வாலைப்பற்றி நதியைக்கடக்க நினைத்தவன் அக் கரைசேராது தனது மூடத்தனத்தால் ஆற்றில் மூழ்கிவிடு வதுபோலச் சம்சாரபதார்த்தங்களைச் சுகவடிவென்றறிந்து ஆசிரயஞ்செய்தவன் சுகமடைகிறதில்லை, சம்சாரசமுத் திரத்தில் அழுந்திவிடுகின்ருன்.

முநீசுவரரே! இந்தச் சம்சாரமானது இந்திர தனுசை (வானவில்லை) யொத்திருக்கின்றது. வானவில் பலவர்ணங்களுடையதாகக் காணப்படினும் அதனுல் ஒரு பயனும் கிட்டாததுபோல, இந்தச் சம்சாரத்தில் ஒரு பயனு மில்லை, இது மயக்கமாத்திரமாம். இதில் சுகத்தை இச்சிப்பது வீணேயாம். இவ்வாறு ஜகத்தை அசத்து வடிவென் றறிந்து நான் நிர்வாசனையுடையவஞ யிருப் பதற்கு இச்சிக்கின்றேன்.

ஸ்ரீ வால்மீகி மஹரிஷியினுலருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்ட மகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தில்
சம்சாரசுகநிஷேதவர்ணனமென்னும்
ஒன்பதாவது சர்க்கம் முடிந்தது.



## அகங்கார துராசா வர்ணனம்.



அவதாரிகை:- சர்வ அனர்த்தங்களுக்கும் மமதைகளுக்கும் காரணமாகிய அகங்காரத்தின் நிந்தையினை யிதிற் கூறுகின்றார்.

ஸ்ரீராமசந்திரர்:—முநீசுவரரே! தோன்றியிருப்பதாகிய இந்த அகங்காரம் எதுவோ அது அஞ்ஞானத்தினும் மிகக் கொடியதாம். இதுவே பரமசத்துருவாம். இதனால் எனக்குப் பெரிய பாரம் ஏற்பட்டிருக்கின்றது. மேலும் மித்தையாம். அகங்காரம் சகல துக்கங்களுக்கும் இருப்பிடமாம். எதுவரையில் அகங்காரமிருக்கின்றதோ அதுவரையில் பீடையின் உற்பத்திற்கு ஒருபோதும் அபாவம் (இன்மை) ஏற்படுகிறதில்லை. நான் அகங்காரத்தோடு செய்த பஜனை புண்ணியம், கொடுக்கல் வாங்கல் முதலான இவ்வெல்லாம் வியர்த்தமா(வீணா)ம். இதனால் பரமார்த்தம் ஒன்றும் சித்திக்கிறதில்லை. சாம்பலிற் பெய்த ஆகுதி(அக்கினியிற் சொறியும் நெய்) வீணாவதுபோலவென் றெண்ணுகிறேன். எனக்கு அகங்காரமே பரமரோகமா யிருக்கின்றது.

முநீசுவரரே! அநாதிகாலமாகப் பரம வைரியாயுள்ள இந்த அகங்காரத்தின்பயத்தினாலேயே நான் புசிப்பதுமில்லை; ஜலங்குடிப்பதுமில்லை யென்றால் மற்ற போகங்களை எவ்வாற்றால் நான் விரும்புவேன். சகல துக்கங்களுக்கும் பீஜம்(வித்து) அகங்காரமாம். இது நாசமாகும்போது க்ஷேமமுண்டாகிறது. ஆதலால் எந்த உபாயத்தினால் அகங்காரம் நிவர்த்தியாகுமோ அந்த உபாயத்தைத் தாம் அறிவிக்கவேண்டும்.

முநீசுவரரே! எந்த வஸ்து சத்தியமோ அதைக் கைவிடுவதில் துக்கமே யுண்டாகின்றது. எந்த வஸ்து நாச முடையதாகவும், மயக்கத்தாற் றோன்றுகின்றதாகவு மிருக் கின்றதோ அதை நீக்குவதால் ஆநந்த முண்டாகின்றது. சாந்திவடிவ சந்திரனை மறைப்பது அகங்காரவடிவ இராகு வாம். இராகு சந்திரனைப் பரிசிக்கும் போது அதன் சீதளத்தன்மையும் பிரகாசத்தன்மையும் கெடுவதுபோல, எப்பொழுது அகங்கார முண்டாகின்றதோ அப்பொழுது சமத்தன்மை கெடுகின்றது. எதுவரையில் அகங்கார வடிவ மேகம் கர்ஜ்ஜித்து மழை பொழிகின்றதோ அதுவரையில் ஆசைவடிவ முட்செடிகள் வளர்கின்றன. அவை ஒருபோதும் கெடுகின்றதில்லை. அகங்காரம் நாசமாகும்போது ஆசையும் நாசமடைகின்றது. எது வரையில் மேகமுண்டோ அதுவரையில் மின்னலுமுண்டு. விவேகவடிவ காற்றுண்டானபோது அகங்காரவடிவ மேகத்தின் நீக்கமுண்டாகி மின்னலும் நாசமாகின்றது. எதுவரையில் எண்ணெயும் திரியு மிருக்கின்றனவோ அது வரையில் விளக்கின் பிரகாசமிருக்கின்றது. எண்ணெயும் திரியு மில்லாதபோது தீபப்பிரகாசம் நாசமாவதுபோல எப்பொழுது அகங்காரம் நசிக்கின்றதோ அப்பொழுது ஆசையும் நாசமாகின்றது.

முநீசுவரரே! பரமதுக்கத்திற்குக் காரணம் அகங்கார மாம். அதுகெடவே துக்கமும் கெடுகின்றது. முநீசுவரரே! இந்த இராமனென்பவனுமில்லை; எனக்கொரு இச்சையு மில்லை. ஏனெனின் நானேயில்லாதபோது எனக்கெதி லிச்சை யுண்டாகும்? இச்சை யுண்டாகுமாயின் அகங்காரமின்றிய

பதப்பிராப்தியி லிச்சை யுண்டாகட்டும். ஜநேந்திர(புத்த அருக)தேவருக்கு அகங்காரம் எழாததுபோல எனக்கும் அகங்காரம் உத்தானமாக(எழ)லாகா தென்னு மிச்சையிருக்கின்றது.

முநீசுவரரே! தாமரையைப் பனி நாசமாக்குவதுபோல அகங்காரம் ஞானத்தை நாசமாக்குகின்றது. எப்படி வேடன் வலைகளால் பக்ஷிகளைக் கட்டும்போது கட்டிலகப் பட்டு அவை தீனமடைகின்றனவோ அப்படி அகங்கார வடிவ வேடன் ஆசை யென்னும் வலையை வீசி ஜீவர்களைப் பிடிக்கின்றான். அதனால் ஜீவர்கள் தீனராகின்றார்கள். எப்படிப் பக்ஷிகள்(கோதுமை, நொய்முதலான) அந்நங்களைச் சுகமெனக் கருதி அவற்றைப் புசிக்கவருகின்றனவோ இரையெடுத்துத் திரும்பும் போது அவைமேய வலையில் கட்டுப்பட்டு தீனமாகின்றனவோ அப்படி இவனும் விஷயபோக இச்சையினால் ஆசைவடிவ வலையி லகப்பட்டு தீனனாகின்றான். ஆதலால் முநீசுவரரே! எதனால் அகங்காரம் நாசமாகுமோ அந்த உபாயத்தைத் தெரிவிக்க வேண்டும். எப்பொழுது அகங்காரம் ஒழிந்த தாகுமோ அப்பொழுது யான் பரமசுகமடைவேன். விந்தியாசல பர்வதத்தை ஆசிரயித்து(சார்ந்து) மதங்கொண்டயானைகள் கர்ஜிப்பதுபோல அகங்காரவடிவ விந்தியாசலபர்வதத்தை ஆசிரயித்து மனவடிவமதயானை சங்கற்பவிகற்ப வடிவ பலவித கர்ஜனைகளைச் செய்கின்றது. ஆதலால் எதனால் இந்த அகங்காரம் நாசமடையுமோ அந்த உபாயத்தைத் தெரிவிக்கவேண்டும். மேலும் இந்தத் தேகவடிக ஆரணியத்தில் அகங்காரவடிவ சிம்ஹமானது மகா வுல்லாசமாகச் சஞ்சரிக்கின்றது, அதன் கர்வத்

தினல் ஜகத்து வியாபித்திருக்கின்றது. ஆகையால் இந்த அகங்காரம் தீமைக்கு மூலமாயிருக்கின்றது. மேகத்தை நாசஞ்செய்யும் சரத்காலத்தைப்போல வைராக்கியத்தை நாசஞ்செய்ய அகங்காரமிருக்கின்றது. மோகாதி விகாரங் களின் வடிவாகிய சர்ப்பமானது அகங்கார வடிவ வளையில் தங்குகின்றது. இந்த அகங்காரம் காமியாகிய புருஷனைப் போன்றிருக்கின்றது. எப்படிக் காமியாகிய புருஷன் காமங் களைப் புசித்துக்கொண்டும் கழுத்தில் புஷ்பமாலைகளைப் போட்டுக் கொண்டும் சந்தோஷிக்கின்றானோ, அப்படி ஆசைவடிவக் கயிற்றில் ஜீவர்களாகிய புஷ்பங்கள் கோக் கப்பட்டிருப்பதை அகங்காரவடிவ காமியாகிய புருஷன் கழுத்தில் தரித்துச் சந்தோஷமடைகின்றான்.

முனீசுவரரே! ஆத்மவடிவ சூரியனை மறைப்பது அகங்காரவடிவ மேகமாம். ஞானவடிவ சரத்காலம் வரும் போது அகங்காரவடிவ மேகமும் ஆசைவடிவ சாரலும் நீங்குகின்றன.

முனீசுவரரே! எங்கு அகங்கார மிருக்கின்றதோ அங்குச் சகல ஆபத்துக்களும் வந்துசேருகின்றன வென்பதை நிச்சயமாகக் கண்டிருக்கின்றேன். எப்படிச் சமுத் திரத்தைச் சகல நதிகளும் வந்தடைகின்றனவோ அப்படி அகங்காரத்திற் சகல ஆபத்துக்களும் வந்து சேருகின்றன. ஆதலால் எந்த உபாயத்தினல் இந்த அகங்காரம் நாச மாகுமோ அந்த உபாயத்தை எனக்குச் சொல்லவேண்டும்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
அகங்காரதுராசாவர்ணனமேன்னும்
பத்தாவதுசர்க்கம் முடிந்தது.



## சித்ததுராத்ம வர்ணனம்.



அவதாரிகை:—இராமசந்திரர் அநேக யுக்திகளோடும் திருஷ்டாந்தங்களோடும் சித்தத்தின் தோஷத்தன்மையினை விஸ்தாரமாகக் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினர்:—முநீசுவரரே! என்னுடைய சித்தமானது காமம், குரோதம், மோகம், லோபம், திருஷ்ணை(இச்சை)முதலியவற்றால் துக்கப்பட்டுத் தளர்வுற்றிருக்கின்றது. ஆகலின் மகாபுருஷர்களின் குணங்களாகிய வைராக்கியம், விசாரம், தைரியம், சந்தோஷம் என்பவைகள் அதனிடமாக உண்டாகின்றனவில்லை. எப்பொழுதும் விஷயப்படுகுழியிற் றாவுகின்றது. எங்ஙனம் மயிலினது தோகை காற்று வீசுவதால் நிலையில்லாது அசைந்து கொண்டிருக்கின்றதோ அங்ஙனம் இந்தச்சித்தம் சர்வ காலமும் நிலையற்றுத் திரிந்துகொண்டே யிருக்கின்றது. இதற்கு இலாபம் ஒன்று முண்டாகின்றதில்லை. எங்ஙனம் நாயானது வாசல்கடோறும் அலைந்து திரிகின்றதோ அங்ஙனமே இந்தச் சித்தமும் பதார்த்தங்களையடையும் நிமித்தத்தால் அலைந்து திரிகின்றது ஆயினும் ஒன்றுமே கிட்டுகிறதில்லை. மேலும் அடைந்த எதனைக் கொண்டும் இது திருப்தியை யடைகிறதுமில்லை. உள்ளத்தில் சதாஆசையே எஞ்சி நிற்கின்றது. எப்படிப் புதுக் கூடையில் ஜலம் நிரப்பின் அதனால்அது பூர்ணமடையாது தன்னிடத்துள்ள துவாரங்களால் அந்த ஜலத்தை நெகிழ

விட்டுவிடுகின்றதோ, மேலும் அக்கூடை ஜலமின்றியதால் சூநியமாகவே யிருக்கின்றதோ, அப்படியே சித்தத்திற்குப் போக பதார்த்தங்கள் பிராப்தமாயினும் அதனல் அதற்குச் சந்தோஷம் (போதுமென்னும் திருப்தி) சற்றும் உண்டாகிறதில்லை; சதா திருஷ்ணை(வேட்கை)யே தங்கியிருக்கின்றது. அதுபோலச் சித்தத்திற்குப் போகபதார்த்தங்கள் கிட்டியதால் சந்தோஷம் ஏற்படாது ஆசையே மிஞ்சியிருப்பதாகின்றது.

முநீசுவரரே! இந்தச் சித்தவடிவ மோக சமுத்திரத்தில் ஆசைவடிவ அலைகள் எழுந்துகொண்டே யிருக்கின்றன. ஒருபோதும் அவை ஸ்திரமாகின்றனவில்லை. எப்படிச் சமுத்திரத் தெழுந்த வேகமுள்ள அலைகள் கரையிலுள்ள விருக்ஷங்களில் மோதி விருக்ஷங்களை யடித்துக்கொண்டு போகின்றனவோ அப்படிச் சித்தவடிவ சமுத்திரத்தில் விஷயங்களென்னும் அலைகள் பிரவகித்துக்கொண்டிருக்கின்றன. அதில் வாசனை வடிவ வேகமுள்ள அலைகள் உண்டாகும்பொழுது எனது அசல (அசைவற்ற) சுபாவமானது சலிக்(அசை)கின்றது. இந்தச்சித்தத்தால் நான் சுவாதீனமற்றவனு யிருக்கின்றேன். வலையிலகப்பட்ட. பக்ஷியானது தீனமாவதுபோலச் சித்தமாகிய வேடன் கட்டிய வாசனைவடிவ வலையிற் கட்டுப்பட்டு யான் வசமிழந்தவனு யிருக்கின்றேன். இனத்தைப் பிரிந்த மான் தனித்து துக்கமடைவதுபோல ஆத்மபதத்தைப் பிரிந்த யான் சித்தத்தால் துன்புறுகின்றேன்.

முநீசுவரரே! இந்தச் சித்தம் சதா க்ஷோப (கலக்க) முடையதாகவேயிருக்கின்றது; ஒருபோதும் நிலைத்திருப்ப

தில்லை. பாற்கடல் மந்தராசலத்தால் கலக்கமடைவது போல இந்தச் சித்தம் சங்கற்பவிகற்பங்களால் கலக்கமடைகின்றது. கூண்டிலகப்பட்ட சிம்ஹம் அக்கூண்டில் சஞ்சரித்துக் கொண்டே யிருப்பதுபோல இந்தச் சித்தம் வாசனையில் அகப்பட்டுச் சுவயமாகச் சஞ்சலசுபாவ முடையதாகின்றது; சிந்தையின் சமூகத்தினல் மிகச் சபல வடிவைத் தரிப்பதாகி நிலை பெருததாகின்றது.

முநீசுவரரே! இந்தச்சித்தமானது என்னை வெகுதூரத்திற்கப்பாற் றள்ளியிருக்கின்றது. பெருங்காற்று உலர்ந்த சருகுகளை வெகு தூரத்திற்கொண்டுபோய்த் தள்ளுவதுபோலச் சித்தவடிவக் காற்ருனது என்னை ஆத்மாநந்தத்தினின்றும் வெகுதூரத்திற் றள்ளியிருக்கின்றது. எப்படி உலர்ந்த சருகுகளை அக்கினி எரிக்கின்றதோ அப்படிச் சித்தம் என்னை எரிக்கின்றது. அக்கினியினின்றும் புகையுண்டாவதுபோலச் சித்தவடிவ அக்கினியினின்றும் ஆசைவடிவப் புகையுண்டாகின்றது. அதனல் யான் பரமதுக்கமடைகின்றேன். இந்தச் சித்தமானது மோகவடிவ இரதத்திலேறி வெகு சீக்கிரமாக சரீரத்திலுள்ள சமதிருஷ்டிவடிவ சுகத்தை அன்னப் பக்ஷியைப்போல அபகரித்து விடுகின்றது. இராஜஹம்ஸம் பாலோடு கலந்த நீரை வேறுபடுத்துவது போல் அநாத்மாவோடு அஞ்ஞானத்தினல் ஒற்றுமை யடைந்தயான் அவற்றை வேறுபிரிக்கச் சாமர்த்திய மற்றிருக்கின்றேன்

முநீசுவரரே! இந்தச் சித்தவடிவச் சத்துருவை நாசஞ்செய்யு முபாயத்தைத் தெரிவிக்கவேண்டும்; மரித்த பிணத்தை ஆண் பெண் ணுய்கள் பிடுங்கித் தின்பதுபோல இந்த ஆசையென்னும் நாய் என்னைப் புசித்துக்கொண்டேயிருக்கின்றது. ஆத்மஞானமடையாது யான் சவத்தை

யொத்திருக்கின்றேன். எப்படிக் குழந்தைகள் தன்னிழலை வேதாளமென்று மதித்து அதனால் பயமடைகின்றதோ அப்படிச் சித்தவடிவ வேதாளமானது என்னைப் பற்றியிருக்கிறது. அதனால் யான் பயமடைகின்றேன். ஆதலால் தாங்கள் எனது சித்தவடிவ வேதாளம் நாசமாகும் உபாயத்தைத் தெரிவிக்கவேண்டும்.

முனீசுவரரே! சித்தத்தில் அஞ்ஞானத்தினால் மித்தையாகிய வேதாளம் திடமாயிருக்கின்றது. அதை நான் நாசஞ் செய்யச் சக்தியற்றவனாயிருக்கின்றேன், ஜொலிக்கும் அக்கினியினுட்காருவதும் எளிது; பெரிய மலைகளின்மீது நடந்து திரிவதும் எளிது; பெருத்த வஜ்ஜிரத்தைப் பொடிசெய்வது மெளிது. ஆனால் சித்தத்தை ஜெயிப்பது அரிதென்றும் கடினமென்றும் மதிக்கின்றேன். இந்தச் சித்தம் எப்போதும் அலையும் சுபாவமுள்ளதாயிருக்கின்றது. கம்பத்திற் கட்டிய குரங்கானது ஒரு கணமும் ஸ்திரமாயிராததுபோல இந்தச் சித்தமும் வாசனையால் மோதப்பட்டு ஒருபோதும் நிலைபெறுகிறதில்லை.

முனீசுவரரே! பெருஞ் சமுத்திரத்தைக் குடிப்பதும் எளிது; அக்கினியை விழுங்குவதும் எளிது; மகாமேருவைத் தாண்டுவதும் எளிது. ஆனால் சித்தத்தை ஜெயிப்பது அரிதென் றெண்ணுகின்றேன். எப்படிச் சமுத்திரமானது தனது நெகிழ்ச்சியாகிய தன்மையினை விடாது திரவத்தன்மையோ டிருத்தலால் அதில் பலவித அலைகளுண்டாகின்றனவோ அப்படிச் சித்தமும் தனது சஞ்சலசுபாவத்தை ஒருபோதும் விடுகிறதில்லை; பலவிதவாசனைகளை யுற்பத்தி செய்துகொண்டே யிருக்கின்றது. எப்பொழுதும் குழந்தை

களைப் போலச் சஞ்சல சுபாவமுடையதாய் விஷயங்களையே பற்றிச் செல்லுகின்றது. தான் இச்சித்தப் பதார்த்தங்கள் கிடைப்பினும் உள்ளத்தி லெப்பொழுதும் சஞ்சலமே தங்குகின்றது. சூரிய னுதயமாகவே பகலுண்டாகி அஸ்தமித்தபோது பகல் நாசமடைவதுபோலச், சித்த முதித்த போது மூன்றுலக உற்பத்தியு முண்டாகிச் சித்த மொடுங்கியபோது லயமாகின்றது.

முநீசுவரரே! ஜலம் நிறைந்த சமுத்திரத்துள் பெருஞ் சர்ப்பமானது அதில் பிரவேசிப்பவனைத் தீண்டவே அதனல் அவன் விஷமேறப்பெற்றுப் பெருந்துன்பமடைவது போலச் சித்தவடிவ் சமுத்திரத்தில் வாசனைவடிவ ஜலமும் அதில் சஞ்சல மென்னும் சர்ப்பமு மிருக்கின்றன. அதனை ஜீவன் சமீபித்தபோது போகவடிவ சர்ப்பமானது அவனைத் தீண்டவே அதனல் ஆசையென்னும் விஷம் தலைக்கேறி மரிக்கின்றான்,

முநீசுவரரே! சித்தமானது எந்தப் போகங்களைச் சுகமெனக் கருதிச் செல்லுகின்றதோ அந்தப் போகம் துக்கவடிவமாம். புற்கள்மூடிய படுகுழியை விவேகமற்ற மானனது கண்டு அதைப் புசிக்கும் இச்சையினல் அங்குச் சென்று அக்குழியில் வீழ்ந்து துக்கமடைவதுபோலச் சித்தவடிவமானனது போகமென்னும் இரைகளைச் சுகமெனக் கருதி அதைப் புசிக்கச்சென்று ஆசைவடிவப் படுகுழியில் வீழ்ந்து ஜந்ம ஜந்மாந்தர துக்கங்களை யடைகின்றது.

முநீசுவரரே! சிலகாலம் மகா கம்பீரமா யிருக்கின்ற சித்தமானது போகங்களைக் கண்டபோது அங்குச்சென்று

விடுகின்றது. எப்படி ஆகாயத்திற் பறந்துதிரியும் கழுகானது பூமியிலுள்ள மாமிசங்களைக் கண்டபோது அங்கிருந்து பூமியில் வந்துட்கார்ந்து அந்த மாமிசங்களைப் புசிக்கின்றதோ அப்படி இந்தச் சித்தமானது போகங்களைக் காணுகிற வரையில் உதாரமாகவிருந்து விஷயங்களைக் கண்டபோது ஆசையோடு அதிற் பாய்கின்றது. மேலும் இந்தச் சித்தமானது எப்பொழுதும் வாசனையென்னும் சயனத்தி லுறங்கிக்கொண்டே ஆத்மபதமாகிய விழிப்பினை யடையா திருக்கின்றது. இந்தச் சித்த மென்னும் வலையில் யான் கட்டுப்பட் டிருக்கின்றேன். அதாவது: வாசனை வடிவக் கயிற்றோடும் சம்சாரம் சத்தியமென்னும் முடிச்சுக்களோடும் போக மென்னும் துவாரங்களோடுங்கூடிய சித்தமாகிய வலையினால் யானே கட்டுப்பட் டிருக்கின்றேன். வாசனையாகிய கயிற்றில் கலையங்கட்டிய ஏற்றம் போலக் கட்டப்பட்டு மேலுங்கீழுமாயு ழலுகின்றேன்.

ஆனதால், முநீசுவரரே! எந்த உபாயத்தினால் இந்தச் சித்தவடிவச் சத்துருவை ஜயிப்பேனோ அந்த உபாயத்தைச் சொல்லவேண்டும். இப்பொழுது எனக்கு எந்தப் போகங்களிலும் இச்சையில்லை; ஜகத்திலு மிச்சையில்லை! ஐசுவரியங்களிலு மிச்சையில்லை: இலக்ஷுமி விரசமாகத் தோற்றுகின்றது. எப்படிச் சந்திரனானவன் மேகங்களை விரும்பாதிருப்பினும் * சாதுர் மாதங்களில் மேகங்கள் அவனை மறைக்கின்றனவோ; அப்படி நான் போகங்களை விரும்பா

* சந்நியாசிகள் ஜீவகாருண்யத்தினால் ஆரண்யவாசத்தை விட்டு நகரங்களில் ஒருவரை யாசிரயித் திருக்குங்காலம். அல்லது வியாஸ பூஜைமுதல் க்ஷீராப்தி பூஜைவரையிலுள்ள ஆடி ஆவணி புரட்டாசி அற்பிசி என்னும் நான்கு மாதங்கள் சாதுர்மாதங்களெனப்படும்.

திருப்பினும் போகங்கள் என்னெதிர்ப் படுகின்றன. ஆனதால் இந்த ஜகத்தாகிய ஐசுவரியங்களை யான் விரும்ப வில்லை. எனது சித்தமே எனக்குக் கொடிய சத்துருவா யிருக்கின்றது.

முநீசுவரரே! உலகத்தை ஜயிப்பதற் கெத்தனஞ் செய்யும் மஹாபுருடர்கள் முதலில் சித்தத்தை ஜயிப்பார் களாயின் அவர்கள் பரமபதமடைவார்கள். ஆதலால், எந்த உபாயத்தைக்கொண்டு மனதை ஜயிப்பேனோ அந்த உபாயத்தினைத் தெரிவிக்கவேண்டும். காடுகள் மலைகளை யாசிரயித் திருப்பதுபோல சர்வதுக்கங்களும் இவனை யாசிரயித்திருக்கின்றன.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினு லருளப்பெற்ற

ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்

தேவதூதனுற் சொல்லப்படும்

மோக்ஷோபாயமாகிய

சித்ததுராத்மவர்ணனமென்னும்

பதினேறாவதுசர்க்கம்முடிந்தது,



## திருஷ்ணகாருடி வர்ணனம்.

அவதாரிகை:—சர்வ பாபங்களுக்குத் தாய்போன்றதும், நீனத்தன்மை கிருபணத்தன்மைகளை யுண்டாக்குவதும், மிருத்தியுவை யடைவிப்பதும், சர்வ ஜகத்தையும் உழலச்செய்வதும், தோஷங்களுக்கு முக்கிய ஸ்தானமுமாகிய திருஷ்ணையின் னிந்தையினை யிதிற் கூறுகின்றார்.

இராமசந்திரர்:—ஓ பிராஹ்மணரே! அந்தக்கரணத்தில் பரமப்பிரேமைக்கு இடமாகிய எந்த ஆத்மதத்துவம் அல்லது விவேக மிருக்கின்றதோ அந்த விவேகாதிகளை மறைக்கும் அந்தகாரமாகியதும், துக்கத்தினாலும் நீக்குதற் கரிதானதுமான திருஷ்ணை(ஆசை)யென்னும் இரவானது ஜடசேதனவடிவ ஆகாயத்திற் பிரவேசிக்கவே அதில் காமம், குரோதம், லோபம், மோகமுதலான ஆந்தைகள் சஞ்சரிக்கின்றன. எப்பொழுது ஞானவடிவ சூரிய னுதயமாகின்றானோ அப்பொழுது திருஷ்ணைவடிவ இரவும் போகாதி ஆந்தைகளும் இல்லாதனவாகின்றன. ஆலங் (பனிக்)கட்டியானது சூரியனுடைய உஷ்ண கிரணசம்பந்தத்தினால் கரைந்துபோவதுபோலச் சந்தோஷவடிவ ரஸத்தைத் திருஷ்ணையென்னும் உஷ்ணமானது வற்றச்செய்கின்றது. மேலும் எப்படிச் சூநியமானவனத்தில் பைசாசங்கள் தமது பரிவாரங்களோடு தாசிகள் நர்த்தனம் செய்வதுபோல நர்த்தனம்செய்து சஞ்சரித்துக் களிக்கின்றனவோ அப்படி

ஆத்மபதவி யடையாத சித்தமாகிய பயமிகுந்த சூநிய வனத்தில் ஆசையென்னும் பைசாசங்கள் மோகமுதலான பரிவாரங்களோடு சஞ்சரித்துக் களிக்கின்றன.

முநீசுவரரே! சரீரவடிவ மலைகளை யிடமாகக் கொண்டுள்ளத் திருஷ்ணை யென்னும் நதியின் பிரவாகம் அதிக நிந்தை பொய்பேசுத லென்னும் சப்தத்தோடுகூடிய சஞ்சலமாகிய பலவித சங்கற்பவடிவ அலைகளோடுண்டாகின்றன. மேகத்தைக் கண்டு மயில் சந்தோஷிப்பதுபோலப் போகவடிவ மேகத்தைக் கண்டு திருஷ்ணை யென்னும் மயில் களிக்கின்றது. ஆதலால் பரம துக்கத்திற்குக் காரணம் திருஷ்ணையேயாம். எப்பொழுது யான் விவேகம் வைராக்கியம் சந்தோஷாதி குணங்களில் ஒன்றைப் பற்றுகின்றேனோ அப்பொழுது அதனைத் திருஷ்ணையானது நாசமாக்குகின்றது. எப்படி அழகாகிய சாரங்கி என்னும் வாத்தியத்துள்ள தந்திகளை எலிகள் துண்டிக் கின்றனவோ அப்படித் திருஷ்ணையானது சந்தோஷாதி குணங்களை யழிக்கின்றது.

முநீசுவரரே! நான் சகலத்தினும் மேலான பதத்தில் இருக்கவேண்டு மென்று பிரயத்தினம் செய்தபோதிலும் திருஷ்ணையானது என்னை யதில் நிலைபெறச் செய்கிறதில்லை. எப்படி வலையிலகப்பட்ட பக்ஷி ஆகாயத்திற் பறக்க முயற்சித்தும் பறக்கச் சக்தியற் றிருக்கின்றதோ, அப்படி நான் அநாத்மபதத்தினின்றும் ஆத்மபதமடையச் சக்தியற் றிருக்கின்றேன். நான் ஸ்திரீ புத்திரன் குடும்பமென விரிந்த வலையிலகப்பட்டு விடுபாடின்றி ஆசை யென்னுங் கயிற்றாற் கட்டப்பட்டுச் சிலகாலம் மேலும்

சிலகாலம் கிழமாக வலைக்கப்படுகிறேன். என்கதி கடியந்திர மொத்திருக்கின்றது. மேகங்களி லுண்டாகிய வானவில்லானது பல வர்ணங்களுள்ளதாகக் காணப் படினும் நடுவில் சூநியமாகவே யிருப்பதுபோலத் திருஷ்ணை யானது மலின அந்தக் கரணத்திற்றேன்றி குணமென்னும் கயிறின்றிப் பெரிதாகக் காணப்படினும் பார்ப்பதற்கழகே யன்றி இதனுல் ஒருகாரியமும் சித்திக்கிறதில்லை.

முநீசுவரரே! திருஷ்ணை யென்னும் மேகத்தி னின்றும் துக்கவடிவத் துளிகளுண்டாகின்றன. திருஷ்ணை யென்னுங் கரும்பாம்பு தொடுவதற்கு மிருதுவா யிருப் பினும், விஷம் நிறைந்த அதன் கடித்தற்றன்மை யால் மனிதன் மரிக்கின்ருன். திருஷ்ணையென்னும் மேகமானது ஆத்மவடிவ சூரியனை மறைத்திருக்கின்றது. ஞானவடிவக்காற்று வெளிப்பட்டபோது ஆசைவடிவமேகம் நாசமடையவே ஆத்மபதசாக்ஷாத்கார முண்டாகின்றது. மேலும் ஞானவடிவத் தாமரை குவிதற்குத் திருஷ்ணை யென்பது ஓர் நிசியாம். எதைக் கண்டு மகா தைரியவான் களும் பயமடைவார்களோ அத்தன்மையத் திருஷ்ணைவடிவ பயங்கரமான இருள்நிறைந்த இராவிருக்கின்றது. இது எப்பொழுது வருகின்றதோ அப்பொழுது வைராக்கியம் அப்பியாசமென்னுங் கண்களைக் குருடாகச் செய்கின்றது. அதாவது சத்தியாசத்தியத்தன்மைகளை விசாரிக்கச் செய்கிறதில்லை.

முநீசுவரரே! திருஷ்ணை யென்னும் டாகினி (பிசாசு) சந்தோஷமுதலான குழந்தைகளைக் கொல்லுகின்றது. திருஷ்ணையென்னுங் குகையில் மோகவடிவ மதயானை யிருந்து கர்ஜ்ஜிக்கின்றது. திருஷ்ணையென்னும் சமுத்திரத்தில் ஆபத்துவடிவ நதிகள் வந்து சேருகின்றன. ஆனதால் திருஷ்ணைவடிவ துக்கமானது எனக்கெதனுல் விடுபடுமோ அந்த உபாயத்தைத் தெரிவிக்கவேண்டும்.

முநீசுவரரே! திருஷ்ணையினு லுண்டாகின்ற துன்பத்தினைப்போன்ற துன்பம் அக்கினியாலும் வாளால் வெட்டுவதாலும் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தாலும் உண்டாகிறதில்லை. இவன் ஆசையென்னும் வாளால் வெட்டப்பட்டு புண்பட்டுப் பெருந் துன்பமடைகின்ருன். இந்தத் திருஷ்ணை வடிவத் தீபத்தினிடத்துச் சந்தோஷாதி விட்டிற்பூச்சிகள் விழுந்து மாய்கின்றன. மீனுனது ஜலத்திற் கிடக்கும் பருக்கைக் கற்களையும் மணல்களையும் தனக்கிரையாமெனக் கருதி அவற்றினை வாயிற் கவ்வியபோதினும் அதற்கு ஒருபயனும் சித்தியாதது போலத் திருஷ்ணையும் அநேக பதார்த்தங்களைக்கண்டு அவற்றின்மீது தாவிச் செல்லினும் அதற்கு எதனுலும் திருப்தி யுண்டாகிறதில்லை. எப்படிப் பக்ஷிகள் சிற்சிலவிடங்களுக்குப் பறந்துசென்று எங்கும் நிலைபெறுகிறதில்லையோ அப்படித் திருஷ்ணையும் சிலநேரம் ஒரு பதார்த்தத்தையும் சிலநேரம் மற்றொன்றையும் பற்றிக்கொண்டு ஒன்றிலும் நிலைபெறு திருக்கின்றது. எங்ஙனம் குரங்கானது சிலநேரம் விருக்ஷத்தடியிலும் சிலநேரம் விருக்ஷத்தின்மீதும் சஞ்சரித்துக்கொண்டு

நிலைபெறுகிருக்கின்றதோ அங்ஙனமே திருஷ்ணையென்னும் குரங்கும் ஒருபோதும் நிலைபெறுகிறதில்லை. ஒருவன் தனக்குக் கிட்டாத பதார்த்தத்திற்குப் பிரயத்தினம் செய்வதுபோலத் திருஷ்ணையும் பலவித பதார்த்தங்களைக் கிரக்கின்றது; அநுபவிக்கின்றது. ஆயினும் அதற்கு ஒருபோதும் திருப்தியுண்டாகின்றதில்லை. நெய் ஆகுதியினால் அக்கினி திருப்தியடையாததுபோலத் திருஷ்ணையும் கிடைத்தற்கரிய பதார்த்தங்களிற் சென்றதால் சாந்தியடைகிறதில்லை.

முநீசுவரரே! நதியின் பெரும் பிரவாகமானது தன்னிடத்திறங்கினவனைச் சிலநேரம் மலையின் பக்கத்திலும் சிலநேரம் வேறு திசைகளிலும் மற்றும் பலவிடங்களிலும் அடித்துக்கொண்டுபோவதுபோலத் திருஷ்ணை யென்னும் நதியின் பிரவாகமானது பலவிடங்களிலு மிழுத்துச் செல்லுகின்றது. திருஷ்ணையென்னும் நதியில் வாசனையென்னும் அலைகள் ஓயாதெழுகின்றன. ஒருபோதும் அமைதியாகிறதில்லை. திருஷ்ணை யென்னும் கூத்தாடிச்சி ஜெகத்தென்னும் கூட்டத்தினை யுண்டாக்கியிருக்கின்றாள். மூடர்கள் அதைத் தலைதூக்கிப் பார்த்துக் களிக்கின்றார்கள்; எப்படிச் சூரிய னுதயமாகவே தாமரைகள் இதழ்களை விரித்துத் தலை நிமிர்ந்திருக்கின்றனவோ அப்படி மூடர்கள் திருஷ்ணையைப் பார்த்துத் தலைநிமிர்ந்து களிக்கின்றனர். இந்தத் திருஷ்ணை யென்னும் கிழட்டு வேசியானவள் நாற்றிசைகளிலும் ஓடித் திரிகிறாளென்று அவளைத் தள்ளிவைத்தபோதிலும் அவள் இவனைப் பின்றொடர்ந்தே திரிகின்றாள். ஒருபோதும் விலகுகிறதில்லை. எப்படிப் பசுவானது கயிற்றால் கட்டப்

பட்டுழல்கின்றதோ அப்படி ஜீவர்கள் திருஷ்ணை யென்னுங் கயிற்றாற் கட்டப்பட்டு உழலுகின்றார்கள். திருஷ்ணை யென்பது மிகக் கொடியது. இது நற்குணங்களைக் கண்டபோது நாசஞ்செய்கின்றது. இதன் சேர்க்கையால் யான் தீனத்தன்மை யடைந்திருக்கிறேன். எப்படிச் சாதக பக்ஷிகள் மேகத்தைக்கண்டு சந்தோஷித்து அதன் றுளிகளைப் பருகும்போது காற்றானது அம்மேகத்தை யடித்துச் செல்வதைக்கண்டு அவைகள் தீனமாகின்றனவோ, அப்படித் திருஷ்ணையானது சுபகுணங்களைக் கவர்ந்துசெல்வதால் யான் தீனனாகின்றேன்.

முநீசுவரரே! காற்றானது உலர்ந்த சருகுகளை வெகு தூரத்திலடித்துச் செல்வதுபோலத் திருஷ்ணை யென்னுங் காற்று என்னை வெகுதூரத்திற் றள்ளியிருக்கின்றது. இதனால் யான் ஆத்மபதத்திற்கு வெகுதூரத்திருக்கின்றேன்.

முநீசுவரரே! எப்படித் தாமரையை நாடிச்சென்ற வண்டுகள் ஒருசமயம் அத்தாமரையின் அடியிலும் பக்கங்களிலும் உட்கார்ந்து பறந்து திரிகின்றனவோ அப்படித் திருஷ்ணை வடிவ வண்டானது ஒருசமயம் சம்சார வடிவத் தாமரையினடியிலும் மேலுமாக உட்காருகின்றது; ஒருபோதும் நிலைபெறுகிறதில்லை. எப்படி முத்துள்ள மூங்கிலினின்றும் அநேகமுத்துக்கள் வெளிப்படுகின்றனவோ அப்படித் திருஷ்ணைவடிவ மூங்கிலினின்று ஜெகத்துவடிவ அநேக முத்துக்கள் வெளிப்படுகின்றன. அதைக் கண்டு

லோபியின் மனம் பூரணமாகிறதில்லை. துக்கவடிவ இரத்தினங்களைவைப்பதற்குத் திருஷ்ணையென்பது ஒரு டப்பியாயிருக்கின்றது. இப்படி அநேக துக்கங்களோடுகூடிய திருஷ்ணையானது நிவிர்த்தியாகும் உபாயத்தைத் தெரிவிக்க வேண்டும்.

முநீசுவரரே! எப்படி அந்தகாரமானது பிரகாசத்தைவிட வேறெந்த உபாயத்தாலும் நீங்குகிறதில்லையோ, அப்படித் திருஷ்ணையானது வைராக்கியம் ஒன்றைத் தவிர வேறெந்த உபாயத்தினாலும் நிவிருத்தியாகிறதில்லை. திருஷ்ணையென்னுங் கலப்பையானது குணமென்னும் பூமியை உழுதுவிடுகின்றது. திருஷ்ணையென்னுங் கொடிகள் குணவடிவ ரஸத்தைப் பருகுகின்றன. திருஷ்ணையென்னும் புழுதிகள் அந்தக்கரண மென்னும் ஜலத்திற் படிந்து கலங்கியிருக்கின்றன.

முநீசுவரரே! நதிகளானது மழைக்காலத்திற் பெருகி மற்றைக்காலத்தில் குறைவதுபோலத் திருஷ்ணையானது இஷ்டபோகவடிவ ஜலமுண்டானபோது சந்தோஷத்தாற் பெருகிப் போகவடிவ ஜலம் குறைந்தபோது உலர்ந்து போகின்றது.

முநீசுவரரே! இந்தத் திருஷ்ணையானது உலர்ந்த புற்களைக் காற்றடித்துக்கொண்டு போவதுபோல என்னை அடித்துக் கொண்டுபோய்த் தீனமாக்கி யிருக்கின்றது. ஆகலால் தாம் எந்த உபாயத்தினால் எனது திருஷ்ணை [illegible]குமோ, ஆத்மபதத்தினடைவு வுண்டாகுமோ, சர்வ துக்கநிவிருத்தியும் பரமாநந்தப் பிராப்தியுமுண்டாகுமோ, அந்த உபாயத்தைத் தெரிவிக்கவேண்டும் என்றார்.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகர்ணத்தின்
திருஷ்ணுகாருடி வர்ணனமென்னும்
பன்னிரண்டாவது சர்க்கம் முடிந்தது.



## தேகநிராசா வர்ணனம்.

அவதாரிகை:—ஆதிவியாதி முதலான அநேக துக்கங்கள்நிறைந்த விருத்தாவஸ்தைக்கும் கணத்தில் நாசமாக்கும் மரணத்திற்கும் ஆசைக்கும்மூலகாரணமாயுள்ள இச் சரீர நிந்தையினை யிதிற் கூறுகின்றார்.

இராமசந்திரர்:— முநீசுவரரே! இந்த ஜகத்திலுண்டாகிய அமங்கலவடிவ சரீரமானது சதாவிகாரமுடையதும் மாமிச மஜ்ஜை(கொழுப்புக்)களால் நிறைந்ததும் சதா பரிசுத்தமில்லாததுமா யிருக்கின்றது. இதனால் ஒரு பிரயோஜனமு மிருப்பதாக நான் காண்கிறதில்லை. இந்த விகாரவடிவ சரீரத்தில் நானிச்சை வைக்கிறதில்லை. இச்சரீரம் அஞ்ஞமு(ஜடமு)மன்று, தஞ்ஞ(சேதன)முமன்று. அக்கினியைச் சம்பந்தித்துள்ள இரும்பானது அக்கினி சம்பந்தத்தினால் அதன் வடிவடைந்து பிறவற்றை யெரித்த போதிலும் தானெப்படி யெரிக்கப் படுகிறதில்லையோ, அப்படி இந்தத் தேகம் ஜடமு மன்று; சேதனமு மன்று. இதனாற் காரியசித்தி யுண்டாகின்ற காரணத்தினால் ஜடமு மன்று, இதற்குத் தன்னிடத்து ஒரு ஞானமு முண்டாகாத காரணத்தினாற் சேதனமுமன்று. ஆனதால் இது மத்தியத் தன்மையிலிருக்கின்றது. எவ்வாறெனின், இரும்பும் அக்கினியும் போலச் சேதன ஆத்மா இதில் வியாபித்திருக்கின்றதென் றறிகின்றேன். என்றபோதிலும் இதுவோ எலும்பு மாமிசம் உதிரம் மூத்திரம் மலம் மஜ்ஜையென்பன நிறைந்

துள்ளதாகவும், விகாரமுள்ளதாகவும், பரிசுத்தமில்லாததாகவும், துக்கத்திற்கு ஓரிடமாகவு மிருக்கின்றது. இது இஷ்ட பதார்த்தங்களை யடைந்து சந்தோஷத்தினையும் அநிஷ்ட பதார்த்தங்களை யடைந்து துக்கத்தினையு மநுபவிக்கின்றது. ஆனதா லிச் சரீரத்தி லெனக் கிச்சையில்லை. இது அஞ்ஞானத்தினு லாக்கப்பெற்றதாம்.

முநீசுவரரே! இத்தன்மைய அமங்கலவடிவ சரீரத்தி லுண்டாகும் நானென்னும் ஸ்புரணமெ(எழுச்சியெ)துவோ அது துக்கத்திற்குக் காரணமாம். இது சம்சாரத்தில் நிலைத்துப் பலவித சப்தங்களைச் செய்கின்றது. எப்படி ஒரு அறையில் பூனையிருந்து பலவித சப்தங்களைச்செய்கின்றதோ, அப்படி அகங்காரவடிவப் பூனையானது தேகத்திலிருந்து "அகம் அகம் நான் நான்" என்று சப்திக்கின்றது, கணமேனும் சும்மாவிருப்பதில்லை.

முநீசுவரரே! ஜயத்தின் பொருட் டுண்டாகும் பேரியின் சப்தம் அழகாயிருப்பதுபோல ஒன்றை யுத்தேசித் துண்டாகும் சப்தமே யழகுள்ளதாம். மற்றையசப்தம் வீணேயாம். அதுபோல அகங்காரமில்லாத பதமெதுவோ அது அழகுடையதாம். மற்றவை வீணேயாகின்றன. சரீரவடிவக் கப்பலானது போகவடிவ மணலிற் பதிந்து பெயர்ப்பதற்குக் கடினமாயிருக்கின்றது. எப்பொழுது வைராக்கிய வடிவ ஜலம் பெருகுகின்றதோ அப்பொழுதுஅப்பியாசவடிவ மாலுமியின் பலத்தைக்கொண்டு சம்சாரமென்னும் சாகரத்தைக் கடந்து அக்கரை சேருகின்றான். மேலும் சரீரவடிவக் கப்பலானது சம்சாரவடிவ சமுத்திரத்துள்ள திருஷ்ணை யென்னும் பிரவாக ஜலத்தில் மிதக்கின்றது. இதிலுள்ள

போகமென்னும் மகரமீன் சரீரவடிவக் கப்பலைக் கரை கடக்கச் செய்கிறதில்லை. எப்பொழுது சரீரவடிவக் கப்பலுக்கு வைராக்கியவடிவக் காற்றும் அப்பியாசவடிவ மாலுமியின் பலமு முண்டாகின்றதோ, அப்பொழுது சரீரவடிவக் கப்பல் அக்கரை சேருகின்றது.

முநீசுவரரே! எவன் இந்தக் கப்பலை யுபாயத்தினால் சம்சார சமுத்திரத்தினின்றும் 'கடத்துகின்றானோ அவன் சுகியாகின்றான். எவன் இவ்வாறு கடத்தவில்லையோ அவன் பரம ஆபத்தையடைந்து கப்பலோடு முழுகிப் போகின்றான். கப்பலில் துளையுண்டான போது அவ்வழியாக ஜலம் பிரவேசிக்கக் கப்பல் முழுகிப் போகின்றது. அக்காலத்தில் அதிலுள்ள பதார்த்தங்களை மீன்கள் புசித்துச் செல்லு கின்றன. அதுபோல இங்குச் சரீரவடிவக் கப்பலில் திருஷ்ணையென்னுந் துவாரமுண்டாக அதனால் சம்சார சாகரத்தில் முழ்குகின்றான். அப்பொழுது போகவடிவ முதலைகள் இவனை விழுங்கிவிடுகின்றன. தன்முன் னிந்தக் கப்பல் எவ்வாறுனதென்று தோன்றும விருப்பதுவே ஆச்சரியம்! ஜீவர்கள் தன்னை மூடத்தனத்தால் கப்பலாக மதித்து ஆசையென்னுந் துளைகளால் துக்கமடைகின்றார் கள். மேலும் சரீரவடிவமான ஒரு விருக்ஷமிருக்கின்றது. இதற்குத் தோள்வடிவக் கிளைகளும் விரல்களென்னுமிலை களும் இடையென்னுங் கம்பமும் மாமிசவடிவ உட்பாகங் களும் வாசனையென்னும் விழுதுகளும் சுகதுக்கமென்னும் புஷ்பங்களுமிருக்கின்றன. ஆசைவடிவ வண்டுகள் சரீர வடிவ விருக்ஷத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றன. எப்பொழுது இதற்கு வெண்ணிறமான புஷ்பங்களுண்டா

கின்றனவோ அப்பொழுது நாசத்திற்குச் சமீபமாகின்றது. அதாவது மிருத்தியுவைச் சமீபிக்கின்றது. மீண்டும் இச்சரீரவடிவ விருக்ஷம் எப்படி யிருக்கின்றதெனின், இதற்குத் தோள்கள் கிளைகளாகவும், கால்கைகள் இலைகளாகவும், கிளர்ச்சி பூங்கொத்துக்களாகவும், பற்கள் புஷ்பங்களாகவும், இடுப்பு கம்பமாகவும் இருந்து கருமமென்னும் ஜலத்தினல் வளருவதாகவும் இருக்கின்றது. விருக்ஷத்திலிருந்து பிசினுகிய ஜலம் வெளிப்படுவது போலச் சரீரத்திலிருந்து ஜலம் வெளிப்படுகிறது. மரங்கொத்திப் பறவைகளாலேற்பட்ட விம் மரத்தின்பொந்தில் ஆசையென்னும் விஷம் நிறைந்த சர்ப்பமு மிருக்கின்றது. எப்பொழுது ஒருவன் இவைகளில் ஒன்றை யபேக்ஷித்து இதைச் சமீபிக்கின்ருனே அப்பொழுது அதிலுள்ள ஆசையென்னும் பாம்பு இவனைத் தீண்டவே விஷம் தலைக்கேறி மரிக்கின்ருன்.

முநீசுவாரே! ஜீவ் ஈசுவரரென்னும் இரண்டு பக்ஷிகள் தங்குவதற்கிடமாயுள்ள இத்தன்மைய அமங்கலவடிவுடைய சரீரமாகிய விருக்ஷத்தில் எனக் கிச்சையில்லை. இது பரம துக்கத்திற்குக் காரணமாகின்றது. எதுவரையில் ஒருவன் தனது பரிவாரங்களில் கட்டுப்பட் டிருக்கின்ருனே அது வரையில் முத்தியானது கிட்டுகிறதில்லை. எப்பொழுது இவனது பரிவாரங்கள் விலகுகின்றனவோ அப்பொழுது முக்தி கிடைக்கின்றது. இவனது பரிவாரமாகிய தேக இந்திரிய பிராண மன புத்தி முதலானவைகளிலுள்ள அகங்காரத்தைவிட்டபோது இவனுக்கு முக்தி யுண்டாகின்றது, இதற் கந்நியமாக முக்தி யுண்டாகிறதில்லை.

முநீசுவரரே! பெரியோர் பரிசுத்தமானவிடத்தில் வசிப்பதுபோல அசுத்தமான விடத்தில் வசிக்கிறதில்லை. இச்சரீரமோ அசுத்தமானதாம். இதில் வசிப்பவனும் அசுத்தமுள்ளவனும். இச்சரீரமென்னும் வீடானது எலும்புகளென்னும் மரங்களால் கட்டப்பட்டும், உதிரம் மூத்திரம் மலமென்னும் சேற்றினுற் பூசப்பட்டும், மாமிசத்தினுல் மணியாசு செய்யப்பட்டு மிருக்கின்றது. இதில் அகங்கார மென்றும் சுவபசன்(நாய் மாமிசமுண்ணும் சண்டாளன்) வாசஞ்செய்கின்றுன். இவனுக்கு ஆசையென்னும் மனைவியாகிய சண்டாளியுமிருக்கின்றுள். காமம் குரோதம் லோபம் மோக மென்னுங் குழந்தைகளு மிருக்கின்றுர்கள். இவர்கள் வீட்டில் மலம் நிறைந்த குடல்கள் நிறைந்திருக் கின்றன. ஆனதால் இத்தகைய அபவித்திர ஸ்தானமாகிய அமங்கல வடிவ சரீரத்தில் எனக்கிச்சை யில்லை. இச்சரீர மிருப்பினும் அல்லது மரிப்பினும் இதனுல் எனக்கொரு பிரயோஜனமு மில்லை.

முநீசுவரரே! எப்படி ஒரு பெரிய வீட்டில் ஒரு பெரிய பசுவானது தனது கால்களால் புழுதிகளை யெழுப்பிக் கொண்டே யிருக்கின்றதோ, அவ்வீட்டில் ஒருவன் செல்லுவானுயின் அங்குள்ள சிம்ஹமும் அவனைக் கொல்ல வருகின்றதோ புழுதிகளும் அவன்மீது படிகின்றதோ. அப்படிச் சரீரவடிவப் பெரிய வீட்டில் இந்திரியவடிவ பெரும் பசு விருக்கின்றது. இதிற் பிரவேசித்தபோது பெரும் ஆபத்தை யுண்டாக்குகின்றது. அதாவது எவன் இதில் அகங்காரத்தைச்செய்கின்றுனே அவன் இந்திரியவடிவப் பசுவினுலும் விஷயவடிவ சிம்ஹத்தினுலுங்கொல்லப்

படுகிறான். ஆசையென்னும் புழுதிகளும் இவன்மீது படிகின்றன.

முநீசுவரரே! எதில் எப்பொழுதும் கலகமிருந்து கொண் டிருக்கின்றதோ ஞானவடிவ சம்பத்துக்கள் பிரவேசிக்கின்றதில்லையோ அத்தன்மைய சரீரத்தை யானங்கீகரிக்கிறதில்லை. இந்தச் சரீரமாகிய வீட்டில் ஆசையென்னுஞ் சண்டிகைஸ்திரீ யிருக்கின்றாள். இவள் சதா இந்திரிய வடிவ வாயிலாக வெளிநோக்காகிய கற்பனைகளைச் செய்து கொண்டிருக்கின்றாள். இதனால் சமதமாதி சம்பத்துக்கள் அங்குப் பிரவேசிப்பதற் கில்லாதிருக்கின்றன. இவன் அவ்வீட்டிற் பிரவேசித்து அங்குள்ள ஒரு படுக்கையில் சற்று இளைப்பாறுவானாயின் சுகமடைவான். ஆனால் இவனை ஆசையின் பரிவாரங்கள் இளைப்பாறச் செய்கிறதில்லை. இவன் எப்பொழுது சுழுத்திவடிவப் படுக்கையில் சயனிக்கின்றானோ அப்பொழுது காமக்குரோதாதிகள் ரோதனம் (அழுதலைச்)செய்கின்றன. அதாவது இந்தச் சண்டிகை ஸ்திரீயின் பரிவாரங்களாகிய காமம் குரோதம் லோபம் மோகம் இச்சை முதலானவைகள் இளைப்பாறச் செய்யாது எழுப்பிவிடுகின்றன.

முநீசுவரரே! இப்படித் துக்கத்திற்கு மூலமான சரீரவடிவ கிரக இச்சையை நான் விலக்கி யிருக்கின்றேன். இது பரமதுக்கத்தைத் தருவதனால் எனக் கிதி லிச்சையில்லை.

முநீசுவரரே! எப்படிக் காகமானது இழிந்த பதார்த்தங்களிற் செல்லுகின்றதோ அப்படி ஆசையாகிய காகமானது போகமென்னும் மலின பதார்த்தங்களை யிச்சிக்

கின்றது. மீண்டும் இந்த ஆசையானது குரங்கினைப்போன்று இச் சரீரவடிவ விருக்ஷத்தை யசைத்துக்கொண்டே யிருக்கின்றது. ஒருபோதும் இதை நிலைக்கச் செய்கிறதில்லை. சேற்றி லகப்பட்ட மதயானையானது அதிலிருந்து வெளிப்படுவதற் கியலாது துக்கமடைவதுபோல ஜீவனானவன் அஞ்ஞானமென்னும் மதத்தினல் உன்மத்தமடைந்து சரீரமென்னுஞ் சேற்றி லகப்பட்டு வெளிப்படுவதற் கியலாது பிரலாபித்துத் துக்கமடைகின்றான். இத்தன்மைய துக்கத்திற் கேதுவான சரீரத்தை யானங்கீகரிக்கமாட்டேன்.

முநீசுவரரே! இச்சரீரம் எலும்பு மாமிசம் உதிரமென்பவற்றால் நிறைந்து அசுத்தமாக விருக்கின்றது. எப்படி யானையின் காதானது சதா அசைந்துகொண்டிருக்கின்றதோ அப்படி இவனை மிருத்தியுவானவன் சதா அசைத்துக்கொண்டே யிருக்கின்றான். ஆயினும் மிருத்தியு இவனை விழுங்குவதற்குச் சிலகாலதாமத மாத்திர மிருக்கின்றது. ஆனதால் நானிச் சரீரத்தை யங்கீகரிக்கின்றதில்லை. இது செய்ந்நன்றி யறியாததாம். இச் சரீரத்திற்கு எவ்வளவு போகங்களைப் புசிப்பிக்கினும் எவ்வளவு பெரும் ஐசுவரியங்களை யடையச் செய்யினும் மிருத்தியுவானவன் ஒருபோதும் இதனோடு தோழமையைச் செய்கிறதில்லை. எப்பொழுது ஜீவன் இதைவிட்டுப் பரலோகம் செல்லுகின்றானோ அப்பொழுது தனித்தே செல்லுகின்றான். சரீரமும் இவ்விடமே தங்கிவிடுகின்றது. இதன் சுகத்தின் பொருட்டு ஜீவனானவன் அநேகப் பிரயத்தனங்களைச் செய்யினும் அது எப்பொழுதும் இவனோடுகூடியே யிருக்கிற

தில்லை. இத்தகைய செய்ந்நன்றியில்லாத சரீரத்தை துக்கந் தருவதென்று மனதிலிருந்தும் விலக்கியிருக்கின்றேன்.

முனீசுவரரே! மேலும் ஒரு ஆச்சரியம்; பாரும்! எவன் இதில் போகத்தைச் செய்கின்றானோ அவனோடு இது செல்லுகிறதில்லை. எப்படி தூளிகளால் மார்க்கமானது தோன்றுததாகின்றதோ, அப்படி இந்த ஜீவன் எப்பொழுது செல்லுகின்றானோ அப்பொழுது சரீரத்தோடு கலக்கமுடைய வனாய் வாசனை வடிவ தூசிகளோடு செல்லுகின்றான். இவனுக்கு அது எங்குச் செல்லுகிறதென்பதும் தெரிகிற தில்லை. எப்பொழுது பரலோகமடைகின்றானோ அப் பொழுது இச் சரீரத்தைப்பற்றி யிருத்தலாற் பெருங் கஷ்டத்தினை யனுபவிக்கின்றான்.

முனீசுவரரே! இச்சரீரம் ஒரு கணத்தில் நாசமாகத் தக்கதாம். இலைகளின்மீது விழும் நீர்த்துளிகள் க்ஷணநேரம் அதிலிருத்தல்போல, இச்சரீரமும் க்ஷணநேரமிருந்து நாச மாகத்தக்கது. இத்தன்மைய சரீரத்தில் ஆசைவைப்பதும் மூடத்தனமாம். இதற்கு உபகாரஞ்செய்வதும் துக்கத் திற்குக் காரணமாம்; சுகமென்பது லேசமு மில்லை. தனவான் இச்சரீரத்தோடு பெரும்போகங்களைப் புசிக்கினும் தனமில்லாதவன் அற்பபோகங்களைப் புசிக்கினும் நரைதிரை மூப்பும் மரணமும் இவ்விருவருக்குமே யுண்டாகின்றன. இதில் விசேஷமொன்றுமில்லை. ஆசையினால் இச்சரீரத் திற்குபகாரஞ் செய்தலும் போகங்களைப் புசிப்பித்தலும் மீண்டும் துக்கத்திற்குக் காரணமாம். ஒருவன் தன் வீட்டில் பாம்பிற்குப் பால் வார்த்து வளர்ப்பினும் முடிவில்

அது அவனையே கொல்வதுபோல இந்த ஜீவனும் ஆசையென்னும் அரவத்தைத் தோழமை கொண்டிருக்கின்றது. இதனால் இது மரிக்கும். ஏனெனின் இது நாசமுடையதாம். இதன்பொருட்டுப் போகங்களைப் புசிப்பிக்க எத்தனிப்பதும் மூடத்தனமாம். எப்படிக் காற்றின்வேகமானது வரத்துப்போக் குடையதோ அப்படி இச்சரீரமும் ஜனன மரண முடையதாம். இதனிடத்துப் பிரியத்தைச் செய்வதும் துக்கத்திற்கே காரணமாம். சர்வ ஜீவர்களும் இந்த ஆசையில் கட்டுப்பட்டே யிருக்கின்றார்கள். எப்படிக் கானற்சலத்தைக் கருதிக் கலக்கமடையுமான்கள் அநேக மிருப்பினும் அதைக்கண்டு பிரமையடையாத மான் அவற்றினும் வேறாகின்றதோ, அப்படி எவரேனு மொருவரே இச்சரீரத்தைத் துறந்து வேறாகின்றவராவர்.

முநீசுவரரே! மின்னலின் பிரகாசமும் தீபப்பிரகாசமும் போக்குவரத்துடையதாகக் காணப்படினும் இச்சரீரத்திற்கு ஆதியும் அந்தமும் (எங்கிருந்து வருகின்றது; எங்குச் செல்லுகின்றதென்பதை) க்காணப்படுகிறதில்லை. எப்படிச் சமுத்திரத்திற்றோன்றி யொடுங்கும் குமிழியில் ஆசை வைப்பவது தகுதியன்றோ அப்படி இச்சரீரத்தில் ஆசை வைப்பதும் தகுதியன்று. இது ஒருபோதும் நிலைபெறுகிறதில்லை; அத்தியந்த நாச வடிவமாம். எப்படி மின்னல் நிலைபெறுகிறதில்லையோ அப்படி யிதுவும் நிலைபெறுகின்றதில்லை. ஆனதால் இதனிடத்து அபிமானத்தை விட்டிருக்கின்றேன். எப்படி ஒருவன் உலர்ந்த சருகுகளை விலக்குகின்றானோ அப்படி நான் அகந்தை மமதையென்னுங் குப்பைகளை விலக்கியிருக்கின்றேன்.

முநீசுவரரே! இத்தன்மைய சரீரத்தைப் புஷ்டிபடுத்து வதும் வீணும்; துக்கத்திற்கே காரணமாம். இச்சரீரம் எக்காரியங்களுக்கும் உபயோகப்படாமல் எரிப்பதற்கே தகுதியானதாம். கட்டையானது எரிப்பதைவிட மற்றெக் காரியங்களுக்கும் பயனாகாததுபோல விந்த ஜடமூட சரீரமும் எரிப்பதற்கே உபயோகப்படுகின்றது.

முநீசுவரரே! எவன் இந்தக் கட்டைவடிவ சரீரத்தை ஞானுக்கினி கொண்டு எரித்திருக்கின்றானோ அவன் பரமார்த்தசித்தியை யடைகின்றான். எவ னெரிக்கவில்லையோ அவன் பரமதுக்கமடைகின்றான்.

முநீசுவரரே! நான் சரீரமல்ல. இது என்னுடைய தல்ல. நானிதுவல்லன்; இதுநானல்ல. எனக்கு ஓரிச்சையு மில்லை; நிராசையுள்ளவனா யிருக்கின்றேன். இச்சரீரத்தா லெனக் கொரு பிரயோஜனமு மில்லை. ஆதலால் தாம் எனக்குப் பரமபதப்பிராப்தமாகுமுபாயத்தைத் தெரிவிக்க வேண்டும்.

முநீசுவரரே! எவன் சரீராபிமானத்தை விட்டிருக் கின்றானோ அவனே பரமாநந்தவடிவமாவன். எவன் தேகாபி மானமுள்ளவனோ அவன் பரமதுக்கவடிவமாவன். சகல களும் சரீரசம்பந்தத்தினா லுண்டாகின்றன. எவனுக்குத் தேகாபிமான மிருக்கின்றதோ அவனுக்கே நிந்தையிருக் கட்டும். அவனையே சகல ஆபத்துக்களும் சாருகின்றன. எப்படிச் சமுத்திரத்தில் நதிகள் பிரவேசிக்கின்றனவோ அப்படித் தேகாபிமானத்தில் சர்வாபத்துக்களும் பிர வேசிக்கின்றன. எவனுக்கபிமானமில்லையோ அவனே உத்தமன். அவனே நமஸ்கரிக்குந்தகுதி யுள்ளவன்.

அவனுக் கெனது நமஸ்காரமிருக்கட்டும். அவனுக்கே சர்வ சம்பத்துக்களு முண்டாகின்றன. எப்படி மானஸஸரோ வரத்தில் சர்வ அன்னப்பக்ஷிகளும் வந்து தங்குகின்றனவோ அப்படித் தேகாபிமானமில்லாத விடத்துச் சர்வசம்பத்துக் களும் வருகின்றன.

முநீசுவரரே! எப்படிக் குழந்தை தன் னிழலில் வேதாளத்தைக் கற்பித்து அதனல் பயமடைகின்றதோ அதற்கு விசாரமுண்டானபோது வேதாளகற்பனை யில்லாத தாகின்றதோ, அப்படி எனக்குஅஞ்ஞானத்தினல் அகங்கார மென்னும் பைசாசமானது சரீரத்தில் திட ஆசையாகிய பயத்தை யுண்டுபண்ணுகின்றது. ஆனதால் இந்த அகங்கார வடிவ் பைசாசத்தின் பயமானது எனக் கெவ்வாறு நாசமா குமோ, ஆசையாகிய பாசம் எந்த விதம் இல்லாததாகுமோ, அந்த உபாயத்தைத் தெரிவிக்கவேண்டும்.

முநீசுவரரே! முதலில் எனக்கு அகங்காரவடிவ பிசாசத்தின் சம்பந்த மிருந்தது. அதன்பிறகு சரீரத்தில் ஆசை பிறந்திருக்கின்றது. வித்திலிருந்து முதலில் முளை யுண்டாகிப் பின் விருக்ஷமுண்டாவதுபோல அகங்காரத்தி லிருந்து சரீரஆசை யுண்டாகின்றது.

முநீசுவரரே! அகங்காரவடிவப் பிசாசமானது சர்வ ஜீவர்களையும் தீனமாக்குகின்றது. எப்படிக் குழந்தை களுக்கு நிழலில் வேதாளந்தோன்றி அவைகளை ஏழமை யாக்குகின்றதோ அப்படி அகங்காரவடிவப் பிசாசம் என்னை யேழமையாக்கி யிருக்கின்றது. அவ்வகங்காரவடிவப் பிசாச

மும் அவிசாரத்தினல் சித்தித்திருந்து விசாரித்தபோது இல்லாததாகின்றது. எப்படிப் பிரகாசத்தினல் அந்தகாரம் கெடுகின்றதோ அப்படி விசாரத்தினல் அகங்காரம் நாச மாகின்றது.

முநீசுவரரே! எந்தச் சரீரத்தில் ஆசைவைத்திருக் கின்றேனே அந்தச் சரீரமும் ஜலத்தின் பிரவாகம்போல நிலையற்றிருக்கின்றது. மின்னற்கொடி நிலையாததுபோல சஞ்சலமுடையதாய் நிலைபாதிருக்கின்றது. எப்படிக் கந்தர்வ நகரை விரும்புவது வீணகின்றதோ அப்படி இச்சரீரத்தில் ஆசைவைப்பதும் வீணகின்றது.

முநீசுவரரே! இத்தன்மைய சரீரத்தில் ஆசைவைத்து நானென்னு மகங்காரத்தைச்செய்து இந்த ஜகத்பதார்த்தங் களின் பொருட்டு எத்தனிப்பவர்கள் மகா மூடர்கள். எங்ஙனம் சொப்பனம் பொய்யோ அங்ஙனம் ஜகத்தும் பொய்யாம். இதைச் சத்தியமெனக் கருதி இதிற் பிரயத் தனம் செய்பவன் தனது பந்தத்தின்பொருட்டே செய் கின்ருன். எப்படிச் சிலந்தியானது தன் பந்தத்தின் பொருட்டே கூடுகட்டுகின்றதோ, விட்டில்கள் தனது நாசத்தின் பொருட்டே தீபத்தை யிச்சிக்கின்றனவோ, அப்படி அஞ்ஞானிகள் தமது நாசத்தின்பொருட்டே தேகா பிமானங்களைச்செய்து போகங்களைப் புசிக்கவிரும்புகிருர்கள்.

முநீசுவரரே! நானிச் சரீரத்தை யங்கீகரிக்கமாட்டேன். இச் சரீராபிமானமானது பரம துக்கத்தைத் தருவ தாகின்றது. எவனக்குத் தேகத்தில் அபிமானமில்லையோ

அவனுக்குப் போகங்களினு மிச்சையுண்டாகிறதில்லை. ஆதலால் யான் நிராசையோடு கூடியிருக்கின்றேன். எதை யடைவதால் யான் மீண்டும் சம்சாரசமுத்திரத்தை யடைய மாட்டேனோ அப் பரமபதத்தில் இச்சை எனக்கு இருக்கின்றது,

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
தேகநிராசாவர்ணன மென்னும்
பதின்மூன்றுவது சர்க்கம் முடிந்தது.



## பாலியாவஸ்தா வர்ணனம்.

அவதாரிகை:—அஞ்ஞானம், பசி, ரோகம், சுத்தமின்மை, சஞ்சலத் தன்மை முதலியவற்றால் நிந்திக்கப்படும் திரியக் ஜந்துக்(பசு பக்ஷி புழு விட்டில்)களைப்போன்ற பாலியாவஸ்தையின் நிந்தையினை யிதிற் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர்:—முநீசுவரரே! சஞ்சலவடிவமான அநேக காரியங்களைத் தாங்கியுள்ள இந்தச் சம்சார சமுத்திரத்தில் ஜனிப்பதில் எந்தப் பாலியாவஸ்தை யிவனுக்குண்டாயிருக்கின்றதோ அந்தப் பாலியாவஸ்தையும் பரம துக்கத்திற்குக் காரணமாம். அதனால் பரம தீனனாகின்றான். இதி லெவ்வளவு துர்க்குணங்கள் வருகின்றனவென்பதைச் சொல்லுகின்றேன்; கேட்பீராக. சக்தியின்மை, மூடத்தனம், ஊமைத்தன்மை, சபலத்தன்மை, தீனத்தன்மை, அநேக ஆபத்துக்கள், இச்சைகள், விளையாட்டிற் பிரியம், துக்கம், தாபமுதலான விகாரங்கள் என்பன இவனுக்குண்டாகின்றன. இந்தப் பாலியாவஸ்தையானது மிக விகாரத்தோடு கூடியது, குழந்தைகளுக் கெப்பொழுதும் பதார்த்தங்களின்மீது இச்சை செல்லுகின்றன. ஒரு வஸ்துவைக் கிரகிக்கின்றது. அதைவிட்டு குரங்குபோல நிலையில்லாது மற்றொன்றை விரும்புகின்றது. ஸ்திரமாக ஒன்றிலும் நிலைபெறுகிறதில்லை. மீண்டும் மற்றொன்றிற் செல்லுகின்றது. ஒன்றிற் குரோதம் உண்டாகும்பொழுது உள்

ளத்திற் ருபமடைகின்றது. பெரிதினும் பெரிதான இச்சைகளைக் கொள்ளுகின்றது. அவைகள் கிட்டுகிறதில்லை. எப்பொழும் ஆசையிலேயே யிருக்கின்றது. ஒருகணத்திற்குள் பயமடைகின்றது. இதற்குச் சாந்தியென்பது கிடையாது. முற்றும் இச்சையின்வசமாகவே யிருக்கின்றது. கதலிவனத்திலுள்ள யானை சங்கிலியிற்கட்டுண்ட தன்மையால் ஏழமை யடைந்திருப்பதுபோல இந்தச் சைதன்னிய வடிவன் பாலியாவஸ்தையால் வசமிழந்திருக்கின்றான். எதையும் விசாரியாமலே யிச்சித்து அதனல் துன்பமடைகின்றான். ஜடமூட அவஸ்தையாகிய இதில் ஒன்றும் சித்திக்கிறதில்லை. ஒரு பதார்த்தம் கிடைத்தபோது கணநேரமே சுகமடைந்து பிறகும் தாபமடைகின்றான். தாபமடைந்த பூமியில் ஜலம் விட்டபோது கணநேரம் சீதளமாயிருந்து மீண்டும் தாபமேற்படுவதுபோல இவனும் தாபமுடையவனுகின்றான். இரவின் முடிவில் சூரியனுதயமாவதுகண்டு ஆந்தைகள் கஷ்டமடைவதுபோல, இந்தச் சீவனுக்குச் சொரூபத்தின் அஞ்ஞானத்தினல் பாலியாவஸ்தையில் கஷ்டமுண்டாகின்றது.

முனீசுவரரே! எவன் இந்தப் பாலியாவஸ்தையின் சேர்க்கையை விரும்புகிறானோ அவன் மூடன். ஏனெனின், இது விவேகமில்லாத அவஸ்தையாகவும் பரிசுத்தமில்லாததாகவும், சதா பதார்த்தங்களிற் செல்லுவதாகவு மிருக்கின்றது. இத்தன்மைய மூடமும் தீனமுமாகிய அவஸ்தையிலெனக் கிச்சையில்லை. மேலும் குழந்தைகள் எந்தெந்தப் பதார்த்தங்களைப் பார்க்கின்றனவோ அந்தந்தப் பதார்த்தங்களிற் கணந்தோறும் சென்று அவமானமடைகின்றன. எப்படி நாய்கள் கணத்திற்குக் கணம் வாயல்கடோறும்

சென்று அவமான மடைகின்றனவோ அப்படிக் குழந்தைகளும் அவமான மடைகின்றன. குழந்தைகளுக்கு எப்பொழுதும் தாய்தந்தையரிடத்து பயமும், பந்துக்களிடத்து பயமும், தனக்கு மூத்தவனிடத்துள்ள பயமும், பசு பக்ஷிகளின் பயமு மிருக்கின்றன.

முநீசுவரரே! இத்தன்மைய துக்கவடிவ அவஸ்தையில் எனக் கிச்சையில்லை. ஸ்திரீகளின் நேத்திரங்களின் சஞ்சலத்தன்மையினும் நதிகளின் பிரவாக சஞ்சலத் தன்மையினும் மேலான சஞ்சலமுடையது மனமாம். அந்த மனமும் குழந்தைகளும் சுபாவத்தாற் சஞ்சலமுடையனவென் றெண்ணுகின்றேன். சர்வ சஞ்சலங்களும் குழந்தைகளின் சஞ்சலத்திற்குத் தாழ்ந்ததாம். குழந்தைகளின் சஞ்சலம் சர்வத்தினும் மேன்மையுள்ளதாம். எங்ஙனம் மனம் சஞ்சலவடிவமோ அங்ஙனமே குழந்தைகளும் சஞ்சல வடிவமாம். மனத்தின் வடிவமே குழந்தைகளாம்.

முநீசுவரரே! எப்படி வேசியின் சித்தமானது ஒரே புருஷனிடத்து நிலைபெறுகிறதில்லையோ அப்படிக் குழந்தைகளது சித்தமும் ஒரே பதார்த்தத்தில் நிலைபெறுகிறதில்லை. இப்பதார்த்தத்தினுல் தனக்குச் சுகமுண்டாகும் இப்பதார்த்தத்தினுல் நாசமுண்டாகும் என்னும் விசாரமும் அவைகட்கில்லை. இப்படி அவைகளே ஒவ்வொன்றிலும் பிரவேசித்து ஏழமை யடைகின்றன. சுகதுக்க முதலியவைகளின் இச்சைகளால் தபிக்கின்றன. எப்படி ஆனி ஆடி மாதங்களில் பூமிதாபமடைகின்றதோ அப்படிக் குழந்தைகளது மனமும் தாபமடைகின்றது; ஒருபோதும் சாந்தியடைகிறதில்லை, எப்பொழுது சிறுவனுகி வித்தியாப்பியாசம் செய்து

வருகின்றானோ அப்பொழுது குருவினிடம் பெரும் பய மடைகின்றான். ஒருவன் இயமனைக்கண்டு பயமடைவது போலவும் கருடனைக்கண்டு சர்ப்பம் பயமடைவது போல வும் பயமடைகின்றான். எப்பொழுது சரீரத்திற்கு ஒரு துன்பமுண்டாகின்றதோ அப்பொழுது பெருந்துன்ப மனு பவிக்கின்றான். ஆனால் துக்கத்தை மாற்றிக்கொள் வதற்கும் சகிப்பதற்கும் சாமர்த்தியமில்லாது உள்ளத்தில் தபித்துக்கொண்டே வாயினால் ஒன்றைச் சொல்வதற்கும் சக்தியற் றிருக்கிறான். * எப்படி விருக்ஷங்கள் பேசு வதற்குச் சாமர்த்தியமில்லா திருக்கின்றனவோ, எப்படி மற்ற மிருகாதிகள் துக்கமடையும்போது அதனைச் சொல் வதற்கும் துக்கத்தை மாற்றிக்கொள்வதற்கும் அதனை நீக்கிக்கொள்வதற்கும் சக்தியற்று உள்ளத்திற் றாபமடை கின்றனவோ, அப்படிக் குழந்தைகளும் ஜடமூட மகா துக்கங்களையடைகின்றன.

முனீசுவரரே! இத்தன்மைய பாலியாவஸ்தையைத் துதிப்பவன் மூடன். இதுவோ பரமதுக்கவடிவ அவஸ்தை யாம். இதில் விசார மென்பது சிறிதுமில்லை. ஒன்றைப் புசிக் கும்பொழுதே * கண்ணீர்விட்டு அழுதுகொண்டிருக்கும் துர்க்குணவடிவ அவஸ்தை யெனக்கு நன்மையாகத் தோன்றவில்லை. எப்படி மேகத்திற் றோன்றும் மின்னலும் ஜலத்திற் றோன்றுங் குமிழியும் நிலைபெறுகிறதில்லையோ,

* குழந்தைகளுக்கும் விருக்ஷங்களுக்கும் சீதமும் உஷ்ணமும் அவற்றின் றுன்பங்களும் தெரிகின்றனவாயினும் பிறரிடம் அவைகட் குண்டாகும் துன்பங்களைச் சொல்லுவதற் கில்லாதனவாகின்றன.

* தாபமடைந்த பூமியில் மழை பெய்யும்போது அப்பூமியினின் றுண்டாகும் ஜலத்தின் கசிவுபோல.

அப்படிக் குழந்தைகளும் சுபாவத்தால் ஒருபோதும் நிலை பெறுகிறதில்லை.

முனீசுவரரே! இது மகா மூடஅவஸ்தையாம். இவன் ஒரு சமயம் "தந்தையே! எனக்கிந்த ஆலங்(பனிக்)கட்டியை வருத்துக் கொடு"மென்றும் ஒருசமயம் "இந்தச் சந்திரனைப் பிடித்துக் கொடு" மென்றும் இவைபோன்ற வசனங்களைச் சொல்லுகின்றான். ஆனதாலித்தன்மைய மூடாவஸ்தையை யான் அங்கிகரிப்பதில்லை. குழந்தைகளுக் குண்டாகும் துக்காநுபவம் நமது சொப்பனத்திலும் வருகிறதில்லை. அதாவது இப்பாலியாவஸ்தையில் பெருந்துன்ப மிருக்கின்றது. சகல துர்க்குணங்களுக்கும் பாலியாவஸ்தையே பூஷணமாயிருக்கின்றது. இது துர்க்குணங்களினாலேயே சோபிக்கின்றது. இத்தன்மைய இழிவான அவஸ்தையினை யான் அங்கீகரிக்கின்றதில்லை. இதில் ஒருகுணமுமில்லை.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
பாலியாவஸ்தாவர்ணனமேன்னும்
பதினான்காவது சர்க்கம் முடிந்தது.



## யௌவனகார்ஹ்ய வர்ணனம்.



அவதாரிகை:—லோபம், த்வேஷம், மதம், அசூயை, ஈர்ஷை, முதலானவைகளால் தூஷிக்கப்படும் காமக்ரோதாதிபெரும் அனர்த்தங்களுக் கிடமாகிய யௌவன நிந்தையினை யிதிற் கூறுகின்றார்.

இராமசந்திரர்:—முநீசுவரரே! * இந்த துக்கவடிவ பாலியாவஸ்தையின்பின் னுண்டாகும் யௌவனாவஸ்தையானது கீழிருந்து மேலேறுவ தொத்திருக்கின்றது. அதையும் உத்தமமென்று நினைப்பதற்கில்லை. அதிக துக்கத்தைத் தருவதாகின்றது. எப்பொழுது யௌவனாவஸ்தை யுண்டாகின்றதோ அப்பொழுது காமவடிவ பிசாசமும் இவனைப் பற்றுகின்றது. அக்காமப்பேய் யௌவனாவஸ்தை யென்னும் படுகுழியிலிருந்து சித்தத்தைத் திருப்பி யிச்சையில் பரவச் செய்கின்றது. எங்ஙனம் சூரியனுதயமாகத் தாமரைகள் களிப்படைந்து இதழ்களை விரிக்கின்றனவோ, அங்ஙனமே யௌவனாவஸ்தை யென்னும் சூரியனுதையமாகவே சித்தமென்னும் தாமரைகள் இச்சையென்னும் இதழ்களை விரித்தெழுகின்றன. காமமென்னும் பேயானது இவனை வலியத்

* ஒருவனுக்கு ஒருக்கால் "பாலியாவஸ்தை பாரதந்திர தோஷத்தினால் நிந்தைக்குரியதாகின்றது. யௌவனாவஸ்தையோ சுதந்திரத் தன்மையினால் விஷயசுகம் கிட்டுவதாகவே மெச்சத்தக்கதா"மென்னும் சங்கையுண்டாகுமாயின் அதுபொருந்தாது. சகலஅனர்த்தங்களுக்கும் இது காரணமாதலால் அதிகமாக நிந்திக்கத்தக்கதேயாம்.

தன்வசப்படுத்தி ஸ்திரீகளிடத்திற் றள்ளுகின்றது. அதனால் அங்கு வீழ்ந்து துக்கமடைகின்றான். இந்த யௌவனாவஸ்தையானது வசமிழந்த ஸ்திரீயைப்போலச் சஞ்சல சுபாவமுடையதாகத் துக்கங்களைக் குழந்தைகள் கண்களுக்கிடும் * சித்தாஞ்சனம்போலத் தன திச்சையின்படி யுண்டாக்குகின்றது. ஒருவனை அக்கினிகுண்டத்திற் றள்ளிய போது அவன் துக்கப்படுவதுபோலக் காமவசத்தனுய் துக்கமடைகின்றான்.

முனீசுவரரே! விகாரமென்பன யாவு மிந்த யௌவன அவஸ்தையில் வருகின்றன. தனமில்லாதவன் தனமுள்ளவனைக் கண்டாசைப்படுவதுபோல யௌவனாவஸ்தையைக் கண்டு எல்லாத் தோஷங்களும் வந்துசேருகின்றன. அங்கு எந்தப்போகங்களைச் சுகவடிவமெனக் கருதி யிச்சிக்கின்றானோ அந்தப்போகங்கள் பரமதுக்கத்திற்கே காரணமாகின்றன. கள்நிறைந்த குடமானது பார்ப்பதற் கழகாயிருப்பினும் அதைக் குடித்தவுடன் மயக்கமுண்டாகி அதனால் அவன் வசமிழந்து நிராதரவடைவதுபோல இந்தப் போகமானது அழகாகவிருந்தும் இதைப் புசிப்பவனுக்கு ஆசையென்னும் மயக்கத்தினை யுண்டுபண்ணி அவனை நிராதரவடையச்செய்கின்றது.

முனீசுவரரே! இந்தக் காமம், குரோதம், லோபம், மோகம், அகங்காரமென்னுங் கள்வர்கள் யௌவனாவஸ்தை

---

* ஒருவகையான சித்தாஞ்சனத்தைப் பாலர்கள் கையிற்றடவுதலால் அல்லது கண்ணிற்கிடுதலால் பூமிக்குள்ளிருக்கிற புதையல் தெரிவதுபோல யௌவனத்தில் ஸ்திரீவிஷய சிந்தனை யிவன் சித்தத்தில் வருகின்றது.

யென்னும் இரவைக்கண்டு ஆத்மஞானவடிவத் தனத்தைத் திருடிச் செல்வதால் இவன் ஏழையாகின்றான்; இவன் ஆத்மாநந்தவியோகத்தினால் ஏழையாகின்றான்.

முநீசுவரரே! சித்தத்தை நிலைநிற்கச்செய்யும் சாந்தியின் பொருட்டு இத்தன்மைய யௌவனவஸ்தையை யானங்கிகரிக்கவில்லை. அம்பானது இலக்ஷியத்தினைப் பற்றிச் செல்லும்போது விஷயங்களிற் சம்பந்தப்படுவதுபோல இந்தச் சித்தமானது யௌவனவஸ்தை யடையும்போது விஷயங்களைச் சம்பந்திக்கின்றது. சம்பந்தமடையினும் விஷயங்களின் ஆசை நீங்காததாகவே ஜந்மஜந்மாந்தரங்களில் துன்பங்களை யடைகின்றது.

முநீசுவரரே! இப்படி துக்கத்தைத் தருகின்ற யௌவனவஸ்தையி லெனக் கிச்சையில்லை. முநீசுவரரே! இந்த யௌவனவஸ்தையில் சகல துக்கங்களும் வந்து சேருகின்றன. காமம், குரோதம், லோபம், மோகம், அகங்காரம், சஞ்சலமென்னும் இவைபோன்ற துக்கங்களெல்லாம் யௌவனவஸ்தையில் ஸ்திரமாகின்றன. பிரளயகாலத்தில் சர்வரோகங்களும் வந்து நிலைப்பனபோல யௌவனவஸ்தையில் சர்வதுன்பங்களும் வந்து சேருகின்றன. இது கணத்தில் நாசமாகத்தக்கது. எப்படி மின்னல் தோன்றி மறைகின்றதோ, எப்படிச் சமுத்திரத்தி லலைகளுண்டாகி மறைகின்றனவோ அப்படி இந்த யௌவனவஸ்தை யுண்டாகி மறைகின்றது. சொப்பனத்தில் ஒரு ஸ்திரீ விகாரஞ் செய்துச் சென்றுவிடுவதுபோல அஞ்ஞானத்தோடு கூடிய யௌவன அவஸ்தைச் சென்றுவிடுகின்றது.

முநீசுவரரே! ஜீவர்களுக்கு யௌவன அவஸ்தை பரம

சத்துருவாயிருக்கின்றது. எவன் இந்தச் சத்துருவின் சஸ்திரங்க(வாள்க)ளினின்றுந் தப்பியிருக்கின்றானோ அவனே க்ஷேமமுடையோன்! இவனுடைய சஸ்திரங்கள் காமக் குரோதங்களாம். * எவன் இவற்றினின்றும் தப்பியிருக்கின்றானோ அவன் வஜ்ஜிராயுதத்தின் அடியினாலும் பிளக்கப்படான். இதிற் கட்டுப்பட்டவன் பசுவா(மிருகமா)வன்.

முநீசுவரரே! யௌவனாவஸ்தையானது வெளிப்படையால் பார்ப்பதற் கழகாயிருப்பினும் உள்ளில் இச்சைகளால் தளர்வடைந்திருக்கின்றது. எப்படி விருக்ஷமானது பார்வைக்கழகாகத் தோற்றினும் உள்ளில் வண்டுகளால் துளைக்கப் பட்டிருக்கின்றதோ, அப்படி யௌவனாவஸ்தையில் எந்த போகத்தின்பொருட் டெத்தனிக்கப்படுகின்றதோ அந்த போகம் ஆபாதரமணீயமா யிருக்கின்றது. அதாவது எதுவரையில் விஷயங்களுக்கும் இந்திரியங்களுக்கும் சம்பந்தமிருக்கின்றதோ அதுவரையில் விசாரம் இல்லாத் தன்மையால் நன்மையாகின்றது. எப்பொழுதுஅவற்றிற்குப் பிரிவுண்டாகிறதோ அப்பொழுது துக்கமுண்டாகின்றது. அதனால் மூடன் இந்தப் போகங்களில் சந்தோஷிக்கின்றான்; உன்மத்தனு மாகின்றான். அவனுக்குச் சாந்தியுண்டாகிறதில்லை; உள்ளத்தி லெப்பொழுதும் ஆசையே வசிக்கின்றது. ஸ்திரீகளிடத்து இவனது சித்தம் பிரியத் தோடுகூடியதாகின்றது. எப்பொழுது இஷ்டமுள்ள ஸ்திரீயின் பிரிவுண்டாகிறதோ அப்பொழுது அதை ஸ்மரித்துத் தபிக்கின்றான். எப்படி வனத்திலுள்ள விருக்ஷங்கள் அக்கினியால் தகிக்கப்படுகின்றனவோ அப்படி யௌவன

வஸ்தையில் இஷ்டவஸ்துவின் பிரிவால் ஜீவர்கள் தகிக்கப் படுகிறார்கள். எப்படி மதயானையைச் சங்கிலியால் கட்டிய போது எங்கும் செல்வதற்கில்லாது கட்டில் நின்று உழல் கின்றதோ அப்படிக் காமவடிவ மதயானையை யௌவனா வஸ்தை யென்னும் சங்கிலி பந்தப்படுத்துகிறது. யௌவனா வஸ்தை யென்னும் நதியில் இச்சைவடிவ அலைகள் எழுகின் றன. அவை ஒருபோதும் சாந்தியாகின்றதில்லை.

முனீசுவரரே! மேலும் இந்த யௌவனாவஸ்தை மிகக் கொடியது. ஒருவன் புத்திமானாகவும் எப்பொழுதும் நிர்மலனாகவும் இவைபோன்ற குணங்களால் சந்தோஷ முள்ளவனாகவு மிருப்பினும் அவனுடைய புத்தியையும் யௌவனாவஸ்தை அழுக்கடையச் செய்கின்றது. எப்படி நிர்மலஜலமுள்ள பெருநதி வருஷா(மழைக்)காலம் வந்த போது அழுக்கோடுகூடியிருக்கின்றதோ அப்படி யௌவனா வஸ்தையில் புத்தி அழுக்கடைந்திருக்கின்றது.

முனீசுவரரே! சரீரவடிவ விருக்ஷத்தில் யௌவனா வஸ்தைவடிவ கொடிகளுண்டாகிப் புஷ்டியானபோது சித்த வடிவ வண்டுகள் வந்துதங்கி ஆசையென்னும் அதன் சுகந்தத்தைப் பருகி மயக்கமடைந்து சகல விசாரங்களையும் மறந்துபோகிறது. எப்படிப் பிரபலமான காற்றுண்டான போது உலர்ந்த சருகுகளைத் தங்கவிடாது அடித்துக்கொண்டு போகின்றதோ அப்படி யௌவனாவஸ்தை யுண்டானபோது வைராக்கிய சந்தோஷாதி குணங்களை இல்லாதனவாக்கு கின்றது. துக்கவடிவத் தாமரைக்கு யௌவனாவஸ்தை ஓர் சூரியனாம். யௌவனாவஸ்தை யுண்டாகவே சர்வ துக்கங் களுக்கும் களிப்புண்டாகின்றது. ஆனதால் எல்லாத் துக்கங் களுக்கும் மூலம் யௌவனாவஸ்தையாம், சூரியனுதிக்கவே

தாமரைகள் இதழ்களை விரிப்பதுபோலச் சித்தமென்னும் தாமரையானது சம்சாரவடிவ இதழ்களோடும் சத்தியத் தன்மைவடிவ சுகந்தத்தோடும் மலர்கின்றது. அப்பொழுது ஆசைவடிவ வண்டுகள் அதிற்றங்கி விஷயமாகிய சுகந்தத்தைப் பருகுகின்றன.

முனீசுவரரே! சம்சாரவடிவ இரவில் யௌவனுவஸ்தையென்னும் நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கின்றன. அதாவது இச்சரீரம் யௌவனுவஸ்தையில் அழகுள்ளதாகின்றது. மேலும் இந்த யௌவனுவஸ்தையானது சரீரத்திற்குத் தளர்ச்சி யுண்டாகும் பொருட்டே வருகின்றது. நெற்பயிரிலுள்ள பச்சைநிறமானது எதுவரையில் கதிருண்டாகவில்லையோ அதுவரையில்மாருதிருந்து, கதிருண்டானபோது மாறுகின்றது. நெற்கதிர் பரிபக்குவமானபோது பயிர்கள் தளர்வடைந்து அந்த நிறம் எப்படிக் குன்றுகின்றதோ, அப்படி எதுவரையில் யௌவனம் வரவில்லையோ அது வரையில் சரீரம் மிருதுவாகவும் அழகாகவுமிருக்கிறது. யௌவனம் வந்தபோது கொடிதாகின்றது; மீண்டும் பரிபாகமடைந்து குறைகின்றது; கிழமாகின்றது.

முனீசுவரரே! ஆன்தால் இத்தன்மைய துக்கத்திற்கு மூலவடிவமான யௌவனுவஸ்தையி லெனக் கிச்சையில்லை. சமுத்திரமானது பெரும்ஜலத்தால் நிரைந்ததாகவும் அலைகளால் மோதப்படுவதாகவும் மரியாதை கடவாததாகவும் ஈசுவரனது ஆணையிற் கட்டுப்பட்டு மிருக்கின்றது. யௌவனுவஸ்தையோ சாஸ்திரமரியாதை லோகமரியாதை யென்பவைகளைக்கடந்து செல்வதாகின்றது. அதற்குத் தனது விசார

மென்பது ஏற்படுகிறதில்லே. எப்படி இருளில் பதார்த்த ஞானமுண்டாகிறதில்லேயோ அப்படி யௌவனுவஸ்தையில் சுபாசுபங்களின் ஞானமுண்டாகிறதில்லே. எவனுக்கு விசார மில்லேயோ அவனுக்குச் சாந்தி எங்கிருந்துண்டாகும்? எப்பொழுதும் வியாதியினுலும் தாபத்தினுலும் தபித்துக் கொண்டேயிருப்பான். மச்சமானது எப்படி ஜலமின்றி சாந்தியடையாததாகுமோ அப்படி விசாரமின்றிய வன் எப்பொழுதும் தபித்துக் கொண்டேயிருக்கின்ருன். எப்பொழுது யௌவனுவஸ்தையென்னும் இரவு வருகின் றதோ அப்பொழுது காமமென்னும் பிசாசு கர்ஜ்ஜிக் கின்றது. அதனுல் இவனுக்கு காமசங்கற்ப முண்டா கின்றது. அவ்வாற்ருல் எவனேனுமொரு காமியானவன் தன்னிடம் வரநேருமாயின் அவனேடு இவன் சம்பாஷிப்ப தாவது: மித்திரனே! இவள் எவ்வளவு அழகா யிருக்கின் கின்ருன். இவளது க்ண்களுக்கெதனே உவமிக்கலாம்? இவள் எனக்கெப்படிக் கிடைப்பாள்? என்றிவை போன்ற இச்சை யோடு சதாதபித்துக்கொண்டிருப்பான்.

முனீசுவரரே! கானற்சலத்தைக் கண்டு மான்களோ டோடியும் அங்கு ஜலம் கிடைக்காது தாபமடைவதுபோலக் காமமுடையவனும். விஷயவாசனேயால் தபிக்கின்ருன்; சாந்தி யடைகிறதில்லே. முனீசுவரரே! மானிடப் பிறவி உத்தமமாயினும் எவனுக்கு அபாக்கிய மிருக்கின்றதோ, அவனுக்கு விஷயத்தைத்தவிர ஆத்மபதப்பிராப்தி யுண்டா கிறதில்லே. ஒருவனுக்குச் சிந்தாமணி கிடைத்தும் அறியா மையால் அதனே நிராதரவால் போட்டுவிடுவதைப் போல மனிதசரிரமானது ஒருவனுக்குக் கிடைத்தும் அவன் ஆத்மபதமடையானேல் அவன் பெரும் அபாக்கியமுடைய

வனே! மேலும் யௌவனவஸ்தையில் பரமதுக்கத்திற்கிட மாகக் காமாதி விகாரங்களைத் தன்பொருட்டே விளைவிக் கின்றான். யௌவனவஸ்தையில் எவ்வளவு விகாரங்களெனப் படுகின்றனவோ அவ்வளவும் இவனையே சார்கின்றன. அபிமானம், மோகம், மதம் முதலான விகாரங்களால் தனது புருஷார்த்தத்தை நாசமாக்குகின்றான்.

முனீசுவரரே! இந்தவிதமாக யௌவனவஸ்தை பெரும் விகாரத்தை யுண்டுபண்ணுகின்றது. எப்படி நதியில் காற்றானது பெரும் அலைகளை யெழுப்புகின்றதோ அப்படி இந்த யௌவனவஸ்தை அநேக காமங்களை யுண்டாக்குகி ன்றது. எப்படிப் பக்ஷிகள் இறகுகளைக்கொண்டு அதிகமாகப் பறக்கின்றனவோ, சிம்ஹம் தன் தோள்வலியால் பசுக்களைக் கொல்ல ஓடுகின்றதோ அப்படிச் சித்தமானது யௌவன வஸ்தையில் சஞ்சலத்திற் றாவுகின்றது.

முனீசுவரரே! சமுத்திரத்தைக் கடப்ப தருமை. ஏனெனில், அதில் ஜலம் ஆழத்தாலும் விஸ்தாரத் தாலும் அதிகமாயிருக்கவும் அது சரீரத்தோடு கூடிய மீன்கள், ஆமைகள், மகரங்கள் முதலியன சஞ்சரிப்பதற்கு ஓர் இடமாயுமிருக்கின்றது என்றாலும் இத்தன்மைய கடத்தற்கரிய கடலைக் கடப்பதும் எளிதென் றெண்ணுகிறேன். ஆனால் யௌவனவஸ்தையைக் கடப் பது கடினமேயாம். அதாவது இந்த யௌவனவஸ்தையில் தோஷமின்றியவனா யிருப்பது மிக்க கடினம். இத்தன்மைய சங்கடத்தோடுகூடிய யௌவனவஸ்தையில் சலனமடை யாதவர்களே க்ஷேமமுடையவர்கள் அவர்களே பிறரால் நமஸ்கரிக்கப்படும் தகுதியுடையவர்கள்.

முனீசுவரரே! இந்த யௌவனுவஸ்தை சித்தத்தை மலினமாக்குகின்றது. எப்படிக் காற்றானது கிணற்றருகி லுள்ள சாம்பல்மேட்டில் வீசிச் சிறிது சிறிதாகக் கிணற்று ஜலத்திலச்சாம்பலைப் பரவச்செய்து ஜலத்தைக் களங்க மாக்குகின்றதோ, அப்படிக் காற்றுவடிவ யௌவனுவஸ்தை தோஷவடிவ தூசுகளைச் சித்தமென்னும் கிணற்றிற் சேர்த்து அதனை மலினமாக்குகின்றது. இப்படித் துர்க்குணங்கள் நிறைந்த யௌவனுவஸ்தையிலெனக் கிச்சை யில்லை. யௌவனுவஸ்தையே! உனது தரிசன மெனக் காகாதிருக்கும்படி என்மீது கிருபைசெய்யவேண்டும். உன் வரவை நான் துக்கத்திற்குக் காரணமென்று மதிக்கின் றேன். எப்படிப் * புத்திரன் மரணமாகுஞ் சங்கடத்தைத் தந்தைகண்டு சகிக்கமாட்டானே, அதனைச் சுகத்தின் நிமித்தமானதாகக் காணமாட்டானே அப்படி உன்வரவை நான் சுகநிமித்தமானதாகக் காண்கிறதில்லை. ஆனதால் உனது தரிசன முண்டாகாதிருக்கத் தயை செய்யவேண்டும்.

முனீசுவரரே! இந்த யௌவனுவஸ்தையைக் கடப்பது மிகக் கடினம். யௌவனமுடைய ஒருவன் வணக்கமும், சாஸ்திரங்களிற் கூறியுள்ள குணங்களாகிய வைராக்கியம் விசாரம் சந்தோஷம் சாந்தியென்னு மிவைகளால் சம் பன்னனுமாவது துர்லபம். எப்படி ஆகாயத்தில் வனமுன்

* எப்பொழுது புத்திரனுக்கு மரணம் சமீபிக்கின்றதோ அப் பொழுது ஜனங்கள் சந்தோஷாதி காரியங்களைச் செய்கிறதில்லையோ அதுபோல விந்த நிலையற்ற யௌவனுவஸ்தையிலும் பிரமாத முதலானவற்றைச் செய்யலாகாது. ஏனெனின் இதுவும் அழிந்து போவதாம்,

டாவதாச்சரியமோ அப்படி யௌவனுவஸ்தையில் வைராக்கியம், விசாரம், சாந்தி, சந்தோஷ மென்பவைகளை யடைதல்மிக வாச்சரியம்! ஆனதால் எனக்கு எதனல் யௌவனுவஸ்தையின் துக்கம் விடுபட்டு ஆத்மபதப்பிராப்தி யுண்டாகுமோ அந்த உபாயத்தைச் சொல்லும்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
யௌவனகாருடிவர்ணன மென்னும்
பதினைந்தாவது சர்க்கம் முடிந்தது.



# ஸ்திரீ துராசா வர்ணனம்.



அவதாரிகை:—பிரத்தியக்ஷ நரக சமூகங்களால் சர்வ அவயவங்களடையப்பெற்றதும் புருடர்களுக்கு நரகத்தையும், ஜன்மத்தையும் தாத்தக்கதுமான ஸ்திரீகளின் னிந்தையிணையிதிற்கூறுகின்றார்.

இராமசந்திரர்:—முனீசுவரரே! எந்தக் காமவிலாஸத்தின் பொருட்டு ஸ்திரியை யிச்சிக்கின்றமோ அந்த ஸ்திரீ நரம்பு, எலும்பு, மாமிசம், உதிரம், கண்ணீர், கண்கள் மூத்திரம் மலமென்னுமிவைகளாலாகிய பிரதிமையா யிருக்கின்றாள். யந்திரத்தாலாகிய பிரதிமையானது கயிற்றினால் அநேக சேஷ்டைகளைச் செய்வதுபோல இந்த ஸ்திரீ எலும்பு மாமிசாதிகளாலாகிய பிரதிமையாயிருந்து சேஷ்டைகளைச்செய்கிறாள். எவன் விசாரித்துப் பார்க்கிறதில்லையோ அவனுக்கு இரமணியமாகத் தோற்றுகிறாள் பருவத சிகரமானது தூரத்திலிருந்து பார்ப்பவனுக்கு மிக அழகாகவும் கங்கையை மாலையாகப் பூண்டிருப்பதாகவும் தோற்றுகிறது. சமீபித்தபோது அசரமா(அசைவற்றதா)கவும் பாறைகளாகவும் எப்படித் தோற்றுகின்றதோ, அப்படி ஸ்த்ரீயும் வஸ்திரம், தைலஸ்நானம், பூஷணம் முதலியவற்றால், சுந்தரமாகத் தோற்றினும் அங்கங்களை வேறு வேறாக விசாரித்தபோது அவளிடம் சாரம் ஒன்றுமில்லை. எப்படி மகாமிருதுவான அங்கமுடைய சர்ப்பத்தை தீண்டியபோது அவனைக் கடித்துக்கொல்லுகிறதோ அப்படி ஒருவன்

ஸ்திரீயை பரிசித்தபோது அவனை அவள் நாசஞ்செய்கிறாள். விஷக்கொடி பார்ப்பதற்கு அகழகாயிருந்தும் அதைப் பரிசித்தவனைக் கொல்லுகின்றது. யானையைச் சங்கிலியால் எந்த வாயிலில் கட்டிவைத்தோமோ அந்தவிடத்திற்றானே அது நிற்பதுபோல, அஞ்ஞானியின் சித்தவடிவ யானை காமவடிவ சங்கிலியாற் கட்டப்பட்டு ஸ்திரீயென்னும் ஒரேயிடத்தில் நிற்கின்றது. அதைவிட்டெங்கும் செல்வதற்கு அதற்குச் சக்தியில்லை. மாவுத்தன் யானையை அங்குசத்தால் குத்தும்போது அது தனது கட்டினின்றும் அறுத்துக் கொண்டு ஓடுகிறது. அதுபோலச் சித்தவடிவ மூடயானையும் மாவுத்தனென்னும் குருவின் மகாவாக்கிய உபதேசவடிவ அங்குசத்தால் அடிக்கடி குத்தப்படுங்கால் பந்தத்திலிருந்து விடுபடுகின்றது.

முனீசுவரரே! காமியாகிய புருஷன் ஸ்திரீயை யிச்சிப்பது தனது நாசத்தின் பொருட்டேயாம். கதலிவனத்துள்ள யானை காகிதத்தாலமைக்கப் பெற்ற பெண்யானையைக் கண்டு சபல, (சஞ்சல) மடைந்து கட்டிலகப்பட்டுத் துன்புறுவதுபோன்ற பரமதுக்கத்திற்கு மூலமானது ஸ்திரீயின் சேர்க்கையாம். வனத்திலுள்ள அக்கினி சர்வபதார்த்தங்களையும் எரிப்பதுபோன்ற ஸ்திரீவடிவ அக்கினி அதைவிட அதிகமானதன்மையோடு கூடியிருக்கின்றது. ஏனெனின் அந்த அக்கினி பரிசித்தபோது சுடுகின்றது. ஸ்திரீ யென்னும் அக்கினியோ ஸ்மரித்தமாத்திரத்தில் சுடுகின்றது. எந்தச்சுகம் இரமணியமாகத் தோற்றுகிறதோ அது ஆபாத (சிரசுமுதற் பாதம்வரையில்) ரமணியமாயிருக்கிறது; எப்பொழுது ஸ்திரீ சுகத்தின் வியோகமா (பிரிவுண்டா)கிறதோ

அப்பொழுது மரித்தவன் போலாகின்றான்? அதாவது அக்காலத்திற் றீன சவமாகிறான்.

முனீசுவரரே ! இதுவோ எலும்பு, மாமிசம் ; உதிரங்களாலாகியகூடு. இது அக்கினியிற் பஸ்மமாய்விடும்; அல்லது பசு பக்ஷிகள் புசிப்பதற்கிரையாய்விடும். இதைக் கண்டு இவன் சந்தோஷிக்கிறான் பிராணனை ஆகாயத்தில் லயம்செய்கின்றான். ஆனதால் ஸ்திரியினிடத்து இச்சைவைப்பதாகிய விதனைச்செய்வது மூடத்தனம்: எப்படி அக்கினி ஜ்வாலையின் சிகையில் கருப்பிருக்கிறதோ அப்படி இவள் தலையில் கருத்தரோம மிருக்கிறது. எப்படி அக்கினியைப் பரிசிப்பதால் சுடுகின்றதோ அப்படியே ஸ்திரியைப் பரிசிப்பதாலும் சுடுகின்றது. ஆனதால் இரண்டினும் சூடு சமமுடையதே.

முனீசுவரரே ! இவனை நாசம் செய்வது ஸ்திரீரூப அக்கினியாம் ; எவன்ஸ்திரியை யிச்சிக்கிறானோ அவன் மகா மூடனாகிய அஞ்ஞானியாம் ; தனது நாசத்தின் பொருட்டே ஸ்த்ரியை இச்சிக்கிறான். எப்படி விட்டில், தனது நாசத்தின் பொருட்டு விளக்கை யிச்சிக்கிறதோ அப்படிக் காமிபுருடன் தனதுநாசத்தின் பொருட்டே ஸ்திரியை இச்சிக்கிறான்.

முனீசுவரரே ! ஸ்திரிவடிவ விஷக்கொடியில் கால் கைகளின் விரல்கள் இலைகளாகவும், தோள்கள் கிளைகளாகவும், எலும்புகள் கொத்துக்களாகவும், நேத்திராதி இந்திரியங்கள் புஷ்பங்களாகவு மிருக்கின்றன. இதில்காமிகளாகிய பக்ஷிகள் வந்து தங்குகின்றன. காமவடிவ வேடனாவன், வீசியுள்ள ஸ்திரிவடிவ தனது வலையினில் புருஷர்

களாகும் பக்ஷிகள் சிக்கிக்கொள்ளவே அக்காமவடிவவேடன் அவற்றைக்கட்டுக்குட் படுத்தி பரமகஷ்டத்திற் குள்ளாக்கு கின்றான். இப்படித் துக்கங்களையுண்டாக்கும் ஸ்திரீயை யிச்சிப்பவன்மகாமூடன்.

முனீசுவரரே! ஸ்திரீவடிவ மென்பது ஓர் பெண் பாம்பாம். எப்பொழுது அதன் பூத்காரமு (மூச்சு)ண்டா கின்றதோ அப்பொழுது அதன் சமீபமுள்ள தாமரை மலர்கள் எரிந்து போகின்றன, இத்தன்மைய ஸ்திரீவடிவப் பெண் பாம்பானது எங்கெந்த இச்சைவடிவ பூத்காரத்தைச் செய்கின்றதோ அப்பொழுதெல்லாம் வைராக்கிய வடிவத் தாமரை எரிந்து போகிறது. எப்பொழுது சர்ப்பம் தீண்டு கிறதோ அப்பொழுது விஷமுண்டாகிறது. ஸ்திரீவடிவ சர்ப்பத்தினைச் சிந்தித்தபோதே உள்ளத்தில் விஷமேறி விடுகிறது.

முனீசுவரரே! எப்படிச் செம்படவன் வீசிய வலையில் மச்சங்கள் அகப்பட்டுக் கொள்ளுகின்றனவோ அப்படிக் காமியானவன் மீனைப்போலச் சுந்தரமாகிய ஸ்திரீயின் வலையில் அகப்படுகின்றான். சிநேகவடிவக் கயிற்றாற் கட்டப் பட்டு இழுக்கப்படுகிறான். மறுபடியும் ஆசை யென்னும் கத்தியால்இவனைக் காமன் கொல்லுகிறான்.

முனீசுவரரே! இவ்வண்ணம் துக்கத்தைத்தரும் ஸ்திரீ யினிடத்து எனக்குஇச்சையில்லை. மேலும் காமவடிவ வேடனானவன் இராகவடிவ இந்திரியங்களென்னும் வலையை வீசி காமிகளென்னும் மிருகங்களைப் பிடிக்கின்றான். மீண்டும் ஸ்திரீயின் சிநேகவடிவக்கயிற்றில் காமிபுருஷ னென்னு மெருதுகட்டப் பட்டிருக்கிறது. ஸ்திரீகளின்

முகவடிவச் சந்திரனைக்கண்டு காமிபுருஷர்களென்னும் ஆம்பல்கள் மலர்கின்றன. எப்படி ஆம்பல் முதலியன சந்திரனைக்கண்டு மலர்கின்றனவோ சூரியனைக்கண்டு மலருகின்றனவில்லையோ அப்படி இக்காமிபுருஷன் போகங்களைக் கண்டு சந்தோஷிக்கிறான்; ஞானி சந்தோஷிக்கிறதில்லை. எப்படிக் கிரியானது சர்ப்பத்தை புற்றினின் றெடுத்துக் கொல்லுகிறதோ அப்படிக் காம முடையவனை ஸ்திரீ ஆத்மானந்தத்தினின்றெடுத்துக் கொல்லுகிறாள். எப்பொழுது ஸ்திரீயின் சமீபத்திற் செல்லுகின்றானோ அப்பொழுது அவனைச் சாம்பலாக்கி விடுகிறாள். எப்படி காய்ந்தசருகுகளையும் நெய்யையும் அக்கினியானது பஸ்மமாக்குகிறதோ அப்படிக் காமிகளை ஸ்திரீரூப நாகம் பஸ்மமாக்குகிறது.

முனீசுவரரே! ஸ்திரீவடிவ இரவிற்குச் சிநேகமான இருள்வரவே அதில்காமக் குரோதாதி ஆந்தைகளும் பிசாசங்களும் வருகின்றன.

முனீசுவரரே! யௌவனவஸ்தை யென்னும் போர்முகத்தில் ஸ்திரீவடிவ வாளால் வெட்டப்படாது பிழைத்திருப்பவன் தன்னியன்! அவனுக்கெனது நமஸ்காரம். ஸ்திரீயின் சம்பந்தம் பரமதுக்கத்திற்குக் காரணமானதால் எனக்கதிலிச்சையில்லை.

முனீசுவரரே! ரோகமுண்டானபோது அதைஅநுசரித்து ஔஷதம் சாப்பிடுவானுபின் ரோகம் நீங்குகிறது. அபத்தியம் செய்யின் அவனுக்குப் பிரளய முண்டாகிறது. ரோகமும் அதிகமாகிறது. ஆனதால் எனது ரோகத்திற்குரிய ஔஷதம்கொடும். எனக்குண்டான வியாதியைக் கேட்பீராக; எனக்கு ஜரை மிருத்தியுவென்னும் பெரிய

ரோகமிருக்கிறது. அது நாசமாகும்படியான ஔஷதத்தைக்கொடும்; ஸ்திரீ முதலான போகங்களெவைகளோ அவைகளெல்லாம் இந்த வியாதியை விருத்திசெய்கின்றன. எப்படி அக்கினியில் நெய் சொரிந்தபோது அது விருத்தியாகிறதோ அப்படி போகங்களால் ஜரை மிருத்தியு (மரணம்) விருத்தியாகின்றன. ஆனதால் இந்த வியாதி நீங்கும்படியான ஔஷதத்தைக்கொடும். இன்றேல் எல்லாவற்றினையும் துறந்து வனத்திற்சென்று வசிப்பேன்.

முநீசுவரரே! எவனுக்கு ஸ்திரீ யிருக்கின்றாளோ அவனுக்கே போக இச்சையுமுண்டு, எவனுக்கு ஸ்திரீயில்லையோ அவனுக்கு ஸ்திரீ யிச்சையுமில்லை, எவன் ஸ்திரீயை விட்டிருக்கின்றானோ அவனே சம்சாரத்தையும் விட்டிருக்கின்றான். அவனே சுகி, சம்சாரத்திற்கு பீஜம் (வித்து)ஸ்திரீயாம். ஆதலால் எனக்கு ஸ்திரீயினிடத்தி லிச்சையில்லை; எதனால் எனக்கு ஜரை, மரணம் என்னும் ரோகங்கள் நீங்குமோ அந்த ஔஷதத்தைக்கொடும்.

ஸ்ரீ வால்மீகமஹாரிஷியினு லருளப்பெற்ற

ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்

தேவதூதனாற் சொல்லப்படும்

மோக்ஷோபாயமாகிய

ஸ்திரீதுராசா வர்ணனமேன்னும்

பதினாறவது சர்க்கம் முடிந்தது.



# ஜராவஸ்தாவர்ணனம்.

அவதாரிகை:—சோகம், மோகம், துன்பம், விஷாதமுதலான அநேக ரோகங்கள்நிறைந்த, சிந்தையினால் ஜயிக்கப் படுவனவாகிய விருத்தாவஸ்தையின் நிந்தையினையிதிற் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினர்:—முநீசுவரரே! பாலியாவஸ்தையோ மகாஜடமாயும் அசக்தத்தோடு கூடியதாயுமிருக் கின்றது. எப்பொழுது யௌவனவஸ்தை வருகின்றதோ அப்பொழுது அது பாலியாவஸ்தையைக் கிரகித்து விடுகின்றது அதற்கு மேல் விருத்த அவஸ்தையுண்டாக வப்பொழுது சரீரம் தளர்வடைந்ததாகின்றது; புத்தியும். க்ஷீணமாகின்றது. பிறகு மரணமும் அடையப் படுவதாகின்றது.

முநீசுவரரே! இந்தவிதமாக அஞ்ஞானியின் ஜீவனம் வீணாகின்றது; ஒரு அர்த்தமும் சித்திக்கிறதில்லை. எப்படி நதிக்கரையிலுள்ள விருக்ஷம் ஜலப்பிரவாகத்தால் தளர்ச்சியடைகின்றதோ அப்படி விருத்தாவஸ்தையில்சரீரம் தளர்ச்சித்தன்மை யடையப்படுகின்றது. காற்றினால் இலைகள் பறப்பதைப்போல விருத்தாவஸ்தையில் சரீரம் நாசமாகின்றது. சகல ரோகங்களும் விருத்தாவஸ்தையில் இவனைச் சாருகின்றது. சரீரம் மெலிவடைகிறது, ஸ்திரீ புத்திராதிகள் கிழவனைக் கழுதைக்கு சமமென்று அசட்டை

செய்கிறார்கள். எப்படி பழுத்தபழங்களை விருக்ஷங்கள் பற்றி நிற்கின்றன வில்லையோ அப்படி விருந்தனை குடும் பஸ்தர்கள் விட்டுநீங்குகிறார்கள். பார்த்தும் நகைக்கிறார்கள். எப்படி வெறி கொண்டவனைப் பார்த்து நகைப்பதுபோல இவனைப் பார்த்து இவனுடைய புத்தியெல்லாம் போய்விட் டதென்று பரிகசித்துப் பேசுகிறார்கள்; எப்படித் தாமரை மலரில் பனிபெய்தபோது தாமரை கருகிப்போகிறதோ அப்படி விருத்தாவஸ்தையினு லிவன் தளர்ச்சியடைகிறான்; சரீரம்கூனிப்போகிறது. மயிர் நரைத்து வெண்மையாகிறது; சக்திகுறைந்து போகிறது. எப்படி வெகுகாலமான விரு க்ஷத்தில் வண்டுகள் ஏற்பட்டு விடுகின்றனவோ அதுபோல சக்தி கொஞ்சமும் இவனுக்கிருக்கிறதில்லை.

ஓ முநீசுவரரே! மற்றெல்லாச் சக்திகளும்கிரியைகளும் தொழில்களும் குறைந்துபோனபோதிலும் ஆசக்தி(ஆசை) ஒன்று மாத்திரம் தங்குகிறது. எப்படி பெரும் விருக்ஷத் தில் ஆந்தை வந்து தங்குகிறதோ அப்படி இதற்கு குரோதசக்தி உண்டாகின்றது. ஏனையசக்திகள் எல்லாம் குன்றிப்போகின்றன.

முநீசுவரரே! விருத்தாவஸ்தை துக்கத்திற் கிருப்பிட மாம். எப்பொழுது ஜரை(கிழத்தனம்) வருகிறதோ அப்பொழுது 'சர்வதுக்கங்களும் ஒன்றாய்விடுகிறது. அத னுல்ஏழையாகின்றான். யௌவனவஸ்தையிலுள்ள காமத் தின் பலமெல்லாம் விருத்தாவஸ்தையில் குறைந்துவிடுகிறது. இந்திரியங்களின் இச்சையும் குறைகின்றது. அதனுல் ஆசையின் பிரயோஜன மில்லாததாகின்றது. எப்படி தனமின்றிய தந்தையினின்றுண்டான புத்திரன் ஏழையாவா

னே அப்படிச் சரீரத்தில் சக்தி குறையவே இந்திரியாதிகள் பலமற்றனவாகின்றன; ஆசை யொன்றுமாத்திரம் வளர்கின்றது.

முநீசுவரரே! எப்பொழுது ஜரை யென்னும் இரவு வருகின்றதோ அப்பொழுது காமமென்னும் நரிகள்வந்து ஊளை யிடுகின்றன. ஆதி(மானஸதாபம்) வியாதி(சரீரதாபம்) யென்னும் ஆந்தைகளும் வந்து வாசஞ்செய்கின்றன.

முநீசுவரரே! இத்தன்மைய நீசமான விருத்தாவஸ்தையிலெனக் கிச்சையில்லை. இந்ததேகம் ஜரை(மூப்பு) வந்ததும் கூனிப்போகிறது. எப்படி விருக்ஷம் பழங்கள் நிரைந்ததால் வளைகின்றதோ அப்படி இத்தேகம் ஜரைவந்ததும் வளைகின்றது; யௌவனவஸ்தையில் எந்த ஸ்திரீ புத்திராதிகள் விருப்பத்தோடு பணிவிடைகள் செய்தார்களோ அவர்களெல்லோரும் அலக்ஷியம் செய்கிறார்கள். எப்படிக் கிழட்டெருதை சொந்தக்காரன் அலக்ஷியத்தால் விட்டுவிடுகிறானே அப்படி இவனை பந்துக்கள் மனத்தினால் நீக்குகிறார்கள். இவனைக் கண்டும் நகைக்கிறார்கள்; மேலும் அவமதித்தலையுஞ் செய்கிறார்கள். அவர்களுக்கு இவன் ஓர் ஒட்டையினைப் போன்று காணப்படுகிறான்.

முநீசுவரரே! இத்தன்மைய இழிந்த அவஸ்தையில் எனக்கிச்சையில்லை. இப்பொழுது நான் செய்யத்தக்கது இதுவென்பதைத் தெரிவியுங்கள் அதையான் செய்கிறேன். இச்சரீரத்திற் குண்டாகும் மூன்றவஸ்தைகளில் ஒன்றும் சுகமுடையதல்ல. ஏனெனின், பாலியாவஸ்தையோ மிக மூடத்தனத்தோடு கூடியிருக்கிறது. யௌவனவஸ்தையோ மகாவிகாரமுடையது. ஜராவஸ்தையோ இவனை மகாதுக்கத்

திற்குப் பாத்திரமாக்குகிறது. பாலியாவஸ்தையை யௌவனுவஸ்தை விழுங்குகிறது; யௌனுவஸ்தையை ஜராவஸ்தை விழுங்குகிறது; ஜராவஸ்தையை மிருத்தியு விழுங்குகிருன். இவ்வவஸ்தைகளெல்லாம் அற்பகால மாத்திரம் நிலையுள்ளனவாம் இவற்றை ஆசிரயிப்பதா லெனக்கென்ன சுகமுண்டாகப் போகிறது: ஒன்றுமில்லை. ஆனதால், நான் எதைக்கொண்டு இந்த துக்கத்தினின்று விடுபடுவேனே அந்த உபாயத்தை எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

முனீசுவரரே! எப்படிச் சாயங்காலம் வந்தபோதே இரவு வருகின்றதோ அப்படி ஜராவஸ்தை வந்தபொழுது மரணமும் சமீபிக்கிறது. சந்தியாகாலமான போது பகலை இச்சிப்பது மூடத்தனமோ, அப்படி ஜரை வந்தபின் ஜீவிக்க நினைப்பது மூடத்தனமாம்.

முனீசுவரரே! பூனையானது எலிவருமாயின் அதைப் பிடிக்கவேண்டுமென் றெப்படிச் சிந்திக்கிறதோ, அப்படி எமன் ஜராவஸ்தை வரும்போது நாம் இவனை விழுங்கவேண்டுமென்று சிந்திக்கிருன். மீண்டும் இந்த ஜராவஸ்தை, காலனுக்குத் தோழமை பூண்டுள்ளது. ரோக மென்னும் மசாலையினைப் பூசிச் சரீரமென்னும் மாமிசத்தை இது வாட்டும்போது இதற்கு எஜமானனுகிய காலன் வந்து போஜனஞ்செய்கிருன். சரீரமென்னும் வீட்டிற்குஎஜமானன் காலன். அவனெப்பொழுது வீட்டிற்குள் பிரவேசிக்கிருனே அப்பொழுது அவனுக்கு முன்னரே அவனது மூன்று பட்டாணிகள் அதனுள் பிரவேசித்திருக்கிருர்கள். முதலாவது அசக்தத்தன்மை, இரண்டாவது சரீரத்திற் பீடை, மூன்ருவது காசம் என்பன இம்மூவரும் உட்பிரவேசித்துச் சுவாசத்தை வேகமாக நடத்துபவராகிருர்கள்.

வெண்ணிறமுள்ள உரோமங்கள் சாமரைபோலசைகின்றன. இப்படிக்காலனுடைய மனைவிகள் பிரவேசித்து ஜரை(மூப்பு) வடிவ ஈரவிறகினுற் சரீரத்தை யுண்டாக்கியபோது அதற் கெஜமானனுகிய காலன் பிரவேசிக்கிறுன்.

முநீசுவரரே ! மிக்க இழிந்த அவஸ்தை ஜரையேயாம் அது எப்பொழுது வருகிறதோ அப்பொழுது சரீரத் தளர்ச்சி யுண்டாகின்றது ; நடுக்க முண்டாகிறது ; சரீரத் தைத் துர்ப்பலமாக்குகிறது குரூரத்தன்மையை யுண்டாக்கு கிறது , எப்படித்தாமரையில் பனிபெய்து அதனைக் கருகச் செய்கிறதோ அப்படி அது சரீரத்தைத் தளர்வடையச் செய்கிறது. எப்படிக் காட்டில் புலிவந்து கர்ஜ்ஜித்து மானைக் கொல்லுகிறதோ அப்படிக் காசமென்னும் புலிவந்து மிருகவடிவ பலத்தைக் கொல்லுகிறது.

முநீசுவரரே ! எப்பொழுது ஜரைவருகிறதோ அப் பொழுது மிருத்தியு (எமன்) இவனைக்கண்டு சந்தோஷிக் கிறுன்.எப்படிச் சந்திரனதுவரவால் ஆம்பல் சந்தோஷிக் கிறதோஅப்படி மிருத்தியு சந்தோஷிக்கிறுன். இந்தஜராவ ஸ்தைமிகக்கொடிது. மகாமகா யுத்த வீரர்களையும் தன்வசப் படுத்தியிருக்கிறது. பெரியசூரன் போரில் சத்துருவை ஜயிக்கிறுன் ; ஜரையோ அவனையும் ஜயிக்கிறது. மகா பர்வதங்களைத் தூளாக்கு வோரையும் ஜரையென்னும் பிசாசு மிக்க சலிக்கச்செய்கிறது. இந்தஜரை யென்னும் இராக்ஷஸி எவளோ அவள் எல்லோரையும் தீனமா (ஏழமையா)க்கி ஜயித்துவிடுகிறுள்.

முநீசுவரரே ! இந்தஜரையானது சரீரத்தில் அக்கினி போலப்பற்றுகிறது. எப்படி அக்கினி விருக்ஷத்திற்பற்றிய

போது புகையுண்டாகிறதோஅப்படிச் சரீரவடிவ விருக்ஷத்தில் ஜரைவடிவ அக்கினிபற்றவே ஆசையென்னும் புகை அதிலுண்டாகிறது. எப்படி டப்பியில் உயர்ந்த இரத்தின மிருக்கிறதோ அப்படி ஜரையென்னும் டப்பியில் துக்கவடிவ அநேக இரத்தினங்களிருக்கின்றன. ஜரையென்னும் வசந்தருதுவரவே சரீரவடிவ விருக்ஷம் துக்கவடிவ ரசத்தால் நிரம்புகிறது. எப்படி யானை சங்கிலியாற் கட்டுப்பட்டு வசமிழந்ததாகிறதோ அப்படி ஜரைவடிவச் சங்கிலியாற் கட்டுப்பட்டு இவன் எளியவனுகிறுன். அங்கங்கள் சிதைகின்றன. பலம் குறைகின்றது. இந்திரியங்களும் பலமின்றியனவாகின்றன. சரீரம்தளர்வடையினும் ஆசைதளர்வடைவதில்லை. நாளுக்கு நாள்வளர்ந்து கொண்டே யிருக்கிறது. எப்படி இரவு வரும்போழுது தாமரை மலர்கள் குவிகின்றனவோ அப்பொழுது அங்குப் பிசாசங்கள் வந்து சஞ்சரித்துக் களிக்கின்றனவோ, அப்படி ஜரையென்னும் இரவுவரவே சர்வசக்திகளாகிய தாமரைகள் குவிய ஆசையென்னும் பிசாசுகள் களிக்கின்றன.

முநீசுவரரே! கங்கையின் கரையிலுள்ள விருக்ஷங்கள் கங்கா ஜலவேகத்தால் எப்படித் தளர்வடைகின்றனவோ அப்படி ஆயுள்வடிவப் பிரவாகம்செல்லவே அதன்வேகத்தால்சரீரந்தளர்ச்சியடைகிறது. எப்படி மாமிசத்துண்டத்தைக்கண்டு ஆகாயத்திற் பறக்கும் பருந்து பூமியினிடமாக வந்து யெடுத்துச் செல்லுகிறதோஅப்படி ஜராவஸ்தையில் சரீரவடிவ .மாமிசத்தைக் :காலன் வந்து எடுத்துக் கொண்டு போகிறுன்.

முநீசுவரரே! இதுவோ காலன் விழுங்குதற்

கென்றே யுண்டாயிருக்கிறது. எப்படி விருக்ஷங்களை யானை புசிக்கின்றதோ அப்படி ஜரையையுடைய சரீரத்தைப் பார்த்துக் காலன் புசிக்கின்றான்.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினாலருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
ஜராவஸ்தா வர்ணனமேன்னும்
பதினேழாவது சர்க்கம்முடிந்தது.



## காலவிருத்தாந்த நிருபண வர்ணனம்



அவதாரிகை:—குணதோஷ வலிமையின் மேன்மையோடு கூடிய தனது ,விலாஸ சமூகங்களினல் கர்மங்களில் பிரியமுள்ள சர்வப்பிராணிகளேயும் இரமிக்கச் செய்யும் காலங்களின் மகிமையைக் கூறுகின்ருர்.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லுகின்ருர்:— முநீசுவரரே! அஞ்ஞானி சம்சாரமென்னும் படுகுழியில் வீழ்ந்திருக்கின்ருன். சம்சாரமென்னும் படுகுழி அற்பமாகவும் இவன் பெரிதாகவுமிருக்கிருன். சங்கற்ப விகற்பங்களின் ஆதிக்கியத்தா (தலைமையா)ல் வளர்ந்திருக்கிருன். இந்தச் சம்சாரத்தைக் கெடுப்பது மிகக்கடினமாகின்றது. ஞானியானவன் சம்சாரத்தை மித்தையெனக்கண்டு மீண்டும் சம்சாரவலேயிற் கட்டுப்படுகிறதில்லே. அஞ்ஞானியோ சம்சாரத்தைச் சத்தியமெனக்கருதி அவஸ்தை வடிவ வலேயில் அகப்படுகிருன். போகங்களே இச்சிப்பதும் இத்தன்மையதாம். கண்ணுடியிற் பிரதிபிம்பத்தைப் பார்த்துக் குழந்தைகள் அதனேப் பிடிக்க எப்படி இச்சிக்கின்றனவோ, அப்படி அஞ்ஞானி சம்சாரத்தைச் சத்தியமெனக் கருதி ஜகத்பதார்த்தங்களில் இது எனக்கு வேண்டும் இது வேண்டுவதில்லே என்று இச்சிக்கின்ருன். இச்சுகமோ நாசமுடையதாம்; அதாவது போக்குவரத்துடையதாம்; நிலேயுடையதல்ல. இதைக்காலன் விழுங்குகின்ருன். எப்படிப் பழுத்த மாதுளேயை யெலி சாப்பிடுகின்றதோ அப்படி யெல்லாப்பதார்த்தங்களேயும் காலன் சாப்பிடுகின்ருன்.

முநீசுவரரே! உலகின்கண் எவ்வளவு பதார்த்தங்க ளுண்டோ அவ்வளவும் காலனால் விழுங்கப்படுகின்றன; மகா மகாபலமுள்ள மகாமேருபோன்ற பலமுள்ளவர்களையும் காலன் விழுங்கியிருக்கிறான். எப்படிச் சர்ப்பத்தைக் கிரி சாப்பிட்டுச் செல்லுகிறதோ அப்படி மிக்கப்பலவான்களையும் காலன் விழுங்கிச் செல்லுகின்றான். மேலும் இந்த ஜகத்து வடிவம் ஒரு அத்திப்பழமாம். அதன் மஜ்ஜைகள் பிரஹ்மாதி களாவர்; இப்பழங்களையுடைய விருக்ஷங்களால் அடர்ந்துள்ள காடு என்பதே பிரஹ்மத்தின் சொரூபமாம், இந்தப் பிரஹ்ம வடிவ வனத்தின்கண்ணுள்ள பழங்களெல்லாம் இவனுக்கா காரமாம். காலன் இவ்வெல்லாவற்றினையும் பக்ஷித்துச் செல்லுகிறான்.

முநீசுவரரே! இக்காலன் மிகப்பலவான்; எவை எவை காணப்படுகின்றனவோ அவை அவை யெல்லாம் காலனால் விழுங்கப்பட்டுள்ளனவே யென்றால் பிறவற்றினைக் குறித்துக் கேட்பானேன். எப்படிச் சிம்ஹம் மிருகாதிகளை விழுங்குகிறதோ அப்படி எமக்கு மேலான பிரஹ்மாதிகளை யும் காலன் விழுங்குகிறான்; மேலும் காலன் எதனாலும் அறிதற்கரியவனாம். ஆனால் கணம், நாழிகை, முகூர்த்தம், பகல், மாதம், கற்பமென்பன முதலியவற்றால் காலனைத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. காலனென்பவன் ஓர் வெளிப்படையான உருவால் புலப்படாது மறைவாயிரு ந்தும் ஒருவரையும் நிலைக்கச் செய்கிறானில்லை. மேலும் காலன் ஒரு கொடியை யுண்டாக்குகின்றான். அதற்குச் சரீரம் இரவு; அதற்குப் புஷ்பங்கள் பகல்; இதில் ஜீவவடிவ வண்டுகள் வர்த்திக்குகின்றன.

முநீசுவரரே! ஜகத்து வடிவ அத்திப்பழத்தில் ஜீவ வடிவ அநேக கொசுக்களிருக்கின்றன. அப்பழத்தைக் காலன் புசித்துச் செல்லுகின்றான். எப்படிக்கிள்ளைகள் அநாரசப்பழத்தைப் புசிக்கின்றனவோ அப்படிக் காலன் ஜீவர்களைப் புசிக்கிறான். ஜகத்து வடிவ விருக்ஷத்திலுள்ள ஜீவ வடிவ இலைகளைக் காலனென்னும் யானை புசித்துச் செல்லுகிறது நன்மை தீமைகளென்னும் யானைகளை காலரூப சிம்ஹமானது துண்டந் துண்டமாக்கிப்புசிக்கின்றது.

முநீசுவரரே! இக்காலன் மிகக்கொடியன் எவரிடத்தும் தயைசெய்கிறதில்லை. எப்படி மிருகமானது ஒன்றினையும் விடாது எல்லாத்தாமரைகளையும் புசித்துச் செல்லுகிறதோ அப்படி எல்லோரையும் இவன் புசித்துச்செல்லுகின்றான். ஆயினும் சாந்தி மைத்திரி யென்னும் முளைகளோடு கூடிய சேதன பிரகாசமுடையதான ஒருதாமரை மாத்திரம்அவைகளில் தப்பிப் பிழைத்திருக்கின்றது. அந்த மிருகத்திற்குச் சமானமான காலனுக்கு அதனிடமாகச் செல்லும் சாமர்த்தியஞ் சற்றுமில்லை. அங்கு செல்வானாயின் காலனும் லயமடைந்துவிடுவான். எவ்வளவு பிரபஞ்சமுளதாகுமோ அவ்வளவும் காலன் வாயிலிருக்கிறது. பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், குபேரன், முதலான சகல மூர்த்திகளும் காலனாற் பற்றப்பட்டிருக்கிறார்கள். பிறகு அவர்களையும் அவன் மறையச் செய்கின்றான்.

முநீசுவரரே! உற்பத்தி, ஸ்திதி, நாசம் முதலாயின காலனாலாகின்றன. அநேகமுறை மகாகற்பங்களை அவன் விழுங்கியிருக்கின்றான். இன்னும் பலமுறை விழுங்குவான். காலனுக்குப் புசிப்பதால் ஒருபோதும் திருப்தியுண்டாகிற

தில்லை இனி யுண்டாவதுமில்லை. எப்படி அக்கினிக்கு நெய் ஆகுதியால் திருப்தி யாகிறதில்லையோ, அப்படி ஜகத்தையும் சர்வபிரஹ்மாண்டங்களையும் புசிக்கினும் காலனுக்குத் திருப்தியுண்டாகிற தில்லை. இவனுக்கு இது சுபாவமாம். இந்திரனைத் தரித்திர னாக்குவதும். தரித்திரனை இந்திர னாக்குவதும், மகாமேருவைக் கடுகாக்குவதும், கடுகை மகாமேருவாக்குவதும், மிகுந்தஐசுவரிய முடையவனைத் தாழ்த்துவதும், யாவரினும் தாழ்ந்தவனை மேலாக்குவதும், துளியைச் சமுத்திரமாக்குவதும், சமுத்திரத்தைத் துளி யாக்குவதுமாகிய வித்தன்மைய சாமர்த்தியம் காலனிடத் திருக்கின்றது. மேலும் ஜீவவடிவ மச்சங்களை நல்லனவும் தீயனவுமான கர்மவடிவவாளால் வெட்டிக் கொண்டேயிருக் கின்றான்; மீண்டும் எப்படிஇருக்கிறானெனின், கிணற்றின் மீதுள்ள பூட்டை உருளையாயு மிருக்கிறான். ஜீவவடிவ கலயங்களைச் சுபாசுபகர்மவடிவக் கயிற்றிற்கட்டிச் சுழற்று கிறான். மற்றும் ஜீவவடிவ விருக்ஷத்தைப் பகலிர வென்னும் கோடரியால் சேதிக்கின்றவனு மாகின்றான்.

முநீசுவரரே! எவ்வளவு ஜகத்தின் விலாஸம் தோற்றுகிறதோ அவ்வளவையும் காலன் கிரகித்துக் கொள்ளுகின்றான். ஜீவர்களென்னும் இரத்தினங்களுக்குக் காலன் ஓர் டப்பாவாம். அவன் அவைகளை அந்தந்த உதரங்களிற் போட்டு விளையாடுகிறான். சந்திரசூரியர் களென்னும் பந்துக்களைச் சிலகாலம் மேலும் சிலகாலம் கீழுமாக விட்டெறிந்து விளையாடுகிறான். மேலும் மகா புருஷர்களும் அவர்களே. அவர்கள் உற்பத்தி நாச முடைய பதார்த்தங்களில் எதனிடத்தும் இச்சையினைச் செலுத்துகிறதில்லை. ஆனதால். அவர்களை நாசஞ்செய்

தற்குக்காலன் சாமர்த்திய முடையவனல்லன். எப்படி மஹாதேவர் முண்டமாலைகளைக் கழுத்திலணிகின்றாரோ அப்படி இவனும் ஜீவர்களை மாலையாகத் தரிக்கின்றான்.

முநீசுவரரே! மகாமகாபலவான்களையும் காலன் கிரகிக்கின்றான். எப்படிப்பெரிய சமுத்திரத்தை வடவா முகாக்கினி சாப்பிடுகின்றதோ எப்படிக்காற்றுப் பூர்ஜபத் திரத்தை (யந்திரங்களமைக்கும் ஒருவித மரத்தின் பட்டையை) அடித்துச் செல்லுகிறதோ, அப்படிக் காலனுக்கு இதில் பலமிருக்கின்றது. இவனை எதிர்த்து முன்னிற்கும் சாமர்த்திய மெவர்களுக்குமில்லை. சத்துவகுணப் பிரதான தேவர்கள், இரஜோகுணப்பிரதான இராஜர்கள், தமோ குணப்பிரதானர்களான தைத்திய விராக்ஷஸர்களாகிய இவர்களில் எவர்களுக்கும் காலன் முன்னிற்கும் சாமர்த்திய மில்லை. ஒருபாண்டத்தில் அரிசியும் ஜலமும் போட்டுச் சமைக்கும் பொருட்டு அதனை அடுப்பிலேற்றவே அக்கினி யின்தாபத்தால் அதற்குள்ளிருக்கும் அரிசிகள் எப்படி கீழு மேலுமாகின்றனவோ அப்படி ஜீவனென்னும் அரிசியை ஜகத்து வடிவ பாண்டத்திலிட்டு இராகத்வேஷ வடிவ அக்கினியி லேற்றுங்கால் கர்மமென்னும் பரிபாகத்தினை யடைந்து மேலும் கீழுமாய்ச் செல்லுவதாகின்றது.

முநீசுவரரே! இக்காலன் ஒருவரையும் நிலைக்கச் செய்கிறதில்லை. மிகக்கொடியவன்; எவரிடத்தும் தயை செய்கிறதில்லை. எனக்கிவனுடைய பயமிருக்கின்றது. ஆன தால் நான் காலனினின்றும் பயமின்றியிருக்கும் உபாய த்தினைச் சொல்லவேண்டும்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
காலவிருத்தாந்த நிருபணமென்னும்
பதினேட்டாவது சர்க்கம்
முடிந்தது.



## காலவிலாஸ வர்ணனம்.

அவதாரிகை:—சண்டிகை யென்னும் ஸ்திரீயோடு கூடி வேட்டை செய்து களிப்படையும் இராஜபுத்திரனை யொத்த காலனது வர்ணனம் இதிற் கூறுகின்றார்.

இராமசந்திரர்:—முநீசுவரரே! சுதந்திரலீலையுடைவனும், ஒரு ஆபத்துக்களு மில்லாதவனும், நிகரற்ற வல்லமை யுள்ளவனும், சூரிய சந்திராதியர்களையும் பிரகாசிப்பிப்பவனுமான பிரஹ்ம வடிவ இராஜனுக்கு, அநாதி ரூபமாகிய மாயை யென்னும் பட்டராணியினின்று முண்டாகி இளவரசாக வபிடேக மடைந்த காலவடிவ இராஜபுத்திரனது சரித்திரத்தை என்னென்று கூறுவேன்.

முநீசுவரரே! இக்காலன் மகாபலவான் எப்படி இராஜபுத்திரன் வேட்டையாடவருவதைக் கண்டு வனத்திலிருக்கின்ற பெருத்த பசு பக்ஷிகள் துக்கமடைகின்றனவோ அப்படிச் சம்சாரமாகிய வனத்திலிருக்கின்ற பிராணிகள் மாத்திரமாயுள்ள பசு பக்ஷிகளும் ஸர்வ ஜீவர்களும்காலனென்னு மிராஜ புத்திரன் வேட்டஞ்செய்ய வருதல்கண்டு பயமடைகின்றார்கள்; தளர்வடைகின்றார்கள் என்ற போதிலும் மீண்டும் அவர்களையே அவன் கொல்லுகின்றான்.

முநீசுவரரே! ஜகத்து வடிவப் பழைமையான காட்டில் வாசஞ்செய்யும் தீனத்தன்மையும் அஞ்ஞானமும் அடைந்துள்ள பிராணிவடிவ மிருகங்களை வேட்டமாடும்

இக்காலனது விளையாட்டின் பொருட்டுப் பிரளயகாலத்தையுண்டுபண்ணும் சமுத்திரமானது அழகிய தடாகமாக (புஷ்கரணியாக) விருக்கின்றது. அத்தடாகத்தின் நடுவில் வடவா(குதிரை) முகாக்கினியென்னும் தாமரை இதழ் விரிந்திருக்கின்றது. தயிர், பால் முதலானவகைகள் நிறைந்த சமுத்திரங்களோடு கூடிய கைப்பு, இனிப்பு, புளிப்பு முதலான மதுரம் நிறைந்ததும், நெடுங்காலமுள்ளதும், அற்பகால முள்ளதுமான ஜகங்கள் காலவடிவ யுவராஜனுக்குக் காலையிற் புசிக்கும் கலேபா (உப்பு புளி மிளகாய் தயிர் முதலானவைகளைக் கூட்டிச் செய்யும் கறிகள் முதலாயினவைகள்; இதுதென்னாட்டிற் பிரசித்தம்)வென்பனவாம்.

முனீசுவரரே! இக்காலன் மகாபைரவனுக்கிருந்து சகலத்தையும் விழுங்குகின்றான். பிரளயகாலத்தில் சகலத்தையும் பிரளயமாக்குகின்றான். இவனுக்குச் சண்டிகையென்னும் ஒரு சக்தியும் இருக்கின்றாள் அவள் நடப்பதில் மிகச் சாதுர்யமும், தனது* மாத்ருகணங்களிற் கூடியிருப்பவளும், சம்சாரத்துள்ள சர்வபிராணிகளைக் கொல்லுகிறவளும், சம்சாரவடிவக் காட்டிற் சஞ்சரிக்கும் பெண்புலிபோன்றவளும், பெருத்த வயிறுடையவளுமாகிய காளராத்திரியெவளோ அவள் இக்காலனுக்குப் பிரியமுள்ள பத்தினியாயிருக்கின்றாள்.

முனீசுவரரே! வெண்மை, நீலம், சிவப்பு என்னும் வர்ணங்களோடு கூடிய தாமரைகள் நிறைந்த நானாரசங்களோடு கூடிய இந்தப் பிருதிவியெதுவோ அது கால

---

* பிராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரி, வைஷ்ணவீ, வாராஹி, மாகேந்திரி, சாமுண்டி முதலானவர்கள் மாத்ருகணங்கள்.

னென்னும் இராஜகுமாரன் கையிலிருக்கின்ற பான (குடிக்கும்) பாத்திரமாம். எதனது தோள்வலியின் பட்டாரமானது சகிக்கமுடியாததோ, மகார்ஜ்ஜனேயோடு கூடியதோ அந்த அதிபயங்கரமான தோள்களை யுடைய நரசிம்ஹ மூர்த்தியானவர் இக்காலனது தோளென்னும் கூட்டில் அசுரவதமென்னும் விளையாட்டைச் செய்கின்ற சகுந்த(கழுகு) பக்ஷியா யிருக்கின்றார். பலவிதப் பிரஹ்மாண்டங்களை மாலையாகத்தரித்துச் சுரைக்குடுக்கைகளா லாகிய கின்னரியைத் தாங்கி மதுரமான சப்தங்களைச் செய்யும், சரத்காலத்துள்ள நிர்மல ஆகாயம் போன்ற அழகுள்ள சம்ஹாரம் செய்யும் பைரவமூர்த்தி யெவரோ அவர் இந்த மகா * கால தேவர் விளையாட்டிற்குக் குயிற்பிள்ளையா யிருக்கின்றார். சதா டங்காரத் தொனி செய்து கொண்டும், துக்கவடிவ பாணங்களை எய்து கொண்டும்; சகலரையும் சம்ஹாரம் செய்யும் இக்காலனது வில்லானது எங்கும் ஸ்புரித்துக் கொண்டேயிருக்கின்றது. தான் சஞ்சலவடிவமாயிருந்தும் சஞ்சல முள்ள லக்ஷியங்களைப் பேதித்து, இக்காலன் விளையாடுகிறான். இதனல் பண்டிதர் முதலான சகலப் பிராணிகளாகிய மிருகங்கள் வேட்டம் செய்யப்படுகின்றார்கள். அதாவது அநாதியாயுள்ள ஜகத்தில் விஷயங்களிற் கட்டுப்பட்ட மனிதவடிவக் குரங்குகளை இவ்விராஜபுத்திரனாகிய காலன் தனது சேஷ்டையாகிய வேட்டமாடிக் கொண்டிருக்கின்றான்.

முனீசுவரரே! அக்காளியும் இக்காலனும் சர்வத்தையும் விழுங்கி விட்டு நடிக்கின்றார்கள். எப்படிக் காட்டில்

---

* சிலையாக்கியானத்தில் மகாகாலனது விஷயங்கள்சொல்லப்படும்.

உள்ளமானை ஆண்சிங்கமும் பெண்சிங்கமும் கூடிப்புசித்து நடித்துக் களிக்கின்றனவோ, அப்படி ஜகத்தென்னுங்காட்டில் ஜீவவடிவ மானைப் புசித்துக் காலனும் காளியும் நிருத்தியம் செய்கின்றார்கள். மீண்டும் இவர்களாலேயே ஜகத்துண்டாகின்றன. நாநாவித பதார்த்தங்களை யுண்டாக்குபவரு மிவர்களே. பிருதிவி, நந்தவனம், கிணறு முதலானவைகள் இவர்களா லுண்டாகின்றன. அழகுள்ள ஜீவன வுபாயத்தையு மிவர்களே யுண்டாக்கு கின்றார்கள். ஒருசமயத்தில் அதையும் நாசமாக்கு கின்றார்கள். சர்வ பதார்த்தங்களை யுண்டாக்கு பவருமிவர்களே நாசம் செய்பவரு மிவர்களே. எங்குப் பெரும்பட்டண மிருக்கின்றதோ அங்கு அதைப்பாழாக்கு வோரு மிவர்களே. இவர்களே அப்பாழ் நிலத்தைப் பட்டணமு மாக்குகின்றார்கள். மீண்டும் அதனை நாசம் செய்கின்றார்கள் இவ்வாறு ஒரு பதார்த்தத்தையும் நிலைபெறச் செய்கிறதில்லை. இந்தவிதமாகச் சகலபதார்த்தங்களும் காலனால் ஜீரணமடைகின்றன. இதைநானெவ்விதம் ஆசிரயம் செய்வேன்! ஆனதால் எனக்கு ஜகத்பதார்த்தங்களெவைகளினு மிச்சையில்லை.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
காலவிலாச வர்ணன மேன்னும்
பத்தோன்பதாவது சர்க்கம் முடிந்தது.



# காலநிருத்திய விலாஸவர்ணனம்.

அவதாரிகை:—பிரகிருதியின் விசித்திரம் போன்ற, கிரியைகளையும் அவற்றின் பிரயோஜனவடிவ இரண்டாவது காலனது நிருத்தியத்தின் விஸ்தாரத்தையும் இதிற் கூறுகின்றார்.

இராமசந்திரர் :—முனீசுவரரே ! இச்சம்சாரத்தில் சகலதுர்க்குணங்களுக்கும் தலைமை பூண்டுள்ள இரண்டாவது காலனெவனோ, அவனே சம்பூரணக் கிரியைகளையும் செய்கின்றான். சம்ஹாரமும் செய்கின்றான். அவன் ஜீவர்களுக்குச் சுபாசுபக் கருமங்களின் பயனைத் தருதலாலும் அதுபோலவே அவர்களோடு வியவகாரங்களை அல்லது விளையாட்டைச் செய்வதாலும் அவனைத்தைவ (ஊழ்) மென்றும், காலனென்றும் சொல்லுகிறார்கள். ஸ்பந்த (அசைவு) மாத்திரவடிவமுள்ள இக்காலனது கிரியையின்றி ஒருவடிவமுந் தோன்றுகிறதில்லை, ஒருகருமமுந் தோன்றுகிறதில்லை, ஒருசெய்கைகளு முண்டாகிறதில்லை, இக்காலனுக்கு, மிக்க பராக்கிரம மிருக்கின்றது. இவனது வல்லமையின் முன் னிற்பதற்கு எவருக்கும் ஆற்றலில்லை. கணத்தில் உயர்வுடையவனைத் தாழ்த்துகிறான், தாழ்வுள்ளவனை உயர்த்துகிறான். அவனைத் தடுக்கும் ஆற்றல் எவர்களுக்குமில்லை. சகலரு மிவன் பயத்தினால் நடுங்குகிறார்கள். இவன் மகாபைரவன், சூரியன் பனியை விழுங்குவதுபோலச் சகல புவனங்களையும் விழுங்குபவனிவனே. விஷமமான போகவடி

வைத்தரித்துத் திரிசியமாகக் காணப்படுகின்ற இந்த ஸர்வ ஜகத்தும் இவன் ஆடுவதற்கு அரங்கமாம், இவ்வரங்கத்தில் இவன் தனதிச்சையின்படி நிருத்தியம்செய்து விளையாடுகின்றான். இவன் காபாலிக வேடதாரியாய்க் கிருதாந்த (யம) னென்னும் பெயரைத்தாங்கி மதங்கொண்டு இந்த ஜகத்திலாடுகின்றான்.

முனீசுவரரே! ராகமுள்ளவனைப்போல நிருத்தியம் செய்யும் இந்த கிருதாந்தன் நியதி (கருமாநுசாரமாக அவசியம் பயனைத்தருகின்ற மரியாதை) வடிவத்தனது பிரியபத்நியோடு நாடோறும் மிகப்பிரியத்தைச் செய்கின்றான். ஆதிசேடனும் சந்திரகலையும் மூன்று வகையான கங்கையின் பிரவாகமுமாகிய இவைகள் காலனது மூவுலகமென்னும் மார்பில் உபவீதம் அபவீதம் (இடது தோளிலும் வலது தோளிலுமாக) எஞ்ஞோபவீதம் போலப் பிரகாசிக்கின்றன.

பிராஹ்மணரே! சூரிய சந்திர ரிருவரும் இவர்கரத்தில் பொன்கங்கணம் போன்றிருக்கின்றார்கள், மகாமேரு பர்வதம் இவர்கரதலத்தில் தாமரை புஷ்பம் போன்றிருக்கின்றது. நக்ஷத்திர கணங்களாகிய விசித்திரபிந்துக்களையுடைவனும், புஷ்கரம் ஆவர்த்த மென்னும் பெயருள்ள பிரளய காளமேகங்கள், இவனுடுத்தும் வஸ்திரங்களின் கரைகளாம். இவனரையிலுள்ள வஸ்திரம் சமுத்திரமாம். மேல் வஸ்திரம் ஆகாயமாம். இத்தன்மைய வடிவந்தாங்கிய காபாலிகன் முன்பாக நியதிவடிவ இவனது பிரிய பத்தினியானவள் ஜீவவடிவ சபையிலுள்ளவர்களின் போகங்களுக்கு அநுகூலமான காரியங்களை ஆரம்பம் செய்து எப்பொழுதும் நிருத்தியஞ் செய்கின்றாள்.

இவளே மகாகாலவடிவ காளியாவள். இவள் வடிவம் மகாபயங்கர முள்ளது. காலவடிவ ருத்திரனுக்கு அபின்ன வடிவக் காளியாயிருக்கின்றாள். இவள் எல்லோரையும் குடித்துவிடுகிறாள். பிராணிவடிவ திருஷ்டாவின் உற்பத்தி நாசங்களில் அதிக சஞ்சலமுள்ள ஜகத்தென்னும் மண்டபத்தில் நிருத்தியத்தினாற் சலித்துக்கொண்டிருக்கும், தடுக்கப்படாத கிரியாசக்தியோடு கூடிய அந்த நியதிதேவிக்கு, இடையிலுள்ள தேவலோக முதலான வரிசைகள் உத்தமமான ஆபரணங்களாம். பாதாளம்வரையில் பரவியுள்ள இருளோடு கூடிய ஆகாயம் அவளது கேசங்களாம். அவளது பாதாளவடிவப் பாதங்களில் ரோதனத்தி(அழுகையி)ன் கோலாகலங்களோடு கூடிய சப்தம் நிரைந்த பாபமென்னுங் கயிற்றிற் கோர்க்கப்பட்ட நரகவடிவச் சதங்கைகள் விளங்குகின்றன.

இவள் ஜீவர்களின் கருமவடிவச் சுகந்தத்தை வெளிப்படுத்தும் பொருட்டுக் கிரியைவடிவத் தோழிகள் ஏற்படுத்திய சித்திரகுப்த னென்னுங்கஸ்தூரியை இயமவடிவ நெற்றியில்திலதமாக வணிகின்றாள். கற்பாந்தத்தில் காலனுடைய முகம், புருவம், விலாஸத்தோடு கூடிய கண்களினால் சூசனை செய்யப்படும் அபிப்பிராயமறிந்து அதிக விசனத்தோடு இந்த நியதி தேவியானவள் பருவதம் போன்ற பெருஞ்சப்தமிட்டு ஆடுகிறாள். பின்புறம் கௌமார அவஸ்தையில் மாரணமடையும் நீண்டமயிற் றேகையினைத் தரித்திருக்கின்றாள், மூன்று நேத்திரங்களென்னுந் துளைகளைப்படைத்திருக்கின்றாள். அதிபயங்கரமான சப்தத்தைச் செய்கின்றாள். நீண்டசடைகளில் தரித்துள்ள சந்திரன், மகாதேவர் சிரத்திற்றுங்கிய சந்திரப்பிரபையையொத்திருக்கின்றது. மங்

தார புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பார்வதிதேவியாரது கூந்தலென்னுஞ் சாமரைகளால் வீசப்படுகிறாள். பருவதாகாரமான பருத்தவயிற்றையும் ஆயிரம் துளைகளோடுகூடிய அதாவது இந்திரனது சரீரமாகிய கபாலத்தையும் தாங்கியிருக்கின்றாள். வற்றல் சரீரத்தை கட்வாங்கமாகத் தரித்திருக்கின்றாள். ஆகாயம் வரையில் வியாபித்திருக்கின்றாள். சகலரையும் சம்ஹாரம் செய்து அநேக சிரங்களைக் கோத்துத் தாமரைமாலையெனச் சிரத்திற்றரிக்கின்றாள். மகாகற்பாந்தத்தில் தாண்டவ நிருத்தியம் செய்கின்றாள். பிரமத்தம், புஷ்கரம், ஆவர்த்த மென்னும் பிரளயகாலத்துண்டாகும் மேகங்களாகிய இவளுடையடமருகத்தி லுண்டாகும் ஒலியைக்கண்டு தும்புரு முதலானவர்களும் பின்னிடுகிறார்கள்.

இத்தன்மைய பைரவியும் பைரவரும் எப்படி யிருக்கின்றார்களெனின், எவர்களுக்கு வடிவம் பெரிதாயிருக்கிறதோ, ஆகாயம் சிரமோ, பாதாளம் சரணமோ, பத்துத்திசைகளுந் தோள்களோ, சப்த சமுத்திரங்கள் கங்கணங்களோ, அதனிடத் துள்ள ஜீவர்கள் போஜனபதார்த்தங்களோ, ஹிமாலயமும் மகாமேருவும் குண்டலங்களோ, சந்திர சூரியர்கள் அசையுங் குண்டலங்களோ, சகல நக்ஷத்திரக் கூட்டங்கள் சிரத்திலுள்ள பிந்துக்களோ. எவர்களது கையில் திரிசூலம், முசலம், பாலா, பர்ச்சி, பட்டா, முற்கர முதலான சஸ்திரங்களிருக் கின்றனவோ, எவர்கள் தங்களது கையில் தந்திரி வடிவப் பாசத்தினைத் தரித்து அதனுல் ஜீவர்களைக் கொல்லுகின்றார்களோ அந்தக்காலனும் காளிகாதேவியும் இத்தன்மைய ராகின்றனர் மேலும் காளிகா

தேவியானவள் சர்வஜீவர்களையும் விழுங்கி மகாபைரவ ராகிய ருத்திரர்முன்னாடுகிறாள். அட்ட அட்ட வென்னும் சப்தத்தினையுஞ் செய்கிறாள். ஜீவர்களைப் புசித்து அவர்கள் எலும்பைக் கழுத்தில் மாலையாகத் தரித்துப் பைரவர் முன் னிருத்தியஞ் செய்கிறாள். மேலும் இந்தபைரவருக்கு முன்னின்று இவரை யெதிர்க்கும் சாமர்த்திய மெவருக்கு மில்லை. இத்தன்மைய பைரவர் எங்கு பாலை நிலமாக விருக்கின்றதோ அங்கு ஒரு கணத்தில் அதனைப் பட்டணமாக்குவார்; பட்டணத்தை ஒருகணத்தில் பாலைநிலமாக்குவார். இக்காரணத்தால் இவருக்குத் தைவமென்று சொல்லுகிறார்கள். அதாவது ஊழென்றும் கருமமென்றும் கிருதாந்தனென்றும் சொல்லுகிறார்கள். உற்பத்தி நாசமுடைய பெரிய பெரிய பதார்த்தங்களையும் நிலைக்கச் செய்யாத காரணத்தால் இவருக்குக் கிருதாந்தனென்று பெயராம். நித்திய வடிவமிது வென்று எதை ஆதியில் தரித்திருக்கின்றாரோ அதுவே கர்த்தா கர்ம வடிவமாம். ஏனெனின் எதன் பரிணாமம் (திரிபு) அநித்திய வடிவமோ அதற்கே கருமமென்று பெயராம். அவர் அபாவவடிவ வில்லேந்தி அதில் ராகத் துவேஷங்களென்னும் அம்பைத் தொடுத்து அதனால் ஏழமை யடையச் செய்துநாசமாக்குகிறார். அவருக்கு உற்பத்தி நாசம் செய்வதில் ஒருபிரயத்தினமு மில்லை. இவருக்கிது விளையாட்டுப் போலிருக்கிறது. எப்படிக் குழந்தைகள் மண்ணினால் சேனைகளை யுண்டாக்கிப் பிறகு அதை நாசமாக்குகின்றனவோ அப்படி காலனுக்கு உண்டாக்குவதிலும் அழிப்பதிலும் ஒரு பிரயத்தனமுமில்லை.

முநீசுவரரே! காலனென்னும் வேடனானவன் கிரியை வடிவ வலையை விரித்திருக்கின்றான். அதனிடத்து ஜீவர்க ளென்னும் பக்ஷிகள் சிக்கிக்கொள்ளுகின்றன; அதிற் சிக்கிக் கொள்வதால் ஒருபோதும் சாந்தியை யடைகிறதில்லை.

முநீசுவரரே! இச்சர்வபதார்த்தங்களும் நாசவடிவா யிருக்கின்றது இதில் யான் எதை ஆசிரயிப்பேன்? ஏதாவது ஒன்றினால் சுகமடைவோமென்றால் ஸ்தாவரஜங்கமமாகிய சர் வஜகத்தும் காலன் வாயிலிருக்கின்றன. இவைகளெல்லாம் நாசவடிவ மென்றும் தோற்றுகின்றன. ஆனதால் நிர்ப்பய (பயமின்றிய)பத மேதுவோ அதை அடியேனுக் கறிவித்தல் வேண்டும்.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினா லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
காலநிருத்தியவிலாஸ வர்ணனமேன்னும்
இருபதாவது சர்க்கம் முடிந்தது.



## காலவிலாஸ வர்ணனம்.

அவதாரிகை:—எதனால் வைராக்கியாதிகளுண்டாகுமோ அந்தக்காலாதிகளின் பாதந்திரத்தன்மையினால் அநேக தோஷங்களுக்குக் காரணமாகிய சம்சாரத்தின் துர்த்தசையை இதிற் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினார்:—முனீசுவரரே! இங்குத் தோற்றுகின்றனவாகிய எவ்வளவு பதார்த்தங்களுண்டோ அவை யாவும் நாசவடிவினவேயாம். ஆனதால் எதை இச்சிப்பேன்? எதை ஆசிரயிப்பேன்? இவைகளை இச்சிப்பது மூடத்தனம். அஞ்ஞானிகளாற் செய்யப்படும் செய்கைகள் யாவும் துக்கத்திற்கு நிமித்தமாம். அவன் ஜீவிப்பதில் ஒரு அர்த்தமும் சித்திக்கிறதில்லை ஏனெனின் பாலியாவஸ்தை யுண்டானபோது விசாரம் ஒன்று முண்டாகிறதில்லை. மூடத்தன்மையே யிருக்கிறது. எப்பொழுது யௌவனாவஸ்தை யுண்டாகின்றதோ அப்பொழுதும் மூடத்தன்மையால் விஷயங்களைப் புசிக்கின்றான். அபிமான மோகாதிகளால் மோகிக்கின்றான். அதிலும் விசாரமிருக்கிறதில்லை; ஸ்திரமாகிறது மில்லை; மீண்டும் தீனனுக்குத் தீனனாகி (கொஞ்சமும் சக்தியற்றவனாகி) விஷயங்களில் ஆசையைக் கொள்ளுகின்றான்; சாந்தியடைகிறதில்லை.

முனீசுவரரே! ஆயுளோமிகச் சஞ்சலத்தோடு கூடியது. மிருத்யுவோ சமீபித்திருக்கிறான். அவன் அதற்கநிய மாகிறதில்லை.

முநீசுவரரே! எவ்வளவு போகமுண்டோ, அவ்வள வும் சம்சாரத்தின் ரோகமுமாம். எதை சம்பத்தென்று கருதுகிருனே அதுவே ஆபத்தாம். எதைச் சத்தியமென் றெண்ணுகின்ருனே, அது அசத்தியவடிவமேயாம், எந்த ஸ்திரீ புத்திராதிகளை சிநேகமாக எண்ணுகின்ருனே அவை யாவும் இவனது பந்தத்திற்குக் கர்த்தாக்களாம். இந்திரிய மெவைவையோ அவை சத்துரு வடிவங்களாம். சப்தாதி விஷ யங்களோடு கூடிய பிரபஞ்ச ரசனைகள் யாவும் காட்டிற்றிரி யும் மான்களுக்குக் காணப்படும் கானல்ஜல மெனத்தக்க வாம். இந்தத்தேகம் விகாரவடிவமானதாம், மேலும் மன மோ மகாசஞ்சல வடிவினதாயும், எப்பொழுதும் சாந்த மின்றிய வடிவினதாயும், துக்கத்தைத்தருவனவாயு மிருக் கின்றது. அகங்காரமென்பது எதுவோ அதுவும் இகழத் தக்கதாம். இதனுலும் சுவாதீனமற்ற தன்மை ஏற்படுகின் றது. இதனல் இவனுக்கு எவ்வளவு பதார்த்தங்கள் சுகத்தைத் தருவனவாகத் தோற்றுகின்றனவோ அவையெல் லாம் துக்கபயனைத் தருவனவாம். அதனுல் அவை இவனுக்கு ஒருபோதும் சாந்தியைத் தருவனவாகா. அகங்காரத்தோடு கூடிய அந்தக்கரணவிருத்தி ஆத்மசொரூப ஞானத்திற்கு விரோதியானதால் கேவலம் களங்கமுடையதாகவே யிருக் கின்றது. சொரூபத்தின் திடத்தன்மையில் சூநியமடைந்த புத்திவிருத்தி மிகக்குறைந்து விட்டது. மனதின் விலாஸங்க ளெல்லாம் ஸ்திரியின் வசமாயின, சகல இச்சைகளும் விஷ யங்களால் சோபிக்கின்றன, ஆத்மசமத்கார (சாமர்த்திய) மானது நாசமாகின்றது, ஸ்த்ரீகள் தோஷங்களின் துவஜம் (கொடிகள்) ஆகின்ருர்கள், சகலரும் அநுராகம் (இரக்கம்)

இன்றி யிருக்கிறார்கள், ஆத்மவஸ்துவை அநாத்மவஸ்துவாக வறிகின்றான். சித்தத்தை அகங்காரத்திற் பொருத்துகின்றான்; சர்வபாவ (உண்மை) பதார்த்தங்களும் நாசமுடையனவாம். அந்தப்பதார்த்தங்களுக் குள்ளீடாகவிருக்கும் அதிஷ்டானவடிவ ஆத்மா அறியப்படுகிறதில்லை.

ஓ சாதுவே! புத்தியானது அத்தியந்த வியசனமடைந்து கேவலசந்தாப மடைகின்றது; சம்சாரத்தில் இச்சையே அதிகமாகின்றது; வைராக்கிய முண்டாகிறதில்லை; ரஜோகுணத்தினால் விவேகதிருஷ்டி நாசமாகின்றது, தமோகுணம் விருத்தியாகின்றது, சத்துவகுணம் பிராப்தமாகிறதில்லை; தத்துவஞானமானது வெகு தூரத்திருக்கின்றது; ஜீவித்தலோ நிலையில்லாதிருக்கின்றது; மிருத்தியு சமீபத்திருக்கின்றான், தைரியம்முற்றும் கெடுகின்றன. அற்ப பதார்த்தங்களில் அதிகப் பிரியமுண்டாகின்றன; புத்தியானது மூடத்தன்மையால் மலினம(அழுக்க)டைகின்றது, சரீரம் கீழ்விழுவதாக் விருக்கின்றது, விருத்தாவஸ்தை யானது சரீரத்தைத் தகித்துக்கொண்டே யிருக்கின்றது, பாபமானது பிரபலமாகின்றது, யௌவனவஸ்தை மிகப்பிரயத்தனத்தால் கழிகின்றது, சாதுசங்கம் வெகுதூரத்திருக்கின்றது, ஒருகதியுமில்லை, எங்கும் சத்தியத்தன்மை யென்பதே கிடையாது, மனமானது மோகமடைந்தவன் போன்றிருக்கின்றது, ஆத்மஞானசுகம் வெகுதூரத்திருக்கின்றது; ஹிருதயத்தில் நல்லதயை யென்பது ஒருநாளு முண்டாகிறதில்லை; நீசத்தன்மை தூரமிருந்து சமீபம் வருகின்றது; துர்ஜனசங்கம் மிகச்சுலபமாகவும் சர்ஜனசங்கம் கிடைத்தற்கரியது மாகின்றன, ஆனதால் இதில் எனக்கு இச்சையில்லை. இது பார்ப்ப

தற்கு மாத்திரம் மிக அழகாகத்தோற்றினாலும், இதில் சுக மென்பது சிறிதுமில்லை. இப்பதார்த்தங்கள் நிலையுடையன வல்ல, எப்படி சமுத்திரத்தில் பலவகையாகத் தோற்றும் அலைகள்யாவும் வடவாமுகாக்கினியால் நாசமாகின்றனவோ, அப்படி இப்பதார்த்தங்களும் நாசமாகின்றன. ஆதலால் நான் என்னுடைய ஆயுளினிடத்தில் எப்படி ஆசை வைப்பேன்?

முனீசுவரரே! மிகப்பெரிதாகத் தோற்றுகின்ற நான்கு சமுத்திரங்களும் வற்றிப்போகின்றன. மகாமேருமுதலிய பெரிய பதார்த்தங்களும் நக்ஷத்திரகணங்கள் யாவும் நாச மடைகின்றனவென்றால் நம்போன்றவர்களுக்கு என்ன வார் த்தைஇருக்கின்றது. மிகப்பெரிய தைபித்திய சூரர்களும், இராக்ஷதர்களும் தோன்றி நாசமானார்க ளென்றால் நம்போன்றவர்களுக்கு என்னவார்த்தை இருக்கின்றது; தேவர் சித்தர் கந்தர்வர் எனக்காணப்பட்ட யாவர்களும் நாசமடைந்திருக்கிறார்கள். அவர்களது பெயருமில்லை யென் றால் நம்போன்றவர்களுக்கு என்னவார்த்தை இருக்கின்றது? பிருதிவி, ஜலம், தாகசக்தியுள்ள அக்னி, வாயுவு முதலியவை களின் சத்தியத்தன்மை யாகிய இவர்களது வீரியம்யாவும் நாசமாகுமென்றால் நம்போன்றவர்களுக்கு என்னவார்த்தை! எமன் குபேரன், வருணன் இந்திரன் வாயுமுதலிய மகாதேஜ ஸுள்ளவர்களெல்லோரும் நாசமடைவார்களென்றால் நம் போன்றவர்களுக்கு என்னவார்த்தை? திருஷ்டிக்குப் புலப் படுகின்ற நக்ஷத்திரமண்டலங்கள் யாவும் கீழ்விழுந்து விடு கின்றன. எப்படி உலர்ந்த சருகுகள் வாயுவினால் விருக்ஷத்தி னின்றும் கீழேவிழுகின்றனவோ அப்படி நக்ஷத்திரங்க ளுதிர்கிறன வென்றால் நம்போன்றவர்களுக்கு என்ன வார்த்தை?

முநீசுவாரே! நிலையுடையதாகத் தோற்றும் அருவரும் நிலைபற்றவர் ஆவர். திருஷ்டிக்குப் புலப்படுகின்ற அமிர்த மண்டலத்தினையுடைய சந்திரனும், அகண்டமண்டல ப்ரகாசத்தோடு கூடிய சூரியனும் நாசமடையவர்களென்றால் நம்போன்றவர்களுக்கு என்ன வார்த்தை! மற்றவர்களைப் பற்றியும் என்ன வார்த்தை! இந்த ஜகத்திற்கு அதிஷ்டானமாயுள்ள மஹா ஈசுவரனும் அபாவ(நாச)மாகின்றான், பரமேட்டியாகிய பிரஹ்மாவும் நாசமாகின்றான், ஹரியாகிய விஷ்ணுவும் தோல்வியடைவான், மகாபயிரவ வடிவமானருத்திரரும் சூனியமாவாரென்றால் நம்போன்றவர்களுக்கு என்ன வார்த்தையிருக்கின்றது! இந்த மகாகொடிய ஆசாரமுள்ளகாலன் யௌவனசரீரத்தை விருத்தமாக்கிச் சர்வப்பிராணிகளையும் சர்ப்பம் வாயுவைப் பக்ஷிப்பதுபோல சர்வத்தையும் பக்ஷிக்கின்றான். இவனும் துண்டந் துண்டமாக நாசத்தையடைவான்; அவனது ஸ்திரீயாகிய நியதியும் தான் ஸ்த்ரீயாகின்ற காரணத்தினால் சபலசுபாவமுடைய இவள் தனது காரியத்தில் தற்பரமாகிச் சமாதி நிஷ்டர்களான மகாத்மாக்களது தைரியத்தையும் நஷ்டமாக்கி அநீதித்தன்மையை யடைவாள்; சர்வத்துக்கும் ஆதாரமாகிய ஆகாசமும் நாசமடையுமென்றால் நம்போன்றவர்களுக்கு என்னவார்த்தை யிருக்கின்றது! அர்த்தாகார(பொருள்வடிவ)மாகச் சித்தித்துள்ள ஜகத்துமுழுவதும் நாசமடையும்; எதுவும் ஸ்திரமாகவிராதென்றால் நான் எதை ஆசரிப்பேன்? எதில் நான் ஆசைவைப்பேன்! ஜகமுழுவதும் பிரம(மயக்க)மாத்திரமாம். அஞ்ஞானிக்கு இதில் ஆசையுண்டாகிறது; எனக்கு இல்லை இந்த ஜகத்தின்

மயக்கம் எப்படி யுண்டானதென்பதற்கும், சம்சாரத்தில் துக்கமனுபவிப்பதற்கும் அகங்காரமே காரணமென்பதை யானறிகிறேன்.

முநீசுவரரே! இவனுக்குப் பரமசத்துரு அகங்காரமாம். இதனாலேயே இவனுழலுகின்றான். எப்படி கயிற்றிற்கட்டிய காற்றாடியா(பட்டமா)னது சிலநேரம் மேலும் சிலநேரங்கீழுமாக அலைந்து நிலைபெறுகிறதில்லையோ, அப்படி ஜீவர்களும் அகங்காரத்தினால் சிலகாலம் மேலும் சிலகாலம் கீழுமாகச் செல்லுகின்றார்கள். ஒருபோதும் ஸ்திரமாகின்றார்களில்லை. எப்படி அசுவங்கள் பூட்டிய இரதத்தின் மீதேறிச் சூரியன் ஆகாயமார்க்கத்தில் பிரமிக்(சஞ்சரிக்)கின்றானோ அப்படி இந்தச் சீவனும் பிரமிக்கின்றான்; ஒருபோதும் ஸ்திரமாகிறதில்லை.

முநீசுவரரே! இச்சீவன் பரமார்த்த சத்திய ஸ்வரூபத்தை மறந்தவனாய் உழலுகின்றான். அஞ்ஞானத்தினால் சம்சாரத்தில் ஆசைவைக்கின்றான். போகங்களைச் சுகவடிவமென்றெண்ணி அதில் ஆசையினைச்செய்கின்றான். மேலும் எதைச் சுகவடிவமாகக் கருதுகின்றானோ அது வியாதி போன்றதாம். எப்படி விஷம்நிறைந்த சர்ப்பமானது ஜீவர்களை நாசஞ் செய்வதாகின்றதோ அப்படி எவைகளைச் சத்தியமாகக்கருதுகிறானோ அவைகள் அசத்தியமாகவும் காலன் வாயிலகப்பட்டனவாயு மிருக்கின்றன.

முநீசுவரரே! விசாரமில்லாது தனது நாசத்தைத் தானே தேடிக்கொள்ளுகிறான். ஏனெனின், இவனுக்கு க்ஷேமமுண்டாக்குவது போதமாம் (ஞானமாம்) அந்தச் சத்தியவிசார போத(ஞான)த்தைச் சரணடைந்தால் இவனுக்கு

மங்கலமுண்டாகும். பதார்த்தங்கள் ஒன்றும் ஸ்திரமுடையனவல்ல இவற்றினைச் சத்தியமெனக் கருதுவது துக்கத்தின் பொருட்டேயாம்.

முநீசுவரரே! எப்பொழுது ஆசை உண்டாகின்றதோ அப்பொழுது அது ஆநந்தத்தையும் தைரியத்தையும் நாசமாக்குகின்றது. ஆனதால் எனக்கு எதனால் ஜகத்பிரமம் (ஜகத்தில் சத்தியபுத்தியைச் செய்யும் மயக்கம்) விடுபட்டு அவிநாச(நாசமின்றிய)பதப்பிராப்தி யுண்டாகுமோ அந்த உபாயத்தைச் சொல்லும். சர்வஜீவர்களும் மோகவசப்பட்டுக் கொடிய ஆசை யென்னும் கயிற்றிற் சட்டப்பட்டுத் துன்பமடையும்* மானைப்போல ஜனனவடிவ காட்டில் அகப்பட்டு நாசமடைகின்றார்கள். இந்த ஜகத்தில் ஜன்மங்களின் பரம்பரையில் இச்சைவைத்து நிஷித்தமான துஷ்கர்மவாயிலால் சம்சாரத்தில் ஆயுளைப்போக்குகின்றார்கள், ஆகாயவிருக்ஷத்திலுள்ள இலைகளைப்போன்ற இந்தப் பாசத்திற் கட்டப்பட்டு சுகதுக்கவடிவப் பயனை நம்போன்ற விசாரமுள்ளவர்களும் அறிகின்றதில்லை. இன்றுமகோற்சவம்; இன்று மனோகரமான புதிய இருதுவின் ஆரம்பம்; இன்று இந்த தேசயாத்திரை; இவர்கள் என் பந்துக்கள்; இது நல்ல சுகம்; இன்று இந்த உத்தம ஸ்திரீயாதிகளின் போக மிருக்கின்றது என்று இந்த

---

*காட்டில் மானைப் பிடித்தற்குப்பரும் தூண்டி முள்ளில் குமிளம் பழத்தைக்கோர்த்துச்சிறிய கட்டைகள் முடிந்துள்ள முழக்கயிற்றிற் கட்டிவைப்பார்கள். அப்பழத்தின் விருப்பத்தினால் மான் அதனை விழுங்கவே அதிலுள்ள தூண்டிவில் அதுமாட்டிக்கொள்ளும். மேலும் அதைநிவர்த்திக்கவெண்ணி கட்டைகட்டிய கயிற்றை அதுகாலாவிழுக்கும்தோறும் அம்முள்ளு அதிகமாய்த் தொண்டையில் பதிவதால் துன்பமடைந்துநாசமடையும்.

விதமாகச் சத்விஷயத்திற்குப் பிரதிகூலமா(கெடுதலா)ன பல விதக் கற்பனைகளைச்செய்வதால் சஞ்சலபுத்தியுடைய சுகுமாரர்களாகிய இச்சீவர்கள் இவ்வாறு நாசமடைகின்றனர். பரமார்த்தத்திற் குரிய ஒரு சாதனத்தையும் சம்பாதிக்கின்றதில்லை.

இந்தப் பிரமவடிவ ஜகத்தில் எனக் கிச்சை யில்லை. ஆதலால் தமது இச்சையின்படியே செய்யும். ஆனால் இவனுக்கு வரும் சுகதுக்கங்கள் வரவே செய்யும். அவற்றினின்றும் தப்பித்துக்கொள்ள முடியாது. மலைக்குகைகளி லிருப்பினும் அரைக்குள்ளிருப்பினும் அனுபவிக்கக்கூடியவைகள் ஒரு நாளும் பொய்த்துப்போகா. இதன்பொருட்டு எத்தனம் செய்வது சுத்த மூடத்தனமே!

ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்

தேவதூதனாற் சொல்லப்படும்

மோக்ஷோபாயமாகிய

வைராக்கியப்பிரகரணத்தில்

காலவிலாஸவர்ணன மென்னும்

இருபத்தோன்றவது சர்க்கம் முடிந்தது.



## சர்வபதார்த்தாபாவ வர்ணனம்.

அவதாரிகை:—மோக்ஷத்திற்கு விரோதமாயுள்ள முற்கூறப்பட்ட பதார்த்தங்களின் தோஷாதிகள் வைராக்கியப்பிராப்தியின் பொருட்டு இங்கு விஸ்தாரமாகக் காட்டப்படுகின்றன.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினர்:— ஓ தந்தையே! இங்கு எந்த அழகான தரிசனமாத்திரத்தில் அழகாகவும் உண்மையி லழகின்றியதாகவுமுள்ள இந்த ஜகத்தில் நானா பதார்த்தங்கள் காணப்படுகின்றனவோ அவைகளெல்லாம் சித்தவிசிராந்திக்குக் காரணமாகாத நாசவடிவமேயாம். இவைகளில் மூடன் ஆசைவைக்கின்றான். இவையோ மனதின் கற்பனையா லுண்டாகின்றன. இவற்றில் எதை இச்சிப்பேன்!

முனீசுவரரே! அஞ்ஞானிகளாயுள்ள ஜீவர்களின் ஜீவனம் வீணாம். ஏனெனின், அவர்களது ஜீவனத்தால் ஒரு பொருளும சித்திக்கின்றதில்லை. எப்பொழுது கற்பனை மாத்திர விளையாட்டோடு கூடிய குமாரப்பருவம் வருகின்றதோ அப்பொழுது இவன் மூடபுத்தியோடிருக்கின்றான். அதில் விசார மொன்றுமே யில்லை. அது கழிந்தபின் மனமென்னும் மான் ஸ்திரீவடிவ புதருக்குள் சிக்கிக்கொள்ளும் யௌவனவஸ்தை வந்தபோது இவனுக்கு காமக்குரோதாதி விகாரங்களுண்டாகின்றன. அதனாலும் சதா அமிழ்த்தப்படுபவனாகின்றான். எப்படி வலையிலகப்பட்டு பக்ஷிகள் ஆகாயத்திற் பறப்பதற்குச் சக்தியற்றிருக்கின்றனவோ அப்படிக்

காமக்குரோதாதிகளால் அமிழ்த்தப்பட்டதால் விசாரமார்க்கத்தை காணுவதிற் சக்தியற்றிருக்கின்றான். எப்பொழுது விருத்தாவஸ்தை வருகின்றதோ அப்பொழுது சரீரம் தளர்வுற்ற தன்மை யடைந்திருப்பதால் பரமபுருஷார்த்த சாதனமின்றிய வனாக இவ்வுலகில் மிகத் தீனனாகின்றான். மீண்டும் சரீரத்தையும் விடுகின்றான். எப்படித் தாமரைமலரில் பனிபெய்தபோது வண்டுகள் அதை விட்டுச் செல்லுகின்றனவோ அப்படிச் சரீரவடிவத் தாமரையை கிழத்தனம் பற்றியபோது ஜீவவடிவ வண்டு அதை நெகிழவிட்டுச் செல்லுகின்றது. அப்பொழுது பலவித சமாரம்பங்களோடு கூடிய சம்சார மென்னும் தடாகம வற்றிப்போகின்றது.

முநீசுவரரே! இச்சரீரத்திற்கு எதுவரையில் ஜராவஸ்தை வரவில்லையோ, அதுவரையில் அது அழகாக விருக்கின்றது. எப்படிச் சந்திரபிரகாசமானது இராகுவென்னும் தைத்தியன் அதனை மறைக்காதவரையில் விளங்குவதாகின்றதோ எப்பொழுது இராகுவாகும் தைத்தியன் அதனை மறைக்கும்பொழுது பிரகாசிக்கிற தில்லையோ, அப்படி ஜராவஸ்தை (கிழத்தனம்) வரவே யௌவனவஸ்தை சென்றுவிடுகின்றது.

முநீசுவரரே! ஜரைவரவே சரீரம் தளர்வடைகின்றது; ஆசை வளர்கின்றது. எந்தப் பதார்த்தத்தில் ஆசைவைக்கின்றானோ அதுவும் துக்கவடிவாயிருக்கின்றது. ஜீவர்களுக்கு இந்தச் சரீரவடிவக் கொடிகள் கிழத்தன்மைக்குக் காரணமாகவும் அதுஅதிக வெள்ளைப் புஷ்பங்களின் பாரங்களினால் எவ்வளவிற் கெவ்வளவு விர்த்திபாகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு காலனுக்குப்பிரியம் அதில் வளர்கின்றது. ஆசையால் இவனும் துக்கமடைகின்றான்.

முனீசுவரரே! தோலாலமைக்கப்பெற்ற சரீரமென்னும் கப்பல் சம்சாரவடிவ சமுத்திரத்திருக்கின்றது. அது இராகத்துவேஷ வடிவ மச்சங்களால் சிலகாலம் மேலும் சில காலம் கீழும் அலைக்கப்படுகிறது. இந்திரியங்களாகிய ஐந்து முதலைகளும் இதை அமிழ்த்திவிடுகின்றன. ஒரு போதும் நிலைபெறச் செய்கிறதில்லை.

முனீசுவரரே! காமவடிவ விருக்ஷத்தில் ஆசை யென்னுங் கொடிகள் படர்ந்திருக்கின்றன. அதை மனவடிவ வானரம் சதா அசைத்துக்கொண்டே யிருக்கின்றது. அதனால் ஒரு பயனும் அடையப்படுகிறதில்லை. விபத்துக்களில் சோகமோகமின்றி சம்பத்துக்களில் கருவமடையாத காரண த்தினால், அழகான ஸ்திரிகளால் தூஷிக்கப்படாத அந்தக் கரணமுள்ள மகாத்மா இச்சமயம் கிடைப்பது அரிதா யிருக்கின்றது.

முனீசுவரரே! ஆசையென்னும் பெரிய நதியில் இராகத்துவேஷ மென்னும் பெரிய மீன்கள் இருக்கின்றன. ஜீவர்கள் அந்நதியில் வீழ்ந்து அவற்றால் பீடிக்கப்பெற்று துக்கமடைகின்றார்கள். எந்தச் சம்சாரத்தை இவன் இச்சிக்கின்றானோ அது நாசவடிவமேயாம்.

முனீசுவரரே! மதயானைகளையும் அசுவக்கூட்டங்களையும் சேனைகளையும் அலைகளாகப்படைத்துள்ள இரணரங்க மென்னும் சமுத்திரத்தைக் கடப்பவனையும் நான் சூரனாக மதிக்கிறதில்லை. ஆனால், சரீர இந்திரியவடிவ சமுத்திரத்தில் மனோவடிவ அலைகள் எழும்பிக்கொண்டேயிருக்கின்றன, இத்தன்மைய சமுத்திரத்தை எவன் கடக்கின்றானோ அதாவது மனதை ஜயிப்பதனால் வாசனையின்றியவனாகின்றானோ அவனையே நான் சூரனாக மதிக்கின்றேன், துன்பத்தோடு

கூடியதும் சம்சாரவடிவப்பயனைத்தராத்தும் இரமணியமான தும் ஆசையைப் போக்கிச் சித்தத்தின் சஞ்சலவிருத்தியைப் போக்குவதும் மேலும் எதன் ஆசிரயத்தால் இந்தச் சம்சாரத் தில் இவனுக்கு விச்ராந்தியுண்டாகுமோ அந்தக் கிரியைகள் எவனுக்கும் காணப்படுகிறதில்லை.

எவன் கீர்த்தியினால் ஜகத்தையும், பிரதாபத்தினால் திக்குகளி னந்தத்தையும், தனத்தினால் யாசகர்களது வீடு களையும் பூரணஞ் செய்கின்றானோ, இங்ஙனம் விநயத்தன்மை உதாரத்தன்மைகளினால் ஐசுவரியத்தை வளர்க்கின்றானோ அத்தன்மைய கண்டிக்கப்படாத நியமமுடைய மஹாத்மா இச்சம்சாரத்திற் கிட்டுவ தருமை. எந்தப் பரிணாமத்தால் (திரிபால்) துக்கமுண்டாகுமோ அத்தன்மையக் கிரியைகளை அஞ்ஞானமுடைய ஜீவர்கள் ஆரம்பிக்கின்றார்கள். எந்த பரி ணாமத்தில் சுகமிருக்கின்றதோ அதனை ஆரம்பிக்கின்ற தில்லை. காமியார்த்தமாகத் (இச்சித்ததை அடையவிரும்பி) திரிகின்றார்கள். இப்படி ஆரம்பிப்பதால் சரீரத்திற்குச் சாந்தியும் பிறகு சுகப்பிராப்தியு முண்டாகின்றதில்லை. இவ் விதமாகவே காமியத்தினால் எப்பொழுதும் தபித்துக்கொண் டிருக்கிறார்கள். அநாத்ம (ஆத்மாவிற் கந்நிமாகத் தோன் றும்) பதார்த்தங்களில் ஆசைவைப்பவன் சாந்தியை எப்படி அடைவான் ?

முனீசுவரரே ! ஆசையென்னும் பிரவாகமுள்ள பெரிய நதியின் கரையில் வைராக்கியம் சந்தோஷ மென்னும் பெரிய விருக்ஷங்களிருக்கின்றன. அவைகளோ அந்நதியின் பிரவாகத்தினால் நாசமடைகின்றன.

முனீசுவரரே ! ஆசையோ மிகச்சஞ்சல முடையதாம். அது ஒருவரையும் நிலைக்கச் செய்கிறதில்லை. மேலும் மோகமென்னும் ஒரு விருக்ஷமிருக்கின்றது. அதன் நான்கு புறத்திலும் ஸ்திரீவடிவக்கொடிகள் விஷம் நிறைந்தவைகளாகப் படர்ந்திருக்கின்றன. அதில் வசிக்கச் செல்லும் சித்தவடிவ வண்டானது அதன் பரிசமாத்திரத்தானே நாசமாகின்றது. எப்படி மயிலின் தோகை அசைந்துகொண்டே இருக்கின்றதோ அப்படி அஞ்ஞானியினது சித்தமானது சதா சஞ்சலமாகவே அசைந்துகொண்டிருக்கின்றது. அவன் பசுவிற்குச் சமமாவன். எப்படிப் பசுவானது பகலில் காட்டில் ஆகாராதிகளைத் தேடி நடந்து திரிந்து இரவில் வீட்டில் கட்டுத்துறையில் வந்து சுகப்படுகின்றதோ, அப்படி மூடர்கள் பகலில் வீட்டைவிட்டுச் சென்று வியவகாரங்களில் திரிந்து இரவில் தமதுவீட்டில் வந்து நிலைக்கின்றார்கள். இதனால் பரமார்த்தத்தின் சித்தி யொன்றும் உண்டாகின்றதில்லை. அவர்களது ஜீவனத்தை வீணாகக் கழிக்கின்றார்கள். பால்யாவஸ்தையில் சூநியமாகக் காலத்தைப் போக்குகின்றார்கள். யௌவனாவஸ்தையிலோ, காமத்தால் உன்மத்தமடைகின்றார்கள். அக்காமத்தால் சித்தவடிவ மதயானை ஸ்திரீவடிவக் குகையிற் சென்று நிலைகொள்ளுவதாகின்றது. அந்த யௌவனாவஸ்தையும் கணத்தில் நாசமாகத் தக்கதாகவே, அதற்கு மேலும் இவனை விருத்தாவஸ்தை வந்தடைகின்றது. அதனால் சரீரத்தில் இளைப்பு உண்டாகின்றது. எப்படிப் பனியினால் தாமரைகள் சோர்வடைகின்றனவோ அப்படி ஜரையினால் சரீரம் தளர்ச்சியினைப் பொருந்துகின்றது. இவ்வாறு சர்வாங்கங்களும் குறைந்தபோதிலும் ஆசை ஒன்று மாத்திரமே வளர்ந்து கொண்டிருக்கின்றது.

முநீசுவரரே! ஆகாயபுஷ்பத்தைக் கைக்கொள்ள இச்சிக்கின்ற இவன் பசுவாவன். எப்படிப் பெரிய மலை மீதேறி ஆகாயத்துள்ள புஷ்பத்தைப் பறிக்க இச்சிப்பவன் மறுதலையாகப் பெருங்குழி அல்லது விருக்ஷங்களின் மீது வீழ்கின்றானே அப்படி இச்சிவனும் மானிடவடிவ மலை மீதேறி ஆகாய புஷ்பத்தினைப்போன்ற ஜெகத்பதார்த்தங்களை யிச்சித்து நீசமாவ (தாழ்வடைவ) தோடு இராகத்துவேஷவடிவ முட்செடிகளிலும் வீழ்கின்றான்.

முநீசுவரரே! இந்த ஜகத்திலுள்ள பதார்த்தங்களெவைகளோ அவை யாவும் ஆகாய புஷ்பம்போல கேள்வி மாத்திரத்தானே நாசமுடையனவாம். இதில் ஆசை வைப்பது மூடத்தனமாம். இதுவோ சொல் மாத்திரத்தால் நிலைத்திருக்கின்றது. இதனல் (நிலையுள்ள) ஒருபொருளும் சித்திக்கிறதில்லை. ஞானிகளுக்கு இந்த விஷயபோகங்களி லிச்சையில்லை. ஏனெனின் இவர்கள் ஆத்மப்பிரகாசத்தினுல் சர்வமும் மித்தையாகக் காண்கின்றார்கள்.

முநீசுவரரே! இத்தன்மைய ஞானி கிடைப்ப தருமை. எனக்குச் சொப்பனத்திலும் இந்த ஜகத்தின் தோற்ற மேற்படவில்லை. இவ்வித விரக்தாத்மா கிட்டுவதருமை. எவர்களுக்குப் போகங்களி லிச்சையின்றியதால் எப்பொழும் பிரஹ்மம் ஸ்திதி யுடையதாகத் தோற்றுகிறதோ அவர்களுக்குச் சம்சாரத்தில் இச்சையொன்று மில்லை. ஏனெனின் இச் சம்சாரபதார்த்தங்கள் நாசவடிவமாம்.

முநீசுவரரே! எப்படி மலையை எப்பக்கத்தான் பார்ப்பினும் அது கல்லாகவே தோற்றுகின்றதோ, பிருதிவி மண்ணாகவே தோற்றுகின்றதோ, விருக்ஷம் கட்டைத்தன்மை

யால் முழுவதும் தோற்றுகின்றதோ, சமுத்திரம் ஜலவடிவாகவே தோற்றுகின்றதோ அப்படிச் சரீரம் எலும்பு மாமிசமென்பவற்றால் நிறைந்ததாகத் தோற்றுகின்றது. இச்சர்வ பதார்த்தங்களும் ஐந்துதத்துவங்களால் நிறைந்திருக்கவும் நாசவடிவமேயென்று ஞானி இதன் சொரூபத்தைப் பிரித்தறிந்து ஒன்றிலுமே இச்சைவைக்கிற தில்லை.

முனீசுவரரே ! இந்த ஜகமுழுவதும் நாசவடிவம்; பார்க்கப்பார்க்க நாசமாகின்றது. இதில் எதை ஆசிரயஞ்செய்து நான் சுகமடைவேன்! எப்பொழுது நாலாயிர யுகமாகின்றதோ அப்பொழுது பிரஹ்மாவிற் கோர் நாளாகின்றது. அந்தப் பகல் கழியவே அதே அளவினதானஇரவில் சர்வ ஜகத்திற்கும் பிரளய முண்டாகின்றது. இவ்வாறாக பிரஹ்மாவும் காலாந்தரத்தில் நாசமாகின்றார். இவ்வளவு பிரஹ்மாக்கள் நாசமடைந்தார்கள் என்ற சங்கை ஏற்படுவதற்கேயில்லை. அளவிறந்த பிரஹ்மாக்கள் நாசமானார்களென்றால் நம்போன்றவர்களைப் பற்றிச் சொல்வதற்கென்ன விருக்கிறது' நான் எந்தப் போகங்களின் வாசனையையும் கொள்ளுகிறதில்லை. ஏனெனின் சர்வமும் சலன (நிலையில்லா) வடிவம்; ஒன்றும் நிலைபெறுகிறதில்லை. யாவும் நாசவடிவம். மூடர்களே இதிலாசை வைப்பவராகின்றார்கள். அவர்களால் எனக் கொரு பிரயோஜனமு மில்லை. எப்படிக் கானலைத் தண்ணீரென்று கருதிச் சென்ற மான் சாந்தி யடைகிறதில்லையோ அப்படி மூடராகிய ஜீவர்கள் ஜகத்பதார்த்தங்களைச் சத்தியமெனக் கருதி அவற்றின் கண் ஆசைவைக்கின்றார்கள். ஆகவும்எங்கும் சாந்தியடைகிறதில்லை. ஏனெனின் சர்வமும் அசாரவடிவாம். எந்த ஸ்திரீ புத்திர களத்திராதிகளாகக் காணப்படுகிறார்

கவோ அவர்களுக்கு எதுவரையில் சரீரம் நஷ்டமாக வில்லை யோ அதுவரையிலே தோற்றமுடையவர்களாகிறார்கள். எப்பொழுது இவர்களுக்கு சரீரம் நஷ்டமாகிறதோ அப்பொழுது இவர்கள் எங்கு செல்லுகிறார்கள் எங்கு வருகிறார்கள் என்று நினைக்கவுங் கூடாததாகின்றது. எப்படி எண்ணெயுந் திரியு முள்ளபோது விளக்கு மிகப் பிரகாசமாயிருந்து அவை யில்லாததால் அணைந்துபோகஅப் பொழுது அந்தப் பிரகாசம் எங்கு சென்றதென்று சற்றும் தெரிகிறதில்லையோஅப்படித் திரியென்னும் பந்துக்களோடும் அவர்களிடத்திற்சிநேக மென்னும் எண்ணெயோடும் சரீரம் பிரகாசிக்கின்றது.எப்பொழுது சரீரவடிவ தீபப்பிரகாசம் குன்றுகின்றதோ அப்பொழுது அது எங்குச் செல்லுகின்றதென்று அறியப் படுகிறதில்லை.

முநீசுவரரே! எப்படித் தீர்த்தயாத்திரையாகச் செல் லுங்கால் அம்மார்க்கமாகத் தன்னுடன் வந்தவர்களெல்லோரும் கணநேரம் ஓர் மரத்தடியிற் றங்கிப் பிறகு வேறு வேறாகப் பிரிந்துபோகிறார்களோ அப்படி இந்த பந்துக்களின் சேர்க்கையு மிருக்கின்றது. அந்த யாத்திரையில் சந்தித்தவர்களோடு சிநேகஞ் செய்வது எப்படி மூடத்தனமோ அப்படி இவர்களோடு சிநேகஞ்செய்வதும் மூடத்தனமேயாம்.

முநீசுவரரே! ஜீவர்கள் அகந்தை மமதை யென்னும் கயிற்றாற் கட்டப்பட்டு கடியந்திரம்போல எங்கும் உழன்று திரிகிறார்கள். அவர்களுக் கொருபோதும் சாந்தியுண்டாகிறதில்லை. இவர்கள் பார்வைக்கு மாத்திரம் சேதனராகக் காணப்படுகிறார்கள். இவர்களைவிட பசுக்களும் குரங்கு

களும் சிரேஷ்டமாம். எவர்களுடைய புத்தி தேகேந்திரியாதிகளால் கட்டுப்பட்டிருக்கின்றதோ, அவற்றின்கண் பேர்க்கு வரத்தடைய தாகின்றதோ அவர்களிடத்தில் சிநேகஞ்செய்வது மூடத்தனம். அவர்களுக் காத்மபதப் பிராப்தி யுண்டாவ தருமை. எப்படிக் காற்றினுல் மரத்தினுள்ள இலைகள் உதிர்ந்து பறக்கின்றனவோ, மீண்டும் அம் மரத்தை யவை யடைவதின்றே அப்படித் தேகாதிகளாற் கட்டுப்பட்டவர்கள் ஆத்மபதத்தை யடைவது கடினமாம்.

முநீசுவரரே! எப்பொழுது இவன் ஆத்மபதத்தினின்றும் விமுகனு(வேறுபட்டவனு)கின்றுனே அப்பொழுது ஜகத்தின் பிரமத்தை(சத்தியத்தன்மையாகிய மயக்கத்தை)க் காணுகின்றுன். எப்பொழுது ஆத்மபதத்திற் சேருகின்றுனே அப்பொழு திவனுக்கு சம்சாரம் விரசமாய் (உருசியில்லாததாய்)த் தோற்றுகின்றது. இந்த ஜகத்தில் ஒரு பதார்த்தமும் நிலயுடையதல்ல. இவை யாவும் நாசமடையத்தக்கனவேயாம். ஆனதால் நான் எதில் ஆசைவைப்பேன்? எதை ஆசிரயஞ்செய்வேன்? யாவும் நாசமுடையனவாய்த் தோற்றுகின்றன! எதற்கு நாசமுண்டாகாதோ அப்பதார்த்தத்தை யெனக் கறிவியும்.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தில்
சர்வபதார்த்தாபாவ வர்ணன மேன்னும்
ஒருபத்திரண்டாவது சர்க்கம் முடிந்தது.



## ஜகத்விபாகவர்ணனம்.

அவதாரிகை:—சர்வபோஜ்ய பதார்த்தங்களிலும் உருசியின்மையை யுண்டாக்குதற் பொருட்டுப் பதார்த்தங்களின் விரோத சுவபாவங்களை யிதிற் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லுகின்றார் :— முநீசுவரரே ! எவ்வளவு ஸ்தாவர ஜங்கமமாகிய ஜகத்பதார்த்தங்கள் தோன்றுகின்றனவோ அவை யாவும் சொப்பனத்தின் சேர்க்கையைப்போல நாசவடிவமாம்; ஒன்றும் நிலையுடையனவல்ல. எது படுகுழியாகத் தோற்றினதோ அது ஜலம் நிரம்பியுள்ளதாகிறது. எது ஜலநிறைந்த சமுத்திரமாகத் தோற்றியதோ அது படுகுழியாக விருக்கின்றது. எது அழகிய பெரிய வனமாகக் காணப்பட்டதோ அது சூநியமாகத் தோற்றுகின்றது. எது சூநியமா யிருந்ததோ அது விருக்ஷங்கள் நிறைந்த வனமாகத் தோற்றுகின்றது. எங்குப் பட்டணமிருந்ததோ அங்கு பொட்டலாக ஏற்பட்டிருக்கின்றது. எது பொட்டலாக விருந்ததோ அது பட்டணமாகத் தோற்றுகின்றது. எங்குப் பள்ளமிருந்ததோ அங்கு பர்வதம் தோற்றுகின்றது. எங்குப் பர்வத மிருந்ததோ அங்குச் சமபூமி தோற்றப்படுகின்றது.

முநீசுவரரே ! இந்த விதமாகப் பதார்த்தங்கள் பார்க்கும்பொழுதே விபரீதமாகத் தோற்றுகின்றன ; ஒன்றும் ஸ்திரமுடையதல்ல. ஆனதால் நான் எதை ஆசிரயிப்பேன்? எதை அடையும்பொருட் டெத்தனஞ் செய்வேன் ? இப்

பதார்த்தங்கள் யாவும் நாசமுடையனவாம். எவர்கள் மிகுந்த ஐசுவரிய முடையவர்களாகவும், அங்கங்களில் பட்டு வஸ்திரமணிந்தும் சுகந்த பரிமளத்திரவியங்களைப் பூசியும் மிக்க அதிகாரமுடைவர்களாகவும், மிக்க வீரியவான்களாக வும், மிக்கதேஜசுள்ளவர்களாகவு மிருந்தார்களோ அவர் களும் மரணமடைந்தார் களென்றால் நம்போன்றோர்க் கென்னவார்த்தை யிருக்கின்றது? சர்வமும் நாசமாவ தென்றால் நாமும் ஒரு நாழிகை அல்லது ஒரு கணத்திற் செல்லுபவரா யிருக்கின்றோம்; ஒருவருக்கும் நிலைத்தற் றன்மை யில்லை.

முனீசுவரரே! இப்பதார்த்தங்கள் பெருஞ் சஞ்சலவடிவ மாம். இவை ஒருபோதும் ஏகரஸமாயிருக்கின்றன வில்லை. முற்கணத்தி லொன்றாகவிருந்து பிற்கணத்தில் மற்றொன்றா கின்றன. முற்கணத்தில் தரித்திரனாயிருந்தவன் பிற்கணத் தில் சம்பத்துடையவனாகின்றான்! ஒரு க்ஷணத்தில் ஜீவித் திருப்பவன் மறுகணத்தில் மரிக்கின்றான். ஒரு கணத்தில் மரித்தவன் ஜீவித்தெழுகின்றான். இச்சம்சாரத்தில் ஸ்திரத் தன்மை ஒருபோது முண்டாகிறதில்லை. ஒரு கணத்தில் ஜலநிறைந்த சமுத்திரமானது கானற்சல பூமியாகின்றது. கானற்சலபூமி சமுத்திரமாகின்றது என்றிவ்வாறாகக் கண்ட ஞானிகள் இதில் ஆசைவைப்பதில்லை.

முனீசுவரரே! இவ்வாபாசமாகிய ஜகத்து ஒருபோதும் நிலையுடையதல்ல. எப்படிக் குழந்தைகளது சித்தம் நிலை யுடையதல்லவோ அப்படி ஜகத்பதார்த்தங்கள் ஒன்றும் ஸ்திரமுடையனவல்ல. எப்படிக் கூத்தாடி ஒரு சமயம் ஒன்றாகவும் மற்றோர் சமயம் வேறாகவும் வேஷம் போடு

கிறதோ ஒரே வேஷத்தில் நிலைத்திருக்கிறதில்லையோ அப்படி. ஜகத்பதார்த்தங்களும் ஐசுவரியமும் ஒரு படித்தாயிருக்கின்றன வல்ல. சில காலம் புருஷன் ஸ்திரீயாகவும், சிலகாலம் ஸ்திரீ புருஷனாகவு மாகின்றார்கள். மனிதர் பசுக்களாகவும் பசுக்கள் மனிதர்களாகவு மாகின்றார்கள். ஸ்தாவரம் ஜங்கமமாகவும் ஜங்கமம் ஸ்தாவரமாகவு மாகின்றன. தேவர்மனிதராகவும் மனிதர்தேவராகவு மாகின்றார்கள். இவ்வண்ணம் கடியந்திரம்போல இந்த ஜகத்தாகிய ஐசுவரியம் ஸ்திரமாயிருப்பதில்லை. சில காலம் மேலும் சில காலம் கீழுமாக சதாசுழன்று கொண்டே யிருக்கின்றது. ஒரு போதும் ஸ்திரமாகிறதில்லை.

முநீசுவரரே! இந்த் திருஷ்டிக்குப் புலப்படும் பதார்த்தங்களெத்தனையுண்டோ அத்தனையும் நாசமாகத்தக்கனவேயாம்; எவ்விதத்திலும் நிலைபெறுவனவல்ல. நதியின் பிரவாகமெல்லாம் வடவாமுகாக்கினியில் லயமாவதுபோல இச்சகல பதார்த்தங்களும் அபாவ(இன்மை)வடிவ வடவாமுகாக்கினியை யடையும். மஹாபலவான்கள் நான் கானலயமடைந்தார்கள். அழகானவிடங்கள் சூனியமாயின. அழகியதடாகங்களும் சோலைகளும் அநேக புருஷர்கள் நிறைந்துள்ள விடங்களுமாகிய இவை யெல்லாம் சூனியமாயின. கானற்சல பூமிகள் பெரும் பட்டணங்களாயின. கடம் படமாகின்றது. வரம் சாபமாகின்றது ; சாபம் வரமாகின்றது. இவ்வண்ணம் விப்பிரரே! எந்த ஜகத்துத்தோற்றுகிறதோ அது சில காலம் சம்பத்து வடிவினதாகவும், சில காலம் ஆபத்து வடிவினதாகவும், மிகச் சபல வடிவாகவுமிருக்கின்றது.

முநீசுவரரே! இவ்விதமாக இவ்வெல்லா பதார்த்த ங்களும் நிலையில்லாதனவா யிருக்கின்றன. இவற்றினை விசாரியாது நான் எப்படி ஆசிரயிப்பேன்? மேலும் இவற்றின்கண் எவ்வாறு இச்சைவைப்பேன்? சர்வமும் நாச வடிவாம்! இங்குக் காணப்படுகின்ற பிரகாசத்தோடுகூடிய சூரியனும் அந்தகாரவடிவாவான். அமிருதத்தால் நிறைந் துள்ளதாகத் தோற்றுகின்ற சந்திரனும் விஷநிறைந்தவனு வான். திருஷ்டிக்குப் புலப்படுகின்ற மகாமேரு முதலான பர்வதங்களும் நாசமாகும்; சர்வபோகங்களும் நாசமாகும். அதாவது மனிதர், தேவர், யக்ஷர், இராக்ஷதர், முதலான வர்களும் நாசமாவார்கள்.

முநீசுவரரே! ஆனதால் எவர்களைப் பற்றி நானென்ன சொல்லுகிறது? ஜகத்திற் கீசுவரராயுள்ள பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரர்களும் சூநியமாவார்களென்றால் நம்போன்றவர்களைப் பற்றிக் கேட்பானேன், திருஷ்டிக்குப் புலப்படுகிற எவ்வளவு ஜகத்துண்டோ ஸ்திரீ, புத்திரன், பந்துக்கள், ஐசுவரியம், வீரியம், பலம் முதலியவற்றோடு கூடிய நாநாஜீவர்களாக எவரெவர்கள் தோற்றுகிறார்களோ அவர் களெல்லாம் நாசமாகத் தக்கவர்க ளென்றால் யான் எப் பதார்த்தத்தை யாசிரயிப்பேன்? எதை யிச்சிப்பேன்?

முநீசுவரரே! எவன் தீர்க்கதரிசியோ அவனுக்கிவ் வெல்லாப் பதார்த்தங்களிலும் விரஸம் (இச்சையின்மை) தோற்றுகின்றது. ஒருபதார்த்தங்களையும் இச்சிக்கிறதில்லை. ஏனெனின், சகலபதார்த்தங்களையும் நாசமுடையன வெனக் காண்கின்றான். தனது ஆயுளையும் மின்னலொளி போலக் காண்கின்றான். எப்படி மின்னலில் பிரகாச மிருக்

கின்றதோ அப்படிச் சரீரத்தில் ஆயுளிருக்கின்றது. எவ னுக்குத் தனதாயுளின் நிலைதெரிகிறதோ அவனுக்கொன்றி லும் இச்சையுண்டாகிறதில்லை. ஒருவனை பலிகொடுக்கும் பொருட்டுப் போஷிப்போமாயின் அவனுக்கு உண்பதிலும் உடுப்பதிலும் போகங்களைப் புசிப்பதிலும் எப்படி இச்சை யுண்டாகாதோ அப்படியே எவனுக்குத் தனது மரணம் நேரே தோற்றுகின்றதோ அவனுக்கும் ஒருபதார்த்தத்திலு மிச்சை யுண்டாகிறதில்லை. இச்சர்வபதார்த்தங்களுமே நாசவடிவ மெனின் யானெதை யாசிரத்துச் சுகியாவேன்? எப்படி ஒருவன் சமுத்திரத்துள்ள மச்சத்தை ஆசிரயித்து நான் இதன்மீதேறி இச் சமுத்திரத்தைக் கடந்து சுகியா வேன் எனத் துணிந்து சென்று அவன் தனது மூடத்தனத் தால்சமுத்திரத்தில் மூழ்கி நாசமடைவானோ அப்படி எவன் இப்பதார்த்தங்களைத் தனது சுகத்தின்பொருட்டு ஆசிரயம் செய்கின்றானோ அவன் அதனால் நாசத்தினையடைகின்றான்.

முநீசுவரரே! எவன் இந்த ஜகத்தை விசாரிக்கின்றானோ அவனுக் கிது இரமணீயமாய்த் தோற்றுகிறது. இதை இரமணிய மெனக் கருதிப் பலவகையான கருமங்களைச் செய்து பற்பலவான சங்கற்பங்களோடு ஜகத்தில் சிலகாலம் மேலும் சிலகாலம் கீழுமாக வுழலுகின்றான். எப்படித் தூசுகளானவை காற்றினால் சிலநேரம் மேலும், சிலநேரம் கீழுமாகச் செலுத்தப்பட்டு எங்கும் ஸ்திரமாகிறதில்லை யோ, அப்படிச் சீவனும் உழன்று கொண்டேயிருக்கின்றான். ஒருபோதும் ஸ்திரமாகிறதில்லை. எப்பதார்த்தங்களை இவன் இச்சிக்கின்றானோ அவைகள் காலனால் விழுங்கப்பட்டவை களாகின்றன. காட்டில்அக்கினி பற்றிக்கொள்ளும்போது அங் குள்ள கட்டைகளை முற்றிலும் எரித்துவிடுவதுபோலச்

சர்வபதார்த்தங்களும் கட்டைவடிவாம். ஜகத்து அவற்ரு லடர்ந்த காடாம். இதைக்காலனென்னும் அக்கினி பற்றி எரித்துக் கொண்டிருக்கின்ருன். எவன் இதை யறிந்தும் மீண்டும் இப்பதார்த்தங்களை யிச்சிக்கின்ருனே அவனே மிக்க மூடன். மேலும் ஆத்மவிசாரமுடையவனுக்கோ விந்த ஜகத்து பிரம(மபக்க)மாத்திரமாகத் தோற்றுகின்றது. ஆத்மவிசார மில்லாதவனுக் கிந்த ஜகத்து இரமணீயமாகத் தோற்றுகின்றது. இந்த ஜகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இது நாசமாகின்றது. சொப்பன நகர போன்ற இதில் நானெப்படி யிச்சைவைப்பேன் ? இதுவோ துக்கத்திற்குக் காரணமாம் ! எப்படி விஷங்கலந்த மிட்டாயியைப் புசித்தவன் நாசமடைவானே அப்படி விஷயங்களைப் புசிப்பவனும் நாசமடைவான்.

முனீசுவரரே ! பாலியாவஸ்தைச் சில நாளில் கழிகின்றது. அதன் பிறகு யௌவனவஸ்தையும் கழிகின்றது. மீண்டும் விருத்தாவஸ்தை வருகின்றது. அதையும் காலன் விழுங்குகின்ருன். இப்படிச் சரீரத்தில் ஒருவடிவாக ஒரு வஸ்துவும் நிலையில்லாதபோது பாஹ்ய பதார்த்தங்களை எப்படி நிலையுடையன வென்பேன் ? இந்த மனமானது கணத்தில் ஆனந்தம், கணத்திற் சோகம், கணத்திற்சாந்தம், கணத்திற் குரோதம் என்பவற்றை யடைகின்றது. இது சர்வத்திலும் கூத்தாடியைப்போலத் தனது விளையாட்டைக் காட்டுகின்றது.

இந்தப் பிரஹ்மாவானவர் இவ்விடத்திலும் பிறவிடங்களிலும் வெவ்வேறிடங்களிலும் சந்தோஷத்தை யுண்

டாக்குவனவும்சோகத்தையுண்டுபண்ணுவனவுமானமோகத்தோடு கூடிய பதார்த்தங்களை யுண்டாக்குகின்றார்; எப்படிக் குழந்தைகள் விளையாட்டில் பின்னடைகிற தில்லையோ அப்படிப் பின்னடைகிறதில்லை.

இந்தப் பிரஹ்மா தானியாதிகளைப்போல சிலவற்றை யொன்றுபடுத்தி அவற்றினின்றும் மற்றொன்றை யுண்டாக்கி மீண்டும் அதைக் கொன்று புசிக்கின்றார். பிறகு போஜனவிச்சையால் மறுபடியும் அவைகளைக் கிரமமாகச் சிருட்டிக்கின்றார். இச்சம்சாரத் துண்டாகிய ஜீவர்களைப் பகலிரவென்னும் சக்கரத்தில் உழலச்செய்கின்றார்.

இச் சம்சாரத்தில் எவ்வளவு பதார்த்தங்களுண்டோ அவைகள் யாவும் தோன்றுதலும் ஒடுங்குதலு முடையனவாம். ஜகத்தில் ஜீவர்களுக்கு ஆபத்தும் சம்பத்தும் நிலையுடையன வல்ல. அநாதிகால முதற்கொண்டே சாதுர்யமுள்ள வித்வான்களது ஆசாரங்களைக் கெடுப்பதிற் சாமார்த்தியமுள்ள இக் காலன் பெரும்பாலும் யாவரையும் ஆபத்திற் குள்ளாக்கி விளையாடுகின்றான்.

இவன் கர்மவடிவ ரசங்களினாற் பரிபாகமடைந்த மூவுலகத்துள்ள ஜீவர்களென்னும் பழங்களைச் சம்சார மென்னும் விருக்ஷத்தினின்றும் சமயமென்னும் காற்றினால் உதிரச்செய்து நாடோறும் புசிக்கின்றான். ஆதலால் இதில் விசுவாசம் வைப்பது தகுதியன்று.

ஸ்ரீ வால்மீகமகரிஷியின லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
ஜகத்விபர்யயகவர்ணனமென்னும்
இருபத்திமூன்றவது சர்க்கம் முடிந்தது.



## சர்வாந்தப்பிரதிபாதன வர்ணனம்.

அவதாரிகை:—ஸ்ரீ ராமசந்திரர் பதார்த்தங்களின் தோஷங்களினால் தனக் குண்டாகிய துன்பத்தை வெளிப்படுத்து வதும் தனக்குச் சாந்தி யுண்டாக உபதேசிக்க வேண்டு மென்னும் பிரார்த்தனையும் இதிற்கூறப்படுகின்றன.

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினர்:—முநீசுவரரே! இச் சம்சாரத்தில் போகவடிவ அக்கினி பற்றி எரிகின்றது. அதனால் எவரும் தகிக்கப்படுகின்றார்கள். ஜீவர்கள் போகங் களால் தீனமாகின்றார்கள்; எப்படிக் குளத்திலுள்ள தா மரையானது யானையி னடியால் நசுங்குகின்றதோ அப்படிப் போகத்தால் ஜீவர்கள் தீனமாகின்றார்கள். எப்படி வாயு வால் மேகம் நஷ்டமாகின்றதோ அப்படிக் காமக் குரோத துராசாரங்களால் சுபகுணங்கள் நஷ்டமாகின்றன. எப்படிக் கண்டங்கத்தரி முதலான முட்செடிகளின் யிலையிலும் காயி லும் முள்ளிருக் கின்றனவோ அப்படி விஷயவாசனை வடிவ முள்ளுகள் வந்து பொருந்துகின்றன.

முநீசுவரரே! இந்த ஜகமுழுவதும் நாசவடிவமேயாம். ஒரு பதார்த்தமும் நிலையுடையன வல்ல. வாசனைவடிவ வலையில் இந்திரியவடிவ முடிச்சு களிருக்கின்றன. அதில் ஜீவன் காலத்தினால் சிக்கிக்கொண்டு பெருந் துன்பமடை கின்றான்.

முநீசுவரரே! வாசனை யென்னும் கயிற்றில் ஜீவர் களென்னும் முத்துக்களை மனவடிவ நடனவன் (கூத்தாடி) கோர்த்து சைதன்னியவடிவ ஆத்மாவின் கழுத்தில் போடு

கின்ருன். எப்பொழுது வாசனைவடிவ கயிறு அறுகின்றதோ அப்பொழுது சகலப் பிரமையு மொழிகின்றது.

முநீசுவரரே! இவனுக்குப் போகங்களின் இச்சையே பந்தத்திற்குக் காரணமாம் இந்தப்போகவிச்சையா லுழன்று கொண்டு ஒருபோதும் சாந்தியடைகிறதில்லை. ஆனதால் எனக்கு எந்தப் போகங்களினு மிச்சையில்லை; இராஜ்ஜியத் தினு மிச்சையில்லை; கிரகத்திலும் இச்சையில்லை; வனத்தினு மிச்சையில்லை. மரிப்பதால் துக்கமென்றும் ஜீவித்தலால் சுகமென்றும் நான் மதிக்கிறதில்லை. எப்பதார்த்தங்களா லும் சுகமென்ப தில்லை. சுகமுண்டாவது ஆத்மஞான மொன்றினுலேயே மற் றெப்பதார்த்தங்களாலு முண்டா காது. எப்படிச் சூரியன் உதயமானு லன்றி அந்தகாரம் கெடுகிறதில்லையோ அப்படி ஆத்மஞான முண்டாகாவிடின் சம்சாரதுக்கம் நாசமாகிறதில்லை. ஆதலால் எனக்கு எந்த மோகம் கெடுவதால் சுகமுண்டாகுமோ அந்த உபாயத் தைத் தெரிவியுங்கள்.

முநீசுவரரே! யான் போகங்களைப் புசிக்கும் அகங் காரத்தை விட்டபோது எனக்கு போகத்தி லிச்சை எங் கிருந்துண்டாகும்?

முநீசுவரரே! இந்த விஷவடிவ சர்ப்பமானது எவ னைத் தீண்டுகின்றதோ அவன் நாசமாகின்ருன். விஷவடிவ சர்ப்பத்தாற் கடியுண்டவன் அநேக ஜன்மங்கள் வரையில் மரித்துக் கொண்டே போகின்ருன். ஆதலால் பரமதுக்கத் திற்குக் காரணம் விஷயபோகமாம். ஆனதால் விஷய வடிவம் விஷமாம்.

முநீசுவரரே! வாளால் எனது சரீரத்தைத் துண்ட துண்ட மாக்கினும் சகித்திருப்பேன்; வஜ்ஜிரத்தால் சரீ

ரத்தைச் சிதைக்கினும் சகித்துக்கொள்வேன். ஆனால் விஷயங்களைப் புசிப்பதில் எனக்கெவ்வளவும் இஷ்டமில்லை. இது எனக்கு துக்கத்தைத் தருவதாகத் தோற்றுகின்றது. ஆதலால் எதனால் எனது ஹிருதயத்துள்ள அஞ்ஞானவடிவ இருள் கெடுமோ அந்த உபாயத்தை எனக்குத் தெரிவியுங்கள் தாங்கள் தெரிவிக்கா விட்டால் எனது மார்பில் தைரியமென்னும் குன்றினைத் தரித்துக்கொண் டிருப்பேனேயன்றிபோகங்களை விரும்பேன்.

முனீசுவரரே! இங்குக் காணப்படுகின்ற சர்வ பதார்த்தங்களும் நாசவடிவமாம். எப்படி மின்னல் பிரகாசித்து மறைகின்றதோ எப்படி அஞ்சலியில் ஜலம் நிற்கமாட்டாதோ அப்படி விஷயபோகங்களும் ஆயுளும் நாசமாகின்றன. ஒரு போதும் நிலைபெறுகிறதில்லை. எப்படித் தூண்டிலில் அகப்பட்ட மச்சங்கள் துக்கமடைகின்றனவோ அப்படிப் போகங்களின் ஆசையால் ஜீவர்கள் துக்கமடைகின்றார்கள். ஆதலால் எனக் கெந்தப் பதார்த்தங்களிலு மிச்சையில்லை. எப்படிக் கானலை ஜலமெனக் கருதி தாகத்தைத் தணிக்கச் சென்றவன் ஜலத்தை யடைகிறதில்லையோ அப்படி நான் ஒரு பதார்த்தங்களையும் இச்சிக்கிற தில்லை.

ஸ்ரீ வால்மீக மஹரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்ட மகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தில்
சர்வாந்தப்பிரதிபாதன வர்ணன மேன்னும்
ஒருபத்திநான்காவது சர்க்கம் முடிந்தது.

## வைராக்கியப்பிரயோஜன வர்ணனம்.



அவதாரிகை:—ஸ்ரீ ராமசந்திரர் அநேக ஏதுக்களால் தனது முயற்சியை வெளிப்படுத்துவதும், அதன் சாந்தியின் பொருட்டு உபதேசத்தினை விரும்புவதும் இதிற் கூறப்படுகின்றன.

ஸ்ரீ ராமசந்திரர் :—முநீசுவரரே ! சம்சார மென்னும் படுகுழியிலுள்ள மோகவடிவச் சேற்றில் மூடனுடைய மனம் பதிந்து அதனால் துக்கமடைகின்றான். ஒரு போதும் சாந்தமடைகிறதில்லை. எப்பொழுது ஜராவஸ்தை வருகின்றதோ அப்பொழுது சர்வசரீரங்களும் நடுக்கமடைகின்றன. எப்படி வெகுகால விருக்ஷத்திலுள்ள இலைகள் காற்றினலசைகின்றனவோ அப்படி ஜராவஸ்தையால் சரீரம் நடுக்கமடைகின்றது. ஆசையும் அதிகரிக்கின்றது. எப்படி வேப்பமரம் எவ்வளவிற் கெவ்வளவு விருத்தியடைகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு அதில் கைப்பே மிஞ்சுவது போல இவனுக்கு ஆசைவளருகின்றது.

முநீசுவரரே ! எவன் தேகேந்திரியாதிகளைத் தனது சுகத்தின்பொருட்டு ஆசிரயமாகக் கொண்டிருக்கின்றானே அந்த மூடன் சம்சாரவடிவ இருண்ட பாழுங் கிணற்றில் விழுந்து அதினின்றும் மீட்சியடைகிறதில்லை; அஞ்ஞானியின் சித்தமானது ஒருபோதும் போகங்களைத் தவிர்ந்து நிலைபெறுகிற தில்லை.

முநீசுவரரே! ஜகத்பதார்த்தங்களில் என் புத்தி மலினமடைந்திருக்கின்றது. எப்படி மாரிகாலத்தில் நதிகள் மலினமாகின்றனவோ எப்படி தைமாதத்தில் பூங்கொத்துக்கள் உலர்ந்துபோகின்றனவோ அப்படி ஜகத்பதார்த்தங்களின் அழகும் பார்க்கப் பார்க்க விரசமாகின்றது. எப்படி மூடனுக்கு ஜகத்பதார்த்தங்கள் இரமணீயமாகத் தோற்றுகின்றனவோ எப்படி ஜலம் நிறைந்த படுகுழி புல்லுகளால் மூடியிருப்பதை மான்குட்டிகள் அறியாது இரமணியமாகக் கருதி அப்புல்லுகளைத் தின்னச்சென்று அப் படுகுழியில் விழுகின்றனவோ, அப்படி இந்த மூடன் போகங்களை இரமணியமாகக் கருதி அநுபவித்துத் தாழ்வடைகின்றான்; மீண்டும் மகா துக்க மனுபவிக்கின்றான். எப்படி மான் அதினின்றும் தாவித் தாவிக் குதித்தபோதிலுங் கரைசேரமாட்டாது துக்கமடைகின்றதோ, அப்படி இச்சம்சார பதார்த்தங்களென்னும் படுகுழியில் வீழ்ந்த மனமென்னு மான் ஓடி ஓடி யலையினும் சுகமடைவது அதற்கெங்ஙனங் கூடும்?

முநீசுவரரே! ஜகத்பதார்த்தங்களில் என் புத்தி சஞ்சலமடைந்திருப்பதால் எதனுல் என் புத்தி பருவதத்தினைப் போன்று நிச்சலமுடையதாகுமோ அந்த உபாயத்தைச் சொல்லவேண்டும். எது பரமாநந்தபதத்தின்கண் நிலைத்திருப்பதாயும், நிர்ப்பயமானதாயும், நிராகாரமான பதமாயுமிருக்கின்றதோ, எதை யடைவதால் சம்சாரம் சிறிதும் இவனைப் பற்றுகின்றதில்லையோ, மீண்டும் அடையவேண்டுவதொன்று மில்லையோ அத்தன்மைய சம்பூர்ண ஜகத்தின் நாநாப்பிரகாரமான அமைப்புகளெல்லாம் அழிந்துபோதலையுடைய பதத்தை யடையும் உபாயத்தினை யெனக் கறிவியுங்கள்.

முநீசுவரரே! இத்தன்மைய பதத்தினின்றும் என் புத்தி சூநியமாயிருப்பதால் யான் சாந்தியடைந்தவனுக வில்லை. இச்சம்சாரமும் இச்சம்சார தர்மங்களும் மோகவடிவங்களாம். இதில் விழ்ந்தவன் ஒருபோதும் சாந்தியை யடையான். மேலும் ஜனகர்முதலியோர் சம்சாரத்திலிருந்தும் தாமரையிலையினீரைப் போன்று பற்றின்றி யிருந்தார்கள் என்பதும், சாந்தமுடையவர்களாயும் சம்சாரத்திற் பற்றின்றியவராயுமிருந்தார்கள் என்பதும் எப்படிப் பொருந்தும்? எப்படிச்சேற்றில் மூழ்கியவன் எனக்குச்சேற்றின்பரிசமில்லையென்று சொல்லுகின்றுனே, அப்படி இராஜ்ஜிய விக்ஷேபவடிவச் சேற்றிலிருந்தும் எப்படிச் சாந்தியுடையோராகவும் பற்றில்லாமலு மிருந்தார்கள்? அவர் அறிவு எத்தன்மைத்து? இதனைக் கிருபையோடு சொல்லவேண்டும். மேலும் தம்மைப்போன்ற சாதுஜனங்கள் விஷயங்களைப் புசிப்பவராகக் காணப்பட்டு உலகச்சேஷ்டைகளை யெல்லாம் செய்கின்றவர்களாயிருக்கவும் எங்ஙனம் அவர்கள் பற்றின்றியவராகிறுர்கள்? இதற்கு யுக்தியைத் தெரிவியுங்கள். தாங்களெப்படி ஜலத்திலுள்ள தாமரையினைப் போன்றிருக்கின்றீர்களோ அதைத் தெரிவிக்கவேண்டும். இந்தப் புத்தியோ மோகத்தினுல் மோகிக்கப்படுகின்றது. எப்படித் தடாகத்தில் யானை பிரவேசிக்கும்போது ஜலம் கலக்கமடைகின்றதோ அப்படி மோகத்தினுல் புத்தி மலினமாகின்றது. ஆதலால் எதனுல் புத்தி நிர்மலமாகுமோ அந்த உபாயத்தைச் சொல்லவேண்டும். இச்சந்தோஷத்தில் புத்தி ஸ்திரமாக நிலைக்கிறதில்லை எப்படி வேரோடு கோடரியால் வெட்டப்பட்ட விருக்ஷம் நிலைபெறுகிற தில்லையோ அப்படி வாசனையால் வெட்டப்பட்ட புத்தி நிலைபெறுகிறதில்லை.

முநீசுவரரே! சம்சாரவடிவ விஷூசிகையானது என்னைப் பற்றியிருக்கின்றது. இத் திருசியமானது எதனல் நாசமாகுமோ அவ்வுபாயத்தினை யறிவிக்கவேண்டும். இது எனக்கு மிகத் துக்கத்தை யுண்டாக்குகின்றது. எது உண்டாவதால் மோகரூப அந்தகாரம் கெடுமோ ஆத்மஞான முண்டாகுமோ அவ்வுபாயத்தை யறிவிக்கவேண்டும்.

முநீசுவரரே! எப்படிச் சந்திரன் மேகத்தால் மறைக்கப்படுகின்றானே அப்படிப் புத்தியின் மலினத்தன்மையால் யான் மறைக்கப்பட்டிருக்கின்றேன். ஆதலால் எதை யடைவதால் ஆவரணம் (மறைப்பு) கெடுமோ அவ்வுபாயத்தைத் தெரிவிக்கவேண்டும். எதை யடைவதால் மீண்டும் அடைய வேண்டிய தெதுவுமில்லையோ அவ்வாத்மாநந்தம் நித்தியமாயிருக்கின்றது. அதனல் சகலதுக்கங்களும் நசிக்கின்றது. அந்த உள்ளத்தைக் குளிரச்செய்யும் பதமெதுவோ அதை யடையு முபாயம் எனக் கறிவிக்கவேண்டும்.

முநீசுவரரே! எனக்கு ஆத்மஞான மென்னும் சந்திரனை யடையு மிச்சை யிருக்கின்றது. எதன் பிரகாசத்தால் புத்திவடிவத் தாமரை விரியுமோ எதனது அமிருதவடிவக் கிரணத்தினல் திருப்தியாகிய விருத்தி யுண்டாகுமோ அதைத் தெரிவிக்கவேண்டும்.

சர்வோத்தமமான ஆநந்தபதத்தில் நிரந்தரமாக நிலைபெறாது சூநியமடைந்த ஜீவர்கள் எப்படிக் காட்டிற் கிடக்கும் சரீரம் நாய்களால் தாழ்மை யடைகின்றனவோ அப்படி நானாவிதமான சங்கற்ப விகற்பங்களால் மிகவுந்தாழ்ந்த நிலையினை யடைகின்றனர். ஆனதால்,

முனீசுவரரே! இப்பொழுதெனக்கு வீட்டிலிருக்கவு மிச்சை யில்லை; வனத்திற்குச் செல்லுமிச்சையு மில்லை. எனக்கோ யெதையடைவதால் உள்ளத்திற் சாந்தி யுண்டாகுமோ அப்பதத்தி னிச்சை யிருக்கின்றது.

ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
சர்வாந்தப்பிரதிபாதனவர்ணன மென்னும்
இருபத்தைந்தாவது சர்க்கம் முடிந்தது.



## அநந்யத்தியாக தரிசனவர்ணனம்.

அவதாரிகை:—இச்சம்சாரத்தில் ஜீவித்தல் மழைக்காலத்துண்டாகும் மேகத்தை யொத்திருக்கின்றது என்று ஆநந்த பதப் பிராப்தியின் பொருட்டு உபாயத்தைக் கேட்கின்றார்

ஸ்ரீ ராமசந்திரர் சொல்லலாயினர்:— முநீசுவரரே! எவன் ஜீவித்திருக்க ஆசைவைக்கின்றானே அவன் மூடன். எப்படி உயர்ந்த விருக்ஷத்தின் இலைகளின் மீது ஜலத்துளிகள் தங்குகிற தில்லையோ அப்படி ஆயுளும் க்ஷணத்தில் நாசமாகத் தக்கதாம். எப்படி மழைக்காலத்தில் வயல்களில் சப்திக்கும் தவளையின் கண்டமானது சதா சஞ்சலத்தோடு கூடியதாய் அசைந்து கொண்டிருக்கின்றதோ அப்படி நிலையில்லாத ஆயுள் க்ஷணந்தோறும் சஞ்சலப் பட்டுக்கொண்டிருக்கின்றது. எப்படிச் சிவபெருமானது முடியில் சந்திரப்பிரபை வெகுலேசாகவும் திருஷ்டிக்குப் புலப்படாமலுமிருக்கின்றதோ அப்படியே இச்சரீரமு மிருக்கின்றது.

முநீசுவரரே! எவனுக் கிதிலாசை யிருக்கின்றதோ அவன் மூடன் இதுவோ காலனால் விழுங்கப்பட்டிருக்கின்றது. எப்படிப் பூனை எலியைப் பிடிக்கின்றதோ அப்படிச் சர்வ ஜீவவடிவ எலிகளைப் பூனைவடிவக் காலன் பிடிக்கின்றான். எப்படிப் பூனைவாய்ப்பட்ட எலி தப்பிப்போக முடியாதோ அப்படிக்காலன் எல்லோரையும் தன் வாயினின்றும் தப்ப விடாது ரக்ஷித்துக்கொள்ளுகின்றான்; அவன் எவராலும் அறிதற்கரியவனும்,

முநீசுவரரே! எப்பொழுது வாசனைவடிவ பூர்வவாயு வியாபிக்கின்றதோ அப்பொழுது மோகவடிவ மேகம் கர்ஜ ஜிக்கின்றது லோபமென்னும் மயில் சந்தோஷித்தாடு கின்றது. எப்பொழுது அஞ்ஞான மென்னும் மழை பொழிகின்றதோ அப்பொழுது துக்கவடிவக் கொடிகள் வளருகின்றன. துராசையென்னும் மின்னல்கள் கணந் தோறும் தோன்றித் தோன்றி நஷ்டமாகின்றன. மேலும் ஆசை யென்னும்வலையில் அகப்பட்டு ஜீவரூப பக்ஷிகள் மிகத் துன்புறுகின்றன.சாந்தி யடைகிறதில்லை.

முநீசுவரரே! இந்த ஜகத்தென்னும் பெரும்வியாதி யுண்டாயிருக்கின்றது. இதைத் தொலைப்பதற்கு மருந்து யாது? எது அடைதற்குத் தகுதியுள்ளதோ, எதனல் பிரம (மயக்க)வடிவ ரோகம் நிவர்த்தியாகுமோ, அந்த உபா யத்தைத் தெரிவிக்க வேண்டும். இந்த ஜகத்து மூடர்களுக்கு இரமணீயமாகத் தோற்றுகிறது. ஞானிகளுக்கு இரமணீய மாகத் தோற்றும் பதார்த்தங்கள் இப் பிருதிவியிலும், ஆகாயத்திலும், தேவலோகத்திலும், பாதாளத்திலும் எங்குமே யில்லை. ஞானிகளுக்கு எல்லாம் மயக்கவடி வாய்த் தோற்றுகின்றது. அஞ்ஞானியோ ஜகத்தில் ஆசை யினைச் செய்கின்றான்.

முநீசுவரரே! எப்படிச் சந்திரன் தன்னிடத்துக் களங்க முண்டானபோது சோபையில்லாததாகி களங்கம் நீங்கியபோது அழகுடையதாகின்றதோ அப்படி எனது மனமென்னும் சந்திரனிடத்துக் காமமென்னுங் கறைபட்டி (களங்கமி)ருக்கின்றது. அதனல் அது பிரகாசிக்கிறதில்லை. ஆனதால் இக்களங்கமானது எதனல் நீங்குமோ அவ்வு பாயத்தைத் தெரிவிக்க வேண்டும்.

முநீசுவரரே! இச்சித்தம் மிகச் சஞ்சலமானது. ஒருபோதும் ஸ்திரமாகிறதில்லை. எப்படி அக்கினியிற் பட்ட இரசம் பறந்து போகின்றதோ அப்படிச் சித்தமும் நிலைக்காது சதா விஷயங்களின்மீது சென்று பற்றுகின்றது. ஆதலால் சித்தம் எதனால் ஸ்திரமாகுமோ அவ் வுபாயத்தைத் தெரிவியும். மேலும் சம்சாரமென்னும் வனத்தில் போகவடிவ சர்ப்பமிருக்கின்றது. அது ஜீவர்களைத் தீண்டிக் கொண்டிருக்கிறது. அதனின்றும் பிழைக்கும் உபாயத்தினைத் தெரிவியும். மேலும் கிரியைகளெல்லாம்இராகத்துவேஷங்களோடு கூடியனவேயாம். ஆதலின் இராகத்துவேஷாதிகள் பிரவேசியா வண்ணம் ஓர் உபாயத்தை எனக்குத் தெரிவிக்க வேண்டும். சமுத்திரத்திருந்தும் ஜலத்தின் பரிசமுண்டாகாதவதனைப் போன்று இச்சம்சாரத் திருப்பவனுக்கு ஆசைவடிவ ஜலத்தின் பரிசமுண்டாகாத வழியைச் சொல்லும். எதனால் இவனுக்கு இராகத்துவேஷங்களின் பரிச முண்டாகாதோ மனதின்கண்ணுள்ள மனனவடிவ சத்தை எந்த யுக்தியினால் தூரமாகுமோ வேறெதனாலும் நீங்காதோ அந்த நிவிருத்தியின் பொருட்டாகும் யுக்தியினை எனக்குச் சொல்ல வேண்டும். முன்னெவர்களுக் கெந்த விதமாக இது நிவர்த்தியானதென்பதையும் தெரிவிக்கவேண்டும். எவற்றால் தமதுள்ளத்தில் சீதளத்தன்மை ஏற்பட்டதோ அதையும் தெரிவிக்க வேண்டும்.

முநீசுவரரே ! தாங்களெப்படி அறிந்திருக்கின்றீர்களோ அதைத்தெரிவிக்கவேண்டும். தமது முன்னிலையில் அந்த யுக்தியை நானடையாவிடின் நான் ஒன்றுமே அறியக் கூடாதவனாவேன் எனினும், யான் எல்லாவற்றினையுந் துறந்து அகங்கார மின்றியவனா யிருப்பேன். எதுவரையில் அந்த யுக்தி எனக்குக் கிட்டவில்லையோ அதுவரையில் யான் உணவுங் கொள்ளேன் நீரும் அருந்தேன்; வஸ்திரமுந்தரியேன்; தானம், சயனம்; ஸ்நாநாதிக் கிரியைகளேயும் செய்யேன். சம்பத்துக் காரியங்களேயும் கண்டுகளியேன். ஆபத்துக்காரியங்களேயும் கவனியேன். அகங்கார மின்றியவனாவேன். இது என்தேகமல்ல ; நான் தேகியல்ல ; யாவைபினேயும் விட்டு உட்கார்ந்திருப்பேன். காகிதத்தி லெழுதப்பட்ட மூர்த்திச் சித்திரித்தவண்ணமே யிருப்பதுபோல நானுமிருப்பேன். வெளிப்படையான தோற்றமாத்திரமுடையவனா யிருப்பேன். எனது சுவாசம் போக்குவரத் துடைய தாயிருந்து தானே நசித்துப்போகும். எப்படி எண்ணெயின்றிய தீபம் அணைந்துபோகிறதோ அப்படி அனர்த்த மின்றித் தேகம் நிர்வாணமாகும். அப்பொழுது மகா சாந்தியடையப்படுவதாகும்.

வால்மீகர் சொல்லலாயினர்:—பரத்வாஜா ! மகாத்மாவும் விசாரசிலரும் உதாரசித்தரும், நிர்மலமும் குளிர்ந்த கிரணமுமுடைய சந்திரனைப் போன்ற அதிக சுந்தரருமான ஸ்ரீ ராமசந்திரர் இவ்வாறு தெரிவித்துச் சும்மாவிருந்தார். எப்படிப் பெருத்த மேகத்தைக் கண்டு மயில் சப்தித்துச் (கேகாரவம்செய்து) சும்மாவிருக்குமோ அப்படி யிருந்தார்.

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினு லருள்ப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனாற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
அநங்யத்தியாகதரிசன வர்ணன மென்னும்
இருபத்தாறுவது சர்க்கம் முடிந்தது.



## சித்தசமாஜவர்ணனம்.

அவதாரிகை :—ஸ்ரீ ராமசந்திரர் சொல்லும் வார்த்தைகளைக் கவனிக்கும் தேவர்கள் முனிவர்கள் மனிதர்கள் என்போர்விஸ்மயமடை(மெய்மறத்)தலும், ஆகாயத்தினின்று மலர் மாரி பொழிதலும் இதிற் கூறப்படுகின்றன.

வால்மீகர் சொல்லலாயினர்:—புத்திரனே ! எப்பொழுது இரகுவம்ச மென்னும் ஆகாயத்திலுதித்த ஸ்ரீ ராமசந்திர ரென்னும் சந்திரன் இவ்வாறு தெரிவித்தாரோ அப்பொழுது எல்லோரும் மௌனமடைந்தார்கள். சகலருடைய பார்வைகளும் அசைவற்று நின்றுவிட்டன. மயிர்க்கூச்சலுடன் இராமசந்திரரதுவாக்கியத்தைச்சகலரும் கேழ்க்கின்றார்கள் ! சபையிலிருந்த சகலரும் நிர்வாசனைத் (வாசனையின்றிய)தன்மையென்னும் அமிருதக்கடலி லாழ்ந்தார்கள். சபையிலிருந்த வசிஷ்டர், வாமதேவர், விசுவாமித்திரர் முதலான முனீசுவரர்களும், திருஷ்டி ஜயந்தன் முதலான மந்திரிகளும், தசரதராஜரும், அவரைச் சூழ்ந்துள்ள மண்டலேசுவரர்களும், தூதர்களும், வேலைக்காரர்களும், தாயாகிய கௌசலை முதலானவர்களும் மௌனமுற்றிருந்தார்கள். அதாவது அசைவற்றிருந்தார்கள். கூண்டிலடைபட்டிருந்த கிள்ளைகளும் மௌனமாயின . சோலையிலுள்ள பசு முதலியனவும் மௌனமாயின . அவை இரைகளையும் புல்லுகளையும் கொள்ளவில்லை. கூண்டிலுள்ள மற்றப் பக்ஷிகளும் இதைக்கேட்டு மௌனமடைந்தன. ஆகா

யத்திற் சமீபமாய்ப் பறக்கும் பக்ஷிகளும் அசைவற்றிருந்தன. ஆகாயத்தில் தேவர், சித்தர், கந்தருவர், வித்தியாதரர், கின்னரர்களும் இதனைக் கேட்டு மலர்மாரி சொரிந்து தன்னியர் தன்னியரென்று சப்தித்தார்கள். புஷ்பமாரியானது இமயமலையில் பனி சொரிவதுபோலும், பாற்கடலில் அலைகள் மோதுவதுபோலும், முத்துமாலைகள் வருஷித்தது போலும், வெண்ணைத்திரளை வாரிஇரைத்தது போலும் மிக அற்புதமாக அரைநாழிகைவரையில் சொரிந்தது. அதனால் மிகுந்த பரிமளமுண்டானது. அப்பொழுது புஷ்பங்களில் வண்டுகள் வந்துசஞ்சரித்தன. சகலரும் பெரும் வியப்படைந்து நமோ நம: என்று சப்தித்தார்கள்.

தேவர்கள் சொல்லலாயினர்:—கமலக்கண்ணரே ! இரகுவம்ச மென்னும் ஆகாயத்திற்குச் சந்திரனைப் போன்றுள்ள தாம் தன்னியர் ! நீர் மிக மேன்மையுள்ள ஸ்தானத்தைப் பார்த்திருக்கின்றீர். பலவிதமான வசனங்களையுங் கேட்டிருக்கின்றீர். ஏனெனின் இப்பொழுது தாம் தெரிவித்த வசனத்தைப்போல ஒருபோதும் நாங்கள் கேட்டதில்லை. இவ்வார்த்தையைக் கேட்டதால் எமக்கு எந்தத் தெய்வீகத்தன்மையின் அபிமான மிருந்ததோ அது முழுவதும் நிவிருத்தியாயிற்று. தமது அமிருதவடிவ வசனத்தைக் கேட்டு எங்கள் புத்தி பூர்ணமாகிவிட்டது.

இராமசந்திரரே ! தம்மால் எந்த வசனங்கள் இங்கு உரைக்கப்பட்டனவோ, அத்தகைய வசனங்களை யுரைப்பதற்குப் பிரகஸ்பதியும் சமர்த்தரல்ல ! தமது வார்த்தைப் பரமானந்த முண்டாக்குவதாயிருப்பதால், தாம் தன்னியர்!

ஸ்ரீ வால்மீகமஹரிஷியினு லருளப்பெற்ற

ஸ்ரீ யோகவாசிட்ட மகாராமாயணத்தில்

தேவதூதனுற் சொல்லப்படும்

மோக்ஷோபாயமாகிய

வைராக்கியப்பிரகரணத்தின்

சித்தசமாஜ வர்ணன மென்னும்

இருபத்தேழாவது சர்க்கம் முடிந்தது.



## முநிசமாஜவர்ணனம்.

அவதாரிகை:—சித்தாதிகள் அச்சபைக்கு வருதலும் அவரவர் களும் தங்கள் தங்கள் தகுதிக்குத்தக்கபடி ஸ்ரீராமசந்திரனைப் புகழ்ந்துரைத்தலும் இதிற் கூறப்படுகின்றது.

வால்மீகர் சொல்லலாயினர்:—பரத்வாஜா! சித்தர்கள் இத்தன்மைய வசனங்களைத் தெரிவித்துத் தங்களுக்குள் ஆலோசித்ததாவது:இந்த இரகுவம்சஸ்தர்களது குலமானது பூஜிக்குந் தகுதியினையுடையது. இதில் உதித்த ஸ்ரீராம சந்திரரால் மிக்க உதாரமான வசனங்கள் முநீசுவரர்களது முன்னிலையி லுரைக்கப்பட்டிருக்கின்றன. இப்பொழுது முநீசுவரர்களும் தக்க விடையளிப்பார்கள். அதையும் கேட்கவேண்டும் என்று இவ்வாறு தீர்மானித்து எப்படிப் புஷ்பங்களைநோக்கி வண்டுகள் வருமோ அப்படி வியாசர், நாரதர், புலகர், புலஸ்தியர் முதலான சாதுக்கள்அச்சபையின்கண்வர •அதுகண்டு அங்கிருந்த. வசிஷ்டரும் விசுவாமித்திராதி முனிவர்களும்தங்கள் ஆசனத் தினின்றும் எழுந்து அவர்களைப் பூசித்தார்கள். முதலில் தசரதர் பூசித்தார். பிறகு மற்றெல்லோரும் பலவகையாகப்பூசித்தார்கள். பின்புஅவரவர்களும் தங்கள் தங்களுக்குரிய ஆசனங்களிலமர்ந்தார்கள்.அவர்களுள் நாரதர் மிக்க வழகிய மூர்த்திகரத்தோடு கையில் வீணையைத் தாங்கியிருந்தார். ஜலநிரம்பிய கமண்டலதாரியும் கருநிறமுள்ளவருமான வியாஸபகவான் நடுவிலிருந்தார். பலவர்ணமுள்ள வஸ்திரங்

களைத் தரித்தவர்களாய் நக்ஷத்திரமண்டலத்தில் கருமேகம் வந்ததுபோல துர்வாஸரும், வாமதேவரும், புலகரும், புலஸ்தியரும், பிரகஸ்பதியின் தந்தையாகிய அங்கிரஸனும், பிருகுவு மிருந்தார்கள். யானு மங்கிருந்தேன். பிரஹ்மரிஷி, இராஜரிஷி, தேவரிஷி, தேவர்கள், முநிவர்கள்முதலானஎல்லோரும் சபையில் வந்திருந்தார்கள். சிலர் நீண்ட ஜடையுள்ளவராகவும், சிலர் மகுடம்புனைந்தவராகவும், சிலர் ருத்ராக்ஷமாலையணிந்தவராகவும், சிலர் முத்துமாலைக ளணிந்தவராகவும், சிலர் இரத்தினமாலைகளைத் தரித்தவராகவு மிருந்தார்கள். சிலர் கையில் கமண்டலந் தாங்கியவராகவும், மான்தோல் தரித்தவராகவும், சிலர் அழகிய வஸ்திரந் தரித்தவராகவும், சிலர் அரையிற் கௌபீன முடையவராகவும், சிலர் அரையில் தங்கச்சங்கிலி யுள்ளவராகவும் இவ்விதம் மகாதபஸ்விகளாயுள்ளவர்க ளெல்லோரும்அங்கு வந்தமர்ந்திருந்தார்கள். அவர்களிற் சிலர் இராஜஸ சுபாவமுள்ளவராகவும், சிலர் சாத்துவீக சுபாவமுள்ளவராகவு மிருந்தார்கள். வேதவித்துக்களாகிய பெரியோர்களெல்லோரும் வந்திருந்தார்கள். சிலர்சூரியனைப் போன்றும் சிலர் சந்திரனைப் போன்றும் சிலர் நக்ஷத்திரங்களைப் போன்றும் சிலர் இரத்தினங்களைப் போன்றும் காந்தியுள்ளவராயும் புருஷார்த்தத்திற் பிரயத்தன முள்ளவராயும் தங்கள் தங்களுக்குரிய விடங்களில் அமர்ந்திருந்தார்கள். மோகன மூர்த்தியாகிய ஸ்ரீ ராமசந்திரரோ தீனசுபாவமுள்ளவராய்க் குவித்த கரத்தினேடு சபையி லமர்ந்திருந்தார். அவரைச் சகலரும் பூசித்தார்கள், வாக்கினல் இராமசந்திரரே! நீர் தன்னிய ரென்றும் சொன்னர்கள். அப்பொழுது நாரதர் யாவரு மறியச் சொன்னதாவது:

இராமசந்திரரே! நீர் மேலான விவேக வைராக்கிய வாக்கியங்களைத் தெரிவித்தீர். அது யாவருக்கும்பிரீதியை யுண்டுபண்ணினது. சகலருக்கும் க்ஷேமத்தைத் தருவதாயிருக்கின்றது. மேலான ஞானத்திற்குக் காரணமாயிருக்கின்றது.

இராமசந்திரரே! நீர் மிகப்புத்திமானாகவும், உதாராத்மாவாகவும் காணப்படுகின்றீர். தம்மால் மகாவாக்கியார்த்தம் வெளியாகப்போகின்றது. இத்தன்மைய பரிசுத்த பாத்திரம் சாதுக்களிலும் அல்லது அநேக தபஸ்விகளிலும் ஒருவர் கிடைப்ப தருமை. உலகத்தில் எவ்வளவு மனிதர்களுண்டோ அவர்க ளெல்லோரும் பசுவை யொத்திருக்கின்றார்கள். ஏனெனின் எவனுக்குச் சம்சாரசமுத்திரத்தைக் கடக்கும் இச்சை யிருக்கின்றதோ, புருஷார்த்தத்தில் எத்தன மிருக்கின்றதோ அவனே மனிதனெனப்படுகின்றான். எப்படி விருக்ஷங்கள் பல விருப்பினும் அவ்வெல்லாவற்றினும் சந்தனவிருக்ஷம் வேறாகுமோ அப்படிச் சரீரதாரி (சரீரங்களைத் தாங்கித்திரிபவர்)கள் அநேக ரிருப்பினும் அவர்களில் இத்தன்மையர் வேறாவர். யாவரும் எலும்பு மாமிசம், உதிரம், நரம்புகளால் பிரதிமையினைப்போல அமைக்கப்பட்டவர்களாய் உட்காருபவராயும் திரிபவராயுமிருக்கின்றார்கள். சூத்திரப்பாவை யெப்படியோ அப்படி அஞ்ஞானிகள் திரிகிறார்கள். எப்படி யானைகள் பலவிருப்பினும் மஸ்தகத்தில் முத்தினையுடைய யானை வேறாமோ அப்படிப் புருஷர்கள் பல ரிருப்பினும் புருஷார்த்த யத்தனமுடையவர் வேறேயாவர். விருக்ஷங்கள் பலவற்றுள்ளும் இலவங்க விருக்ஷம் வேறாவதுபோல மனிதர்களுள் இத்

தன்மையர் எங்கேனும் ஒருவரே யுளர். இத்தன்மையருக்குச் சொற்ப அர்த்தமே யுபதேசிக்கப்படினும் அது அதிகமாகின்றது. எப்படி எண்ணெயின் ஓர் சிறுதுளி ஜலத்திலிடப்படுவதால் அது விஸ்தாரமாகின்றதோ அப்படிச் சொற்ப உபதேசமும் தம்மிடம் விஸ்தாரமாகும். ஓ, குமாரனே! விவேகவடிவப் பழங்களோடுகூடிய இந்தப்புத்திவடிவ* சரலதையானது தம்மைத்தவிர எவருக்கு விசாரம் வைராக்கியமென்னும் புஷ்பங்களால் விருத்தியுடையதாகும்? ஒருவருக்குமுண்டாகாது. தீபமெப்படிப் பிரகாசமுடையதோ அப்படித் தமது புத்தியும் பிரகாச விசேஷமுடையது. நீர் ஞானத்திற்குப் பரமபாத்திரர். சொல்லுதல்மாத்திரத்தாலேயே தமக்குச் சீக்கிரத்தில் ஞானமுண்டாகும். நாங்களெல்லோரு மிங்கிருக்கின்றோம். எங்கள் முன்னிலையில் உமக்கு ஞானம் உதயமாகாதாயின் அப்பொழுது இங்குள்ள நாங்களெல்லோரும் மூடர்களென்றே அறிந்து கொள்ளும்.

ஸ்ரீ வால்மீகமகரிஷியினு லருளப்பெற்ற
ஸ்ரீ யோகவாசிட்டமகாராமாயணத்தில்
தேவதூதனுற் சொல்லப்படும்
மோக்ஷோபாயமாகிய
வைராக்கியப்பிரகரணத்தின்
முநிசமாஜ வர்ணன மென்னும்
இருபத்தியெட்டாவது சர்க்கம் முடிந்தது.



ஸ்ரீ பிருகத்யோகவாசிட்ட மகாராமாயணத்தின் முதலாவது
வைராக்கியப் பிரகரணம் முற்றிற்று

---

* சூக்ஷ்ம பதார்த்தங்களையும் பேதிப்பதால் இந்தப் புத்தியை சரலதையின் வடிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது

